ஸ்ரீலக்ஷ்மீஹயவதன பரப்பிரம்மணேநம:.

ஸ்ரீ

# பிருகந்நாரதீயபுராணம்

(பூர்வபாகம்.)

---

இஃது,

வித்துவான்

ஸ்ரீமத். உ. வே. வேலாமூர் வகுளாபரணம்

சோமயாஜி - இராகவாசாரியரால்

ஸம்ஸ்கிருதத்தினின்று மொழிபெயர்ப்பித்து

களக்காட்டூர்

தூப்புல் - ஸ்ரீநிவாஸராகவாசாரியரால்

தெளிவியதமிழில் வசனரூபமாக எழுதப்பட்டு

சென்னை:

வெ. நா. ஜூபிலி அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.

---

கலியுகாதி ௪௯௯௪-வதான விஜய ௵.

1893.





இதன் விலை அணா 12.

ஸ்ரீலக்ஷ்மீஹயவதன பரப்பிரம்மணே நம

# நான்முகம்.

அகில மங்கள குணஸ்வரூபனான சர்வேசுவரன், "மாயவன் றன்னை வணங்கவைத்த கரணமிவை" என்கிற பெரியாரருளிச்செயல்படி தனது சரணகமல சமாச்ரயணத்துக்கு உறுப்பாகத் தான் தந்தருளிய கரசரணாதி அவயவ சகிதமான சரீரத்தைக் கொண்டு அப்படிச் செய்யாமல் சப்தாதி விஷயங்களிலேயே மூழ்கிக் கருமத்தால் மேன்மேலும் பிறவிகளையடையும் ஜீவாத்துமாக்கள் நல்வழிகண்டு நடக்கைக்கு வேதமென்னும் சாஸ்திரத்தைத் தந்தருளி அதுவும் மறையாகையால் அதாவது தனது பொருளைத் தெள்ளென விளக்காது உள்ளே மறைத்துக்கொண்டிருப்பதால் வியாசாதிகளான பரமரிஷிகளுக்குள் அந்தர்யாமியாயிருந்து வேதார்த்தங்களைத் தெளிவாயறிவிக்கும் ஸ்மிருதி இதிஹாஸ புராணங்களைப் பிரவர்த்திப்பித்தருளினான்.

## இவற்றுள் புராணங்கள்

సర్గశ్చ ప్రతిసర్గశ్చ వంశో మన్వంతరాణి చ ।
వంశానుచరితం చేతి లక్షణానాంతు పంచకం ॥

சர்க்கச்ச பிரதிசர்க்கச்ச வம்சமன்வந்தராணிச
வம்சானுசரிதம்சேதி லக்ஷணானாந்துபஞ்சகம்.

என்றபடி சிருஷ்டிசம்ஹாரம் வம்சங்கள் மனுவந்தரங்கள் வம்சங்களின் சரித்திரங்கள் என்னும் பஞ்சலக்ஷணங்களையுடையனவாம். இவை அப்புராணங்களின் பொதுவிஷயமாயினும் ஒவ்வொருபுராணத்துக்கும் பிரத்தியேகமானவிஷயமுண்டு. இவ்விஷயங்களைப்பற்றி தொகுத்தும் விரித்தும் செய்யப்பட்டிருக்கும். மானிடர்களுக்கு நற்காரியங்களில் மனம் பற்றும்பொருட்டு சிலவிஷயங்களை விசேஷப்படுத்திச் சொல்லியுமிருக்கும். இதற்கு அர்த்தவாதமென்று பெயராகும். இவ்விஷயத்தை நன்குணராதார் அவற்றைப் பொய்யெனத் திகைப்பர். புராணமென்பது மகாசாஸ்திரமாதலால் பெரியோரிடத்துக் கேட்டறிவதே தக்கதாகும்.

புராணங்கள் பதினெட்டும் உபபுராணங்கள் பதினெட்டுமே உள்ளன.

இவற்றுள் இது பிருகந்நாரதீயமென்னும் உபபுராணத்தின் பூர்வபாகமாகும். இப்பிருகந்நாரதீயம் முதலிற்குறித்த புராணம் பதினெட்டில் ஒன்றென்று கூறுவதுமுண்டு. இதற்கு நாரதீயமென மற்றொருபெயருளது. இப்பாகத்தில் நாரதபகவான் ஸநத்குமாரயோகிக்கு நிகிலவேதாந்த தாத்பரிய பூமியான சர்வேசுவரனிடத்துச் செய்யவேண்டிய பக்திமார்க்கத்தை செவ்வே யுரைப்பான்றொடங்கி பிரபஞ்சவுற்பத்தியும், அதிஅற்புதமான மார்க்கண்டேயசரிதையும், கங்காமாகாத்மியமும், தருமப்பிரவர்த்தகர்களான சகரபகீரதாதி மகாராஜாக்களுடைய சரித்திரங்களும், பகவானுடைய திரிவிக்கிரமாவதார வைபவமுமாகியவிவைகளைப் பெருமபான்மையும் உணர்த்துகிறார்.

இது ஸம்ஸ்கிருதபாஷையிலிருப்பதால் அப்பாஷை கற்றோர்க்கேயன்றி ஏனையோர்க்குப் பயன்படாமை நோக்கி யாவரும் எளிதில் அறியுமவண்ணம் வித்துவான் ஸ்ரீமத்-உபய-வே-வேலாமூர் வருளாபரணம் ஸோமயாஜி இராகவாசாரியரால் மொழிபெயர்ப்பித்து, தெள்ளியநடையில் வசனரூபமாக மிகவும் சுருக்கமின்றி எழுதி பிரசுரம்செய்தனன். குற்றம்நோக்காது குணம்நோக்குவது சான்றோர் இயற்கையாதலால், இதில் சொற்குற்றமுதலியவுள வேல் விஷயகௌரவத்தால் அவைகளைப் புலவர் பாராட்டாது திருத்திக்கொள்வார்களென்று நம்புகிறேன்.

மஞ்சக்குப்பம்,
விஜய௵
ஆனி௴

இங்ஙனம்,
க. நா. ஸ்ரீநி.

# சிறப்புப்பாயிரம்

---

திருவனந்தபுரத்து மஹாராஜா கலீஜ்

பிரதம திரவிட பண்டிதரான

ம-ள ள-ஸ்ரீ

வ. கணபதிப்பிள்ளையவர்கள் இயற்றியது.

பொனனாரும் புண்டரிகப் பூந்தவிசி லுறைபவனைப புவன நல்கத்
தன்னாரு மருளதனை லளித்தபரா பரமுதலவனை சலசைகாந்தனை
மின்னாரு மைமபடைகளை வித்தகனை ராயாணனமுன் வியாதனாகிக்
கொன்னாரு மறைப்பொருளைப் புராணமெனப பலவகையாற் கூறினானே ()

புராணமிவை யீரொன்பான் றெனுவகையன வீங்கிவற்றினு ளீரைந்து போந்த
சராசரமு மகிலபுவ னகருழுவுந் தனதருளாஞ் சத்தி தனாலல
விராவுமுறை யளித்தபரா பரமுதலவன விடமபருகி விணணோர்க் காத்த
தராதரகோ தணடகரன றனமகிமை யுரைத்திமொற் றகைமை யோர்க்கே.()

புண்டரிகா சனன்மகிமை யிரணடுரைக்கு மொவ்வொன்று புகலு மங்கி
விணடகம லினிகாந்த னென்றிவாத மேனமைதனை விணணினோக்கு
கொணடனிறப பகவனது மகிமையுரைத திடோனகு குறிர்கொள் வோர்கள்
அண்டாமுனி வரர்பரச வைகுண்ட பதமருவி யமரவரனறே. (௩)

மூலமே யென்றரற்று மதாவளத்தைப் புரந்திடுவான் முன்னி முன்னா
ளீலமே கம்போல நின்றவருட் பரனமகிமை நிகழ்த்து நாலு
சீலமார் புராணத்து ளாரதீ யமமென்னச செப்பு காதை
கோலமார வடமொழிநின றின்மொழியார் தெனமொழியிற் குலவு மாறே. ()

கதநியரு பமதாக வியற்றியுல கோரகளிததுக் கற்று மேலாஞ்
சிததியடைந் தெம்பெருமான் றிருவடிததா மரையுறுவான் செய்ய நெஞ்சில்
உத்திசெழு வியந்திரத்தி லங்கிதஞசெய் வித்தனனு லுலகோர் போற்றுஞ்
சததியமா ரந்தணர்தங் குலதததுதித்தோன் யசுர்வேதத தனிச்சாா புள்ளோன்.

ஆரணியென் றூன்கறமும் புரிந்துறையுங் காஞ்சிநகர்க் கணித்ததான
சீரணியாம் பானதியின் றென்கூலந் திகழ்ந்தோங்கிச் செம்மை சேருப
பேரணிபுங கலவகல சகலதல வலமலக பேர வோரக்
காரணியென றுமாதருமா கிடசமுககக களக்காடாங் கவினூருள்ளான். (௬)

காபபுலெனு நாகரிக காலசர வரலமென நலலோர் கூறுந்
தாப்புலெனுங் குடிபபிறந்தான றய்யதிரி சூததிரமாா துகளுர் மார்பன்
சேப்புலசே ஷாத்திரியாம் வரமறையோ னருள்புதல்வன் றேசு மிக்கோன

பாபபொலிவிஶ்வாமித்ர கோத்திரத்தோன் கோத்திரதோன் பண்பு மிக்
கோன. (எ)

சாகரசங் கடலிகட தகடலிய லமைபகட சால சில
வேகரவங் கரவகட வேதாந்த தேசிகனும் வியன்பே ரோனை
ஆகரவங் காகுலறக் கதிபதியாப் பெற்றவனல லறிவின் மிகசோா
சேகரமா மணிசிறிநி வாசரா கவனென்னுங திகழ்பே ரோனே. (அ)

---

திருப்பாதிரிப்புலியூர் இயற்றமிழாசிரியர்

ம - ா - ா - ஸ்ரீ

## சிவசிதம்பரமுதலியார் அவர்கள் இயற்றியது

சீரோங்கு மொருபிரகந் நார தீயச்
சிறகுமவட மொழியதனைத் தென்சொ லாலே
நீரோங்கு மறிஞரெலா மௌிதிற றோந்து
நிலைமைகொள வசனமதா நிலவச் செய்தான்
பாரோங்கு களககாட் டூரசாவே ததகின்
பகாகாதி மரபினிலவே தாநத வாசான்
காரோங்கு வழியுதித்தோன சிநி வாச
ராகவபபேர் படைத்தவின்சொ னலத்தோன் றானே.

---

ம - ா - ா - ஸ்ரீ

பரங்கிப்பேட்டை

## லட்சுமணப்பிள்ளையவர்கள் இயற்றியது.

சீருறுமிக்க குடிதழீஇச் செல்வம் சிறந்து
பல்வளங் களு நிறைந்த
பாருறுங் களக்காட்டூ ரெசுர் வேத
பாரகா குலத்திலுற் பவித்தோன்
வாருறு மலங்கற் பசுநதுழா யமலன்
மலாப்பத மலாமனத தடத்தோன
ஏருறுஞ் சிநி வாசரா கவனென
நியம்புசத் துவகுணத துரவோன். (க)

பாதுகை மிசையோ ராயிரந் தெய்வப
பாசுரம் விளைந்து தோன்றியதும்
சாதுகை போல வரு பிரபோத
சந்திரோ தயகனி மழுங்க
ஓதுகைக் கினிய சங்கற்ப சூரி
யோதய முதித்தது நோக்கி
மீதுகை முகிழ்த்துப் பூசுரா தொழும்
வேதாந்த தேசிகன்வழித் தோன்றல். (உ)

ஒன்பதிற் றிரட்டி யுப புராணத்து
னுவண கேதனன் புகழ் விரித்து
மன்பதைக் கெல்லாந் துன்பினை யொழித்து
மருவுமீ ளாநெறி யருளும்
இனபமார் பிரகந் நார தீயத்தை
யின்றமிழ் வசனமா வெளியில்
அன்பினி னளிததா னளித்தவற் கொருகைம்
மாறு நாமியற்று மாறெவனே.

---

திருப்பாதிரிப்புலியூர் மிஷன் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர்
ஸ்ரீமத் உபய - வே - மேட்டுப்பாளையம்
நடாதூர் - ஸ்ரீநிவாஸ வரதாசாரியர் இயற்றியது.

தூபபுலென றெவரும் புகழ்தரு வளமாா
தொலபதி யுதிதது வைணவத்தைக்
காப்புறு வேலியாய தேசிகாதங் கருதரு
மாபி லுற்பவித தோன
மாயபுகழச் சீநிவாச ராகவ நனமகிமை
சோ பிரக நாரதியம
தூயபொலி தமிழில வசநமா யெவரும்
சுகமுறச சொறறனன் மாதோ.

---

ம - ா - ா - ஸ்ரீ தஞசைமாநகரம்
கி. சுப்பராயலுநாயடு அவர்கள்
இயற்றியது

ஆரியத் தவிர்பிரக நாரதீய மாம்புராண
வோரியல மணியளித்தான் உறுதமிழால்—பாரதறகு
சீநிவாச ராகவப்போ சோதூபபுல் களக்காட்டோ
ஆசிவர் தேசிகனு ரூன்

---

கூடலூர் ரேஞ்சு
பள்ளிககூடங்களின் சப் அஸிஸ்டண்டு இன்ஸ்பெக்டராகிய
ம - ா - ா - ஸ்ரீ
பு. தெய்வசிகாமணிமுதலியாரவர்கள் இயற்றியது.

விண்ணவரு மண்ணவரு மேவும வியாசமுனி
பணணோ வடமொழியிற பனனியநூல—எணணுறும்
பிருகநார தீயம் பலரும படித்துப
பரகதி நணணப பரிநது. (க)

பத்திநெறி முத்திநெறி பாலிக்கும் பாகமதாய்
கத்திய ரூபமாய்க் கண்டெனவே—தித்திக்கும்
செந்தமிழாற் செபபினன் சீநிவாச ராகவபபேர்
அந்தமிகு நூலதனை யாய்ந்து (உ)

---

பராசரஸ்மிருதியை மாதவிய வியாக்கியானத்துடன்
தமிழில் மொழிபெயர்த்த
ஸ்ரீமத் - உ - வே - களக்காட்டூர்—கருணை
வரதாச்சாரியார் இயற்றியது.

பொன்னோடை யாம்பன்முனம் போயருள்செய் செம்மற்
பொற்சரிதம விரிகருணா ரதியமெனும் புராணம்
என்னோக ளுமமெளிதி லுணர்ந்திடுவான றமிழி
லெழிலமையக் கத்தியமா யிசைதநிட்டா னியங்கப்
பின்னோடு முன்னறியா மதங்களல மந்து
பெயர்ந்திடவந் தருள்தேசி கன்மரபில் வந்தோன்
தென்னோடு விளங்குகளக் காட்டூரின் மேய
சீநிவா சாரகவனெ னுந்தெள்ளி யோனே.

---

சிதம்பரம ராசானியமடம
ஸ்ரீமத் இராமலிங்கசுவாமிகளவர்கள் மாணாக்கர்களில் ஒருவராகிய
ம - ா - ா - ஸ்ரீ
க, வ. திருவேங்கடநாயடவர்கள் இயற்றியது.

பொற்றூது பொதிந்த நற்றளக் கமல
மலாமேன மங்கை வதிவுறூஉந் திருமறு
நிறத்தோன் சீரதநி கிலவுமீ ரிரணடெனு
மாபுரா ணஙகளுண மன்னிய நார
தீய மென்னும் போயசீப புராணஞ்
சொற்றெருடு மினிமை சொரிந்திடத தென்மொழி
தன்னிற் கத்திய மாகத் தந்தனன்
புன்மதக் களிறு புலங்கெடந் தொளிக்க
விந்நிலத் தவமா யெழுந்தருள் தேசிகச்
சிஙக மரபிற நிகழ்ந்திட வுதித்தோன்
மூகமதற் குடைநத முழுமதி யீதெனக்
குறிபொறித தாங்குக் கோவிலுக கிட்டிடு
மஞ்சனந் தீட்டி மஞ்சினி னிலவென
விடுத்திடு கல்லார் விளங்கிடு மேனிலை
மாட நிரையொளிர் பாடமை களக்காட்
டூர்வயின் வந்த சீர்பெறுந் தகையோன்
சேஷாத் திரியெனுந் தெய்விக மறையோன்
முற்பெருந் தவத்தா லிபபுவி யுதித்தோன்
தூப்பு லென்னுங கோப்பமை குடிமையில்
விழுமிய ஞானி விளங்கிடுஞ் சீநி
வாசரா கவனெனும் வண்புல வோனே.

---

# ஸ்ரீபிருகந்நாரதீயபுராணத்தின்

(பூர்வபாகம்.)

# அட்டவணை.



அட்டவணை முற்றிற்று.




ஸ்ரீரஸ்து.

ஸ்ரீலக்ஷ்மீஹயவதனபரப்பிரம்மணேநம:

# ஸ்ரீபிருகந்நாரதீயபுராணம்.

---

## மங்களசுலோகங்கள்.

నారాయణం నమస్కృత్య నరం చైవ నరోత్తమమ్ ।
దేవీం సరస్వతీం చైవ తతో జయముదీరయేత్ ॥

நாராயணமநமஸ்கிருதயநரஞசைவநரோததமம
தேவீமசரஸவதீமசைவததோஜயமுதீரயேத

(இ-ள்) சேதனவாக்கஙகளுக்குப் பயனும பதியுமான ஸ்ரீமநநாராயணனையும், அந்த நாராயணன அருமறைப்பொருளை வெளியிடடருளுமபடி அவரிடததில் வினவி, அவரருளிய சாஸ்திரஙகளால சேதனாகளுககு உய்வுபாயம் உணடாககுவித்தவிஞல சிறபபுறற நரனையும் அந்த பொருள்களுக கெலலாம் மூலமாய் அறுதியாயுள்ள வேதத்தையும தொழுது, பின்பு பிறவியைவெலலும வகையை பேசககடவது

వందే బృందావనాసీన మిందిరానందమందిరమ్
ఉపేంద్రం సాంద్రకారుణ్యం పరానందం విభుం పరమ్

வந்தேபிருந்தாவனாசீனமிந்திராநந்தமந்திரம
உபேந்திரம்சாந்தரகாருணயமபராநந்தமவிபுமபரம.

(இ-ள்.) மறைமுடிகளாலும் உணரலறிய ஆனந்தமுதலிய கலவியாணகுணஙகள் உளளவனும, தனது கருணையிஞல தேவலோகததிலும மனுஷியலோகத்திலும பல அவதாரஙகள செய்பவனும், அதிலும மடமை

யாராத கோபிகைகளுக்கும் எளியவனும் பிருந்தாவனத்தில் வீற்றிருப்பவனும், பெரியபிராட்டியார் இறைப்பொழுதும் அகலகில்லாது இனிது வீற்றிருக்கும் திருமார்புடையவனும், அதனால் பிறர்க்கரிய மேன்பாடுபெற்றவனுமான பரமபுருஷனை வணங்குகிறேன்.

బ్రహ్మవిష్ణు మహేశాద్యా యస్యాంశా లోకసాధకాః
తమాదిదేవం చిద్రూపం విశుద్ధం పరమం భజే

பிரம்மவிஷ்ணுமகேசாத்தியாயஸ்யாம்சாலோகசாதகாஃ
தமாதிதேவம்சித்ரூபம்விசுத்தம்பரமம்பஜே

(இ-ள்) உலகங்களை அமைக்கவும் அளிக்கவும் அழிக்கவும் பிரமன் விஷ்ணு ருத்திரன் முதலிய வடிவங்களாய் இருக்கும் ஞானரூபியாய், குற்றமற்றவனாய், நற்குணங்களால் சிறப்புற்ற ஆதிமூலப்பொருளான எம்பெருமானை ஸேவிக்கிறேன்.

இங்கு பிரமனும் ருத்திரனும் எம்பெருமானுக்கு அம்சபூதர்களென்றும், விஷ்ணுமூர்த்தியென்பது எம்பெருமானுடைய சுரூபமென்றும் உணரற்பாற்று. எங்ஙனேயெனில், ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் —

బ్రహ్మత్వే సృజతే లోకాన్ స్థితౌ పాలయతే ప్రజాః ।
రుద్రరూపాయ కల్పాంతే నమస్తుభ్యం త్రిమూర్తయే ॥

பிரம்மத்வேஸ்ருஜதேலோகாந்ஸ்திதௌபாலயதேபிரஜாஃ
ருத்ரரூபாயகல்பாந்தேநமஸ்துப்யம்திரிமூர்த்தயே

பிரமன்வடிவமாகி உலகங்களைப் படைப்பவனும், சுயரூபத்தில் பிரஜைகளை ரக்ஷிப்பவனும், அவைகளை அழிக்கவேண்டுங்காலத்தில் ருத்திரவடிவமாகுவனுமாய், மும்மூர்த்தியாய் விளங்கும் உனக்கு தெண்டனிடுகிறேன் என்று தெளிவாய் கூறியபடியாலும், அந்த விஷ்ணுபுராண கர்த்தாவான ஸ்ரீபராசரபகவானுக்கு உண்மைப்பொருள் தவறாது விளங்கும்படி புலஸ்தியர் வசிஷ்டர் என்னும் மகான்களால் அனுக்கிரகம்செய்யப்பட்டிருக்கிறபடியாலும், அந்தபுராணத்தை புராணரத்னமென்றும் அந்த பராசரபகவானே மகாபிராமாணிகர்களில் தலைவராகவும், பெரியோர்களால் பலவிடங்களில் கூறப்பட்டிருப்பதாலும், அதற்கிணங்கவே பொருள்கொள்ளுவது தகுதியாகும்.

இந்த மூன்றுசுலோகத்தாலும் தாம் சொல்லப்புகுந்த நூல் இடையூறின்றி முடிவுபெறவேண்டி தமது இஷ்டதெய்வத்தையும் மூன்னோர்களையும் துதித்தாரென்பது.

---

ஸ்ரீலக்ஷ்மீஹயவதநபரப்ரஹ்மணே நம:

# ஸ்ரீ பிருஹந்நாரதீயபுராணம்.

## க-வது அத்தியாயம்.

## புராண வரலாறு.

மகாத்துமாக்களும் பிரமமவாதிகளுமான சௌனகாதிரிஷிகள் நைமிசமென்னும் மகாரணியத்தில், மோக்ஷத்தை உத்தேசித்தவர்களாய், தவம்புரிந்துவந்தனர். ஐம்புலன்களை அவித்து ஆகாரத்தை ஒழித்து சத்தியத்தையே முக்கியவிரதமாகக்கொண்டவர்களும், சாதுக்களும், பொறாமையில்லாதவர்களும், சகல தருமங்களையும் அறிந்தவர்களும், உலகானுக்கிரகத்தில் இச்சையுடையவர்களும், அகங்காரமமகாரங்களைவிட்டவர்களும், ஸ்ரீமந்நாராயணனிடத்திலேயே சித்தத்தைச்செலுத்தினவர்களும், காமக்குரோத முதலிய குற்றமற்றவர்களும், பொறுமைமுதலிய குணமுற்றவர்களும், கிருஷ்ணாஜினதாரிகளும், ஜடாபூஷிதர்களும், பிரமமசாரிகளும், சகலசாஸ்திர சம்பன்னர்களுமான அந்த சௌனகாதிகள், அந்நைமிசவனத்தில், யக்கியநாதனை ஸ்ரீஹரியை சிலர் யக்கியத்தினாலும், ஞானரூபியான பரப்பிரமத்தை சிலர் ஞானயோகத்தாலும், சிலர் பரமபக்திமார்க்கத்தாலும் ஸ்ரீமந்நாராயணனை ஆராதித்துவந்தார்கள். இம்மகரிஷிகள் ஓர்காலவிசேஷத்தில், அறம் பொருளின்பம் வீடென்னும் நான்கின் சுரூபத்தையும், அவற்றைப் பயக்கத்தக்க உபாயத்தையும் அறியவேண்டி ஓர் சபைகூடினார்கள். அந்த சபையில் இருபத்தாறாயிரம் *ஊர்த்துவரேதசுக்களான மகரிஷிகளும் அவர்களுடைய சிஷ்ய பிரசிஷ்யர்களும் சேர்ந்திருந்தார்கள். மாசற்ற மனத்தினரும் திவ்விய தேஜஸ்விகளும் விருப்பு வெறுப்பற்றவர்களுமான அம்மகரிஷிகள், உலக சமரக்ஷணார்த்தமாக ஒருங்குசேர்ந்து, தங்களுள் சிரேஷ்டராகிய சௌனகரிஷியைநோக்கி ஓ சுவாமி! இப்புவியின்கணுள்ள புண்ணிய க்ஷேத்திரங்கள்யாவை? புண்ணியதீர்த்தங்கள்யாவை? பாவிகளான ஜனங்கள் நிரதிசயானந்தமாகிய மோக்ஷத்தை எவ்விதம்பெறுவர்? ஸ்ரீமந்நாராயணனிடத்து பரமபக்தி எவ்விதம் உண்டாகும்? காயிகவாசிகமானஸிகமென்னும் முக்கருமங்களின் பலன் எவற்றால் சித்திக்கும்? என்று இத்தன்மையான பிரச்னம் செய்தார்கள். அப்போது மகா புத்திமானான அச்சௌனகரிஷி எழுந்துநின்று, மிகவும் வணக்கத்துடன் அஞ்சலியஸ்தராய், ஓ மகரிஷி

* ஊர்த்துவரேதசுக்கள்=ரேதசை கீழ்விடாதவர்கள்

களே! சித்தாசிரமமெனனும் ஓர் புண்ணியக்ஷேத்திரமுளது அவ்வாசிரமத்தில், பௌராணிகர்களுள் சிரேஷ்டரான சூதர், அனேகவித யக்ஞங்களால் ஜகத்ரூபியான ஜநார்த்தனனை ஆராதித்துவருகிறார் இப்போது நீங்கள் பிரசனம் செய்தவிஷயங்களுக்கு அவரே உத்தரம் அளிக்கத்தக்கவர். ஏனெனில், அவர் பராசர புத்திரனுன வியாசபகவானுடைய சிஷியர், சாந்தர், புராணார்த்தங்களை ஆராய்ந்தறிந்தவர் அவ்வியாசபகவான ஸ்ரீமந்நாராயணனும் சட. ஸ்ரீமந்நாராயணனே யுகங்கடோறும் வேதவியாசரூபமாய் அவதரித்து மானிடர் உஜ்ஜீவிக்கும்பொருட்டு வேதத்தைப்பிரித்து நன்குவிளக்குகின்றனர். லோமஹர்ஷண புத்திரனுன சூதபௌராணிகர் அவ்வியாசமகரிஷியினிடத்தில் சகல சாஸ்திரங்களையும் ஓதியுணர்ந்தவர் ஆகையால் உலகத்தில் சகல புராணங்களிலும் சிறந்த ஞானமுள்ளவர், அச்சூதமகரிஷியேயன்றி வேறொருவர் உளரோ? உலகத்தில் எவன் புராணார்த்தங்களை அறிந்தவனே அவன்தான் எல்லாமறிந்தவன், அவனே மிகுந்த புத்திமான், சாஸ்திரஞன், மோக்ஷதருமங்களை அறிந்தவன், கருமம் பக்தி இவைகளின் பேதங்களை நன்குணர்ந்தவன். ஏனெனில், அப்புராணங்களுள் வேதங்கள், வேதாங்கங்கள், இவை முதலியவைகளின் சாரங்களை அவ்வியாசபகவான் உலகஹிதார்த்தமாக நன்குவிளக்கியிருக்கின்றனர் சூதபௌராணிகர் எல்லா தத்துவங்களையும் ஐயந்திரிபற உணர்ந்தவர், ஞானசாகரம், ஆகையால் இவ்விஷயங்களை அவரையே நாம் கேட்போம், என்று சௌனகரிஷிசொல்ல, அம்மகரிஷிகள்சந்தோஷமுற்றவராய் வித்துவசிரேஷ்டரான சௌனகரை ஆலிங்கனம்செய்து, நன்று! நன்று! என்று துதித்தார்கள் பின்னர், அம்மகரிஷிகள், அதிக பரிசுத்தமுடையதும், மிருககூட்டங்களாலும் முனிகணங்களாலும் நிறையப்பெற்றதும், பாக்கபபாக்க மற்றுமமிய மான பழங்கள் புஷ்பங்களோடுகூடின பல விருக்ஷங்களாலும் கொடிகளாலும் நிபிடீகரிக்கப்பட்டதும், திவ்விய தீர்த்தங்களால் நிறையப்பெற்றதும், அதிதிபூஜைக்கு ஓர் வைப்பென்றும் சொல்லும்படியான அந்த சித்தாசிரமத்தையடைந்தனர் அங்கு அனந்தனும் தன்னை ஒருவனாலும் ஜயிக்கப்படாதவனும் ஆதிதேவனுமான ஸ்ரீமந்நாராயணனை *அக்கினிஷ்டோமத்தினல் ஆராதித்துக்கொண்டிருந்த சூதரை சேவித்து அவரால் அனுகுணமாக ஆராதிக்கப்பட்ட அதி தேஜஸ்விகளான அம்மகரிஷிகள், அம்மகத்தின் அவபிருதத்தை எதிர்பார்த்துக்கொண்டு அவ்யாகசாலையிலேயே வீற்றிருந்தார்கள் பின்னர், †அவபிருதஸ்நானம்செய்து சுகமாய் உட்கார்ந்தவுடன், சூதரைநோக்கி நைமிசாரணியவாசிகளான ரிஷிகள் பிரச்னம் செய்தார்கள்

வாரும் எங்கள் சூதபௌராணிகரே, அதிதிப்பிரியரான தேவரீர் அதிதிகளாய்வந்த எங்களுக்கு தத்துவஞானங்களை உபகரித்து கிரமமாக ஆதரிக்கவேண்டும். அமரர்கள் சந்திரகலையாகிற அமிருதத்தைப்புசித்து ஜீவிக்கின்

---

* அக்கினிஷ்டோமம்—ஓர்விதயாகம்.

† அவபிருதஸ்நானம்—யாகத்தின்முடிவில்செய்யும்ஸ்நானம்.

ஞர்கள். அடியோங்கள் தேவரீருடைய முகாரவிந்தத்தினின்று பெருகும் ஞானாமிருதத்தைப் புசித்து ஜீவிக்கக்கடவோம். சராசரங்களான சமஸ்தமும் எவரிடத்திலிருந்து உண்டாயிற்றோ, எவரை ஆதாரமாகப்பெற்றிருக்கிறதோ, எவரால் குடிகொள்ளப்பட்டிருக்கிறதோ, எவரிடத்தில் லயிக்கப்போகிறதோ அத்தகைய மகாவிஷ்ணுவை எவ்விதம் ஆராதிக்கவேண்டும்? அவர் எதனால் பிரசன்னமாகுவர்? வர்ணாசிரமங்களின் ஆசாரங்கள் எத்தன்மையானவை? அதிதிபூஜை எத்தன்மையது? கருமங்கள் எவ்விதம் செய்யப்பட்டால் ஸபலமாகும்? மானிடர் மோக்ஷமடையும் மார்க்கமெது? பக்தியால் அடையக்கூடியதெது? அப்பக்தி எவ்விதமானது? இவையெல்லாவற்றையும் சந்தேகமற அடியோங்களுக்குப் பிரசாதித்தல்வேண்டும். எவனுக்குத்தான் தேவரீருடைய வாக்காகிற அமிருதத்தைப் பானம்செய்ய ஆவல்கொள்ளாது? என்றார்கள். அவைகளைச் செவியுற்ற சூதபௌராணிகர் பின்வருமாறு உரைப்பாராயினார்: ஓ வாருங்கள் மகரிஷிகளே, நீங்கள் எவற்றைக் கேட்கவேண்டுமென்று ஆவல்கொள்ளுகின்றீர்களோ அவற்றைச்சொல்லுகிறேன். அதை சாவதானமாகக் கேளுங்கள். நீங்கள் இப்போது பிரசன்னம் செய்தவிஷயங்களையே பூர்வம் ஸநத்குமாரருக்கு நாரதபகவான் உரைத்திருக்கின்றனர். அதிக பெரியதும், வேதார்த்தங்களால் நிரம்பப்பெற்றதும், பாவங்களெல்லாவற்றையும் நாசஞ்செய்யவல்லதும், கிரகசாரபீடையை நிவர்த்திப்பதும், கெட்ட கனவுகளை நசிக்கச்செய்வதும், பக்தி முக்திகளைக் கொடுப்பதும், செல்வமீவதும், ஸ்ரீபகவச்சரித்திரங்களையுடையதும், சமஸ்தமங்களங்களைக் கொடுப்பதும், சதுர்வித புருஷார்த்தங்களுக்குக் காரணமும், மகாபலனுள்ளதும், சிலாக்கியமான புண்ணியபலத்தைக் கொடுப்பதுமான இந்த நாரதீயபுராணத்தை சாவதானமாகக் கேளுங்கள். இந்த தீர்க்கமான புராணத்தை மகா பாவஞ்செய்தவனாயினும், சமஸ்த பாதகங்களைச்செய்தவனாயினும், ஒருதரம் கேட்பானானால் எவ்விதபாவங்களும் நிவர்த்தியாய் மோக்ஷமடைவான். இப்புராணத்தின் ஒரு அத்தியாயத்தைப் படித்தால் வாஜபேயயாகத்தின் பலத்தை அடைகின்றான். இரண்டத்தியாயமோ, அக்கினிஷ்டோமபலத்தைக்கொடுக்கும். ஓ மகரிஷிகளே! ஜ்யேஷ்டமாதத்தில், பௌர்ணமிதிதியில், மூல நக்ஷத்திரத்தில் பரிசுத்தனாக யமுனாநதியில் தீர்த்தமாடி, மதுரையில் உபவாசமிருந்து, யதாவிதியாக ஸ்ரீமகாவிஷ்ணுவை ஆராதித்தலாலடையும் பெரும்பேறாகிய பதினாயிரம் ஜன்மங்களில் செய்யப்பட்ட பாவங்கள் எல்லாம் நாசமடைந்து தன் முன்பின் கோடித்தலைமுறையுடன் சேர்ந்து பிரமலோகத்தையடைந்து அவ்விடத்திலிருந்து மோக்ஷமடையும் பலத்தை இப்புராணத்தின் பத்து அத்தியாயம் பக்தியுடன் கேட்பவன் அடைகின்றான். ஸ்ரீமந்நாராயணனை ஸ்துதிப்பதால் சந்தேகமில்லாமல் இப்புராணசிரவணம் செய்கிறவன் அந்த பலத்தை அடைகிறான். ஆதலின், மனிதன் கேட்கவேண்டியதில் உத்தமமானதாயும், பரிசுத்தகரங்களில் மேன்மைபொருந்தியதாயும், கெட்ட கனவுகளை நிவர்த்திப்பதுமான விப்புராணத்தை பிரயத்தன பூர்வகமாகக் கேட்கக்கடவன். இதில் மனிதன் ஒரு சுலோகத்தையா

வது அரைசுலோகத்தையாவது சிரத்தையுடன் கேட்பானானால், அவன் உபபாதகங்கள் பலசெய்திருப்பினும் அவைகளினின்று விடப்படுகிறவனாகிறான் இப்புராணம் பரமரகசியமானதால் விஷ்ணுவாலயத்திலும், புண்ணியக்ஷேத்திரத்திலும், புண்ணிய சபையிலும், ஸாதுக்களுக்கே சொல்லவேண்டும் பிரமத்துவேஷிகளுக்கும், டம்பமான ஆசாரம் அதாவது கள்ளாசாரம் உடையவர்களுக்கும், பிறர் தன்னைப் புகழவேண்டி கருமானுஷ்டானம் செய்பவர்களுக்கும் சொல்லலாகாது மேலும் மோக்ஷப்பிரதமான இதை காமமுதலிய அறுகுற்றங்கடிந்தோரும், விஷ்ணுபக்தியில் ஆவலுள்ள மனத்தினரும், ஆசாரியபக்தியுள்ளவருமான ஸாதுக்களுக்கே சொல்லவேண்டும் சமஸ்த தேவதாஸ்வரூபியான ஸ்ரீமந்நாராயணன் பக்தவற்சலனாகையால் பக்தியினாலன்றி வேறுவிதத்தால் சந்தோஷமடைவதில்லை எவனாலாகிலும் அந்தப்பகவானுடைய திருநாமமானது தற்செயலாய் சொல்லப்பட்டாலும் துதிக்கப்பட்டாலும் அவன் பாபரகிதனாகி பரமபதத்தையடைகின்றான் ”

ஓ ஸாதுக்களே! சம்சாரமாகிய பயங்கரமான காட்டுக்குப் பெருந்தீயான இந்த மதுசூதனனானவர் நினைக்கிறவர்களுடைய எல்லாபாவங்களையும் உருவற நாசஞ்செய்கிறார் அந்த பகவானுக்கு பிரீதியையுண்டுபண்ணுவதான புண்ணியபலனுள்ள இப்புராணமானது அவசியம் சிரவணம் செய்யப்படவேண்டிய புராணங்களுள் சிறந்தது இதனைக் கேட்கினும் படிக்கினும் சர்வபாவங்களும் நாசமாகும் எவனுக்கு இப்புராணத்தைக் கேட்க பக்திபூர்வகமான சிரத்தையுண்டாகிறதோ, அவனே மகாசுகிருதியும் சமஸ்த சாஸ்திரார்த்தங்களை தெரிந்தவனுமாகிறான், அவனால் செய்யப்படும் தவம் உடனே பலத்தைக்கொடுக்கும் அப்படி இல்லாவிடின், இதைக் கேட்க எண்ணமுண்டாகாது. லோகஹிதார்த்திகளான சாதுக்களத்தம ஸத்கதாசிரவணஞ்செய்ய விரும்புவர் பாபபுத்திகளான துஷ்டர்களுக்கோ, நிந்தனை கலகமுதலிய துர்விஷயபாரசிந்தனையே உண்டாகும் புராணங்களை அர்த்தவாதங்களென்று (அதாவது கேவலம் ஸ்துதிபரங்களென்று), எவர்கள் சொல்லுகிறார்களோ அவர்கள்செய்த புண்ணியமனைத்தும் தாங்கள் சொல்வதுபோலவே பயனற்ற அர்த்தவாதங்களாய்விடும் சமஸ்த கருமபாசங்களையும் அறுவிழச்செய்யும் புராணங்களை அர்த்தவாதங்களென்றுசொல்லும் நராதமன் ரௌரவமுதலிய நரகத்தையடைந்து, அந்நரகாக்கினியால் பிரமகல்பபரியந்தம் தகிக்கப்படுகின்றனன். ஆச்சரியம்! புண்ணியபாபமென்கிற இரண்டிற்கும் ஹேதுக்களான நான்கு அக்ஷரங்களையுடைய இரண்டு பதங்களைச் சொல்லுகிறேன் அதாவது புண்ணியஹேது நாராயணவென்பதும், பாபஹேது அர்த்தவாதமென்பதுமாம் ஆதலால், சகலதருமங்களையும் சொல்லும் புராணங்களை அர்த்தவாதங்களென்று சொல்லுகிறவர்கள் நரகமெய்துபவரென்பது திண்ணமன்றோ? எவன் அதிக பிரயாசையின்றி புண்ணியங்களை சம்பாதிக்க விரும்புகின்றானோ அவன் புண்ணியாம்சமான புராணசிரவணம் செய்யவேண்டும். அதினாலேயே அவன் விரும்பியவற்றை அடைகிறானென்பதில் சம்சயமில்லை எவனுக்கு ஜன்மாந்தரபாபங்கள் நசிக்கின்றன

வோ அவனுக்கே புராணங்கேட்பதில் உண்மையான புத்தி உண்டாகும் சர்வபாபஹரங்களான புராணங்களிருந்தும் பாபமெனும் பாசத்தால் கட்டுண்டவனது புத்தியானது வீணகதைகளில் பிரவர்த்திக்கின்றது ஸாதுசங்கம், தேவதாராதனம், ஸத்கதாசிரவணம், பிறனுக்கு ஹிதோபதேசம், இவைகளில் ஆவல்கொண்டமனிதன் தேகவியோககாலத்து விஷ்ணு தேஜோமயனாகி அமரர்தவனது பரமபதத்தை அடைகின்றான் ஆகையால், பிரமரிஷியாகிய நாரதபகவானால் உபதேசிக்கப்பெற்று அக்காரணத்தைக்கொண்டே நாரதீயமென்று பெயர்வாய்ந்த உத்தமமான இப்புராணத்தைக் கேளுங்கள் இதைக்கேட்டால், ஜன்மம் ஜராமுதலியன நாசமுற்று நிர்தோஷியாய் மோக்ஷமடைகின்றான் சர்வசிரேஷ்டனும், வரதனும், அநாதியும், தமது தேஜஸ்ஸினால் சமஸ்தலோகங்களையும் பிரகாசிக்கச்செய்கிறவனும், சமஸ்தத்தையும் தனது சங்கற்பமாத்திரத்தில்செய்கிறவனும், ஆதிதேவனுமான ஸ்ரீமந்நாராயணனை ஸ்மரித்தால் முக்தி கைகூடாதுவிடுமோ? எவன் பிரமரூபியாகி சிருஷ்டித்தும், விஷ்ணுவாய் ரக்ஷித்தும், ருத்திரரூபியாகி சம்ஹரித்தும் வருகின்றானோ, எவனுக்கு ஜாதிமுதலிய விகாரங்களில்லையோ, எவன் சிரேஷ்டர்களான தேவர்களுக்கும் சிரேஷ்டனோ, எவன் பிரகிருதியைக் கடந்தவனோ, எவன் வேதாந்தங்களால் அறியத்தக்கவனோ, எவன் ஸ்வயம்பிரகாசனோ, அவனைத்தான் சமஸ்தபுராணங்களும் வேதங்களும் புகழுகின்றன 'அந்த பகவானை பஜிப்பவர்களுக்கே, மோக்ஷம் மோக்ஷத்தை இச்சிப்பவர்கள், அந்த ஸ்ரீமந்நாராயணனே, உபாசனாதேவதை' என்னும் இந்த புருஷார்த்த சாதகமாகிய பரமரகசியத்தை அறிபவர்கள், பரமபதநாதனை அடைகின்றனர் இப்புராணத்தை தார்மீகனும், சிரத்தையுடையவனும், மோக்ஷாபிலாஷையுடையவனும், ஜிதேந்திரியனும், துராசையற்றவனும், சுபுத்தியுள்ளவனுமான ஸாதுவுக்கே சொல்லவேண்டும். புண்ணியபூமியிலும், சபையிலும், தேவாலயத்திலும், புண்ணியக்ஷேத்திரத்திலும், சந்தியாகாலந்தவிர மற்றையகாலத்திலும் சொல்லவேண்டும் இந்த உத்தமமான புராணத்தை அசுத்தமானதேசத்தில் படிப்பவர்களும், டம்பத்தினால் அதாவது பக்தியின்றி கேட்பவர்களும், இந்த ஸத்கதாபாராயணகாலத்தில் வீண்வார்த்தை பேசுகின்றவர்களும், சந்திர நக்ஷத்திரங்களுள்ளவரையில் நரகவேதனைக் குட்படுகிறார்கள் ஆகையால் படிப்போரும், கேட்போரும், சாவதானசித்தர்களாய் இருத்தல்வேண்டும். அவ்விதமில்லாவிடின், இதில் விவரிக்கும் விஷயங்களில் சற்றேனும் தெரியாது இந்த பகவத்சரிதையாகிற* அமிருதத்தை மனிதன் சாவதானசித்தனாக பானம்செய்தல்வேண்டும். மனோசஞ்சலமுள்ளவனுக்கு ருசிதெரியுமோ? அலைபோன்ற மனமுடையோனுக்கு சுகமுண்டோ? ஆகையால், ஏகாக்கிரசித்தனாய் பகவத்ஸ்மரணை செய்யவேண்டும். மனக்கலக்கமுற்றவனுக்கு விஷயசுகமே உணரல் அரிதெனின் யோகம் எவ்வாறு கைகூடும்? ஆகையால், துக்கஹேதுவான காமத்தை வேரகளைந்து சாவதானசித்தனாய பகவானை ஸ்மரிக்க வேண்டும். எவ்விதஉபாயத்தாலாகிலும் பாவியும் சாவதானமாய் சிந்தித்தா

றேகில், அவனுக்கு பகவான் பிரசன்னனாகின்றாரென்பதில் சந்தேகமில்லை. விபுவாயும், பரனாயும், தேவாதிதேவனாயுமிருக்கிற ஸ்ரீமந்நாராயணனிடம் பரமபக்தி எவனுக்கிருக்கிறதோ, அவனுடைய ஜன்மமே ஸபலமானது. மோக்ஷமும் அவனதே சதுர்வித புருஷார்த்தங்களும் அத்தகைய விஷ்ணு பக்தர்களுக்கே உண்டாகின்றன.

---

## உ-வது அத்தியாயம்.

---

நாரதபகவானால் செய்யப்பட்ட

# ஸ்ரீமந்நாராயணமகாத்மிய கீர்த்தனம்.

சௌனகாதிரிஷிகள் சூதபௌராணிகரைநோக்கி, வாரும் எங்கள் சூதபௌராணிகரே! தேவரிஷியான நாரதர் எந்தக்ஷேத்திரத்தில் ஸநத்குமாரரை சந்தித்தார்? அந்த இரண்டு பிரமமவாதிகளும் எப்படி, ஒன்றுகூடினார்கள். எவ்விதமாய் ஸநத்குமாரருக்கு நாரதபகவான் ‟சகலதருமங்களையும் உபதேசித்தார் அப்படி நாரதபகவான் உபதேசித்த விஷயங்களை தயாநிதியான தேவரீர் அடியேங்களுக்கு திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தார்கள் அப்போது சூதபௌராணிகர் பின்வருமாறு விளம்பலாயினர். சிருஷ்டிகர்த்தாவான பிரமதேவனுக்கு அகங்காரமமகாரமில்லாதவர்களும், ஊர்த்துவரேதசுக்களும், ‟விஷ்ணுபக்தர்களும், நல்ல சுபாவமுள்ளவர்களும், பிரமத்தியானத்தையே முக்கிய தருமமாகக்கொள்பவர்களும், ஆயிரம் சூரியர் சேரஉதித்தாற்போல காந்தியையுடையவர்களும், சத்தியப் பிரதிஞ்ஞையுள்ளவர்களும், முமுக்ஷுக்களுமான ஸநகர், ஸநந்தனர், ஸநத்குமாரர், ஸநாதனர் என்னும் நான்கு குமாரர்களுண்டு. ஓர்காலத்தில் பிரம சபையைப்பார்க்க விரும்பினவர்களாய், மகமேருவின் சிகரத்தையடைந்து, அச்சிகரத்தில் ஸ்ரீவிஷ்ணுபகவானுடைய திருவடிகளிலிருந்து உற்பத்தியானதும், மகா புண்ணியபலனைக்கொடுப்பதும், சீதையென்னும் பெயர்கொண்டதுமான ‟கங்காநதியைக்கண்டு, மகா தேஜஸ்விகளான அம்மகரிஷிகள் ஸ்நானஞ்செய்யத்தொடங்கினர். ஓ சௌனகாதிரிஷிகளே அந்தசமையத்தில்,

பரமபாகவதசிகாமணியான நாரதபகவான் ஹரே நாராயணா, அச்சுதா, அநந்தா, வாசுதேவா, ஜநார்த்தனா, ‟யக்ஞநாதா, யக்ஞபுருஷா, கிருஷ்ணா, விஷ்ணோ, உம்மை தெண்டனசமர்ப்பிக்கின்றேன். அரவிந்தலோசனா, லக்ஷ்மீ காந்தா, கங்கோத்பாதகா, கேசவா, பாற்கடற்றுயிலும்பரமனே, உம்மை பிரணாமம் செய்கின்றேன். தேவதேவனே, கிருஷ்ணா, எங்கும் வியாபித்திருக்கின்றமையால் விஷ்ணுவென்னும் திருநாமமுடையவனே, நரசிம்மமூர்த்தி, முராரே, பிரத்யும்னன் சங்கருஷணன் வாசுதேவன் அநிருத்தனென்னும் திருவம்சங்களையுடையவனே, உற்பத்தியும் நாசமுமில்லாதவனே, விஸ்வரூபியான

வனே, அடியேனை எவ்வித ஆபத்தினின்றும் நீக்கியருளவேண்டுமென்று இவ்விதமாய் பகவந்நாமசங்கீர்த்தனம் செய்துகொண்டு, சமஸ்தலோகங்களையும் பரிசுத்தம்செய்யாநின்ற கங்காநதியையடைந்தார். அப்போது ஸநகாதிகள், எழுந்தருளிய நாரதபகவானை யதாவிதியாக பூஜித்தார்கள் நாரதமகரிஷியும் ஸநகாதிகளை வந்தித்தார் பின்னர் எல்லோரும் நித்தியானுஷ்டானங்களை முடித்து ரமணியமான கங்கைக்கரையில் உட்கார்ந்தார்கள் அப்போது நாரதபகவான் மீண்டும் பகவந்நாமசங்கீர்த்தனம் செய்யவாரம்பித்தார் ஸ்ரீபரந்தாமனையே முக்கியகதியாகக்கருதிய முனிசிரேஷ்டரான நாரதரைப் பார்த்து சபைநடுவிலிருந்த ஸனத்குமாரர் பிரசனம்செய்கிறார் மிகுந்த ஞானவானாயும், முனிவர்களின் மகிமைக்கு காரணமாயுமிருக்கிற நாரதரே! தேவரீர் ஸ்ரீஹரியினுடைய சரணாரவிந்தபக்திபாரணையால் சகலமுமறிந்தவர் தேவரீரையன்றி வேறொருவருமில்லை எவனால் ஸ்தாவரஜங்கமரூபமான இந்த உலகம் படைக்கப்பட்டதோ, இங்கு பிரவகிக்கின்ற கங்கையானது எவனுடைய சரணாரவிந்தத்தினின்றுமுண்டானதோ அந்த ஸ்ரீமந்நாராயணமூர்த்தியை எவ்விதமறியலாம்? முக்கருமங்களும் எவ்விதம் ஸபலமாகும்? மனிதர்களுக்கு ஞானம் எவ்விதம் உண்டாகும்? தவத்தின் இலக்ஷணம் என்ன? அதிதிபூஜை எவ்விதமானது? எதனால் ஸ்ரீமகாவிஷ்ணு பிரசன்னனாகிறார்? இவைமுதலான விஷ்ணு பக்திக்குக்காரணமான இரகசிய தருமங்களை அடியேன் தேவரீர் அநுக்கிரகத்துக்குப் பாத்திரனாயிருந்தால் உண்மையாய் சாதித்தருளவேண்டுமென்கிற ஸனத்குமாரரைப் பார்த்து நாரதபகவான் சொல்லலுற்றார். சர்வசிரேஷ்டனாய் விளங்காநின்றும், பரமான பிரமருத்திராதிகளுக்கும் பரமானவனாயும், சிலாக்கியமான சுவர்க்காதிலோகங்களுக்கும் அதிக சிலாக்கியமான ஸ்ரீவைகுண்ட நிவாசியாயும், கல்யாணகுண பரிபூரணனாயும், ஹேயகுணரகிதனாகியும், ஜடரூபியாயும், தருமாதரும விதயாவிதயரூபியாயும், சுவயம்பிரகாசனாகியும், மாயாரகிதனாகியும், ஆத்மாவென்றுபெயர்கொண்டவனாயும், விசித்திரசக்தியுள்ளவனும், யோகஸ்வரூபியும், யாவனிடத்திலும் அந்தர்யாமியும், யோகத்தியானத்தாலடையக்கூடியவனும், ஞானரூபியும், ஞானமார்க்கத்தாலறியத்தகுந்தவனும், எல்லாஞானங்களுக்கும் காரணனும், ஞானநாதனும், தேஜோரூபியும், தியானரூபியும், தியானத்தினாலறியக்கூடியவனுமான பரப்பிரமத்தை நமஸ்கரிக்கின்றேன். நினைத்தமாத்திரத்திலேயே பாவத்தைப் போக்குகிறவனும், சுத்தஸ்வரூபியும், சுத்தஞானவானுமான ஸ்ரீஹரிக்கு தெண்டனசமர்ப்பிக்கின்றேன். சூரியன், சந்திரன், அக்கினி, பிரமன் முதலான தேவர்களும், சித்தர், யக்ஷர், அசுரர், நாகர் முதலான தேவயோனி விசேஷங்களும் எவரை தத்தம் காரியநிமித்தம் சரணாகதியடைகின்றாரோ அந்த அஞானியூனவனும், உற்பத்திரகிதனும், ஸ்துதிக்கு நாதனுமான ஸ்ரீமந்நாராயணனை எப்போதும் வணங்குகிறேன். யாதொரு பகவானுடைய திவ்விய திருநாமங்களை கீர்த்தனம்பண்ணுபவர்களான பரிசுத்தசுபாவமுடைய முனிசிரேஷ்டர்களும் சொப்பனத்திலும் எவனைக்காணக்கூடாதவர்களாயிருக்கின்

ககு தனது பதத்தை தநதருள்கின்றனே அந்த புருஷோத்தமனுக்கு வந்தனம் புரிகின்றேன். இவ்விதமாய் சாவேசுவானை ஸ்ரீயஃபதியை ஸ்தோத்திரம செய்யும் நாரதமகரிஷியைபபாாதது ஆனநதக்கணணீாததுமபும நேததிரங கஙுடையவாகளாய் ஸநகாதிமகரிஷிகள கைகூபபிககொணடு வந்தனமபுரிந் தாாகள். இந்த நாரதமகரிஷியால சொலலபபட்ட ஸதோத்திரததை பிரா தககாலையிலெழுந்து எவன படிககிறனே அவன சமஸ்தபாபரகிதனுகி ஸ்ரீ வைகுணடத்தை அடைகிறனெனறு, அந்நாரதமகரிஷிககு வரமளிதது அநத ஸநகாதிகள் ஸ்ரீஹரியின திருநாமஙகளைச சொலலிக்கொணடே நாரதமக ரிஷியை சிலாகித்தார்கள்.

---

## ௩-வது அத்தியாயம்

---

# பகவத்வைபவமும் பிரபஞ்சவுற்பத்தியும்.

ஸ்ரீமநநாராயாணன குறைவிலலாதவா, அநதமிலலாதவா, எஙகும் நிறைந்தவா, ஸ்வயமபிரகாசா, பாபரகிதா சராசராதமகமான இவ்வுலகம அவராலே வியாபிககபபட்டிருககிறது ஸ்வயமபிரகாசியும ஜகதரூபியுமான இநத ஸ்ரீமகாவிஷ்ணுவானவா ஸதவரஜஸதமஸ்ஸுககள எனனும மூககுண ஙகளால சிருஷடிககாக வலபபுறததில பிரமதேகததையும, ரக்ஷணததிககாக இடபபுறததில விஷ்ணுதேகததையும, சமஹாரததிககாக இடையில ருததிர தேகததையும ஆகிய மூனறு உருவஙகளை ஆதி சிருஷடியிலகொணடாா அபபடிபபட்ட ஆதிதேவனைததான சிலா ருததிரனெனறும, சிலா விஷ்ணு வென்றும், வேறுசிலா பிரமனென்றும, மற்றும்சிலா பரபிரமமமெனறும சொல்லுகிறாாகள. அந்த ஸ்ரீமந்நாராயணனுககு உலகசிருஷ்டியை யனு சரித்து சிலாக்கியமான ஓா சக்தி இருககிறது அந்தசக்தி பாவரூபமாயும் அபாவரூபமாயுமிருந்து எலலோராலும விதயையெனறும், அவித்யையென் றும் சொலலபபடுகிறது. விஷ்ணுவின் சரீரமாகிய உலகத்தை விஷ்ணு வுக்குப புறம்பாக தானென்றும தனதெனறும எணணும்போது, சகலதுக் கங்களையும் விளைக்கும அவிதயைக்கு உளளாகிறான். எபபோது அறிபவன் அறியபபடவேணடியது என்கிற உபாதிகள் நசிதது ஆத்துமஸ்வரூப அபேத* புத்தி உணடாகிறதோ அபபோது விதயையென்னும் பெயராகிறது. பேத புததியானது பநததையும், அபேதபுத்தியானது சமுசாரக்ஷயத்தையும் கொடுக்கிறது. இவ்விதமாய் ஸ்ரீமகாவிஷ்ணுவை விட்டுப்பிரியாத இவ்வுல கம் யாவும் அவருடைய சக்தியினுலேயே உண்டாயிருக்கிறது ஆகாயம

---

* பிரகிருதிஜீவன இவைகளை சரீரமாகவுடைய ஈசுவரன் ஒருவனே என் கிறபுத்தி அபேதபுததி

அபின்னமாயிருந்தாலும் உபாதிகளால் எப்படி வேறாகத்தெரிகிறதோ அப்படியே அவித்தையயாகிற காரணத்தால் பிரம்மமும் வேறேயாகத் தெரிகிறது. ஓ மகரிஷிகளே! ஸ்ரீ ஹரி எப்படி சர்வவியாபியோ அப்படியே அவருடைய சக்தியும் எங்கும் வியாபித்திருக்கிறது. அக்கினியின் சக்தி அக்கினியின் ஆதாரத்தை வியாபித்திருப்பதுபோல அந்த பிரம்மமும் அதின் ஆதாரமான ஜகத்தை வியாபித்திருக்கிறது. அந்த சக்தியை சிலர் லக்ஷ்மியென்றும், சிலர் உமையென்றும், சிலர் சரஸ்வதியென்றும், பலர் கிரிஜை, அம்பிகை, துர்க்கை, பத்திரகாளி, சண்டிகை, மகேசுவரி, கௌமாரி, வைஷ்ணவி, வாராஹி, ஐந்தரி, பிராம்ஹி, வித்யாவித்யை, மாயை, பிரகிருதி, பராசத்தியென்றும் பலவிதமாய்க் கூறுகின்றனர். உலகசிருஷ்டி முதலானவற்றிற்குக் காரணமாயிருக்கிற இந்த பராசக்தியானது வியக்தமாயும் அவியக்தமாயும் உலகத்தை வியாபித்திருக்கிறது இந்த ஒரே சக்தியானது பிரகிருதி, புருஷன், காலமென்று மூன்றுவிதமாய் சிருஷ்டி, ஸ்திதி, லயங்களுக்குக் காரணமாயிருக்கிறது. இந்த சமஸ்தமும் எந்த பிரமதேவனிடத்திலிருந்து உண்டாயிறதோ அவனிலும் மேலானவனான ஸ்ரீமந்நாராயணனேதான் நித்தியனான தேவனென்று சொல்லப்படுகிறான் ஜகத்தை ரக்ஷிக்கும் தேவனே பரம புருஷன் ஆதலால் நான்முகனுலகமிறாகவுள்ள புண்ணிய லோகங்களினுஞ் சிறந்து அழிவற்றிருப்பது அத்தேவன் வீற்றிருக்குமிடம் அதுவே பெறற்குரியது காலருத்திரரூபங்கொள்ளும் அந்த பரமபுருஷனே அழிவற்றவன், ஹேயகுண ரகிதன், விமலன், எங்கும் நிறைந்துள்ளவன், யோகிகளுக்கு விஷயமானவன், பராத்பரன், ஞானானந்த ஸ்வரூபி, ஞானக்கண்ணாலேயே பார்க்கத்தக்கவன், எவ்வித உபாதியுமற்றவன். பரிசுத்தனும் பரமனுமான இந்த ஸ்ரீ ஹரி, மூடர்களால் அகங்காரமுடையவனென்றும், தேகியென்றும், சொல்லப்படுகிறான். ஆச்சரியம்! அவர்களுடைய ஞானம் விபரீதமானது நிஷ்களங்க தேஜோரூபமாய், வாக்குக்கும் மனத்திற்கும் எட்டாததாய், பரப்பிரம்மமாயிருக்கிற ஸ்ரீமந்நாராயணனே ஸத்வாதிகுணபேதங்களால் மூன்று மூர்த்திகளாய் சிருஷ்டிமுதலான மூன்றுக்கும் காரணமாயிருக்கின்றான் எவனுடைய ஒரு கோடியின் கோடியில் ஒரு அம்சத்தவரென்று பிரமாதிதேவர்கள் சொல்லப்படுகிறார்களோ அந்த பரமபுருஷனாலேயே ஸ்தாவர ஜங்கமரூபமான இந்த உலகம் வியாபிக்கப்பட்டிருக்கிறது ஸ்ரீமந்நாராயணனுடைய திருநாபிகமலத்தினின்று அவதரித்த சிருஷ்டிகர்த்தாவாகிய பிரமாவும் ஆனந்தரூபியான பரமாத்மாதான், வேறன்று. நிஷ்களங்கராயும் ஜகத்ரூபியாயுமிருக்கிற ஸ்ரீபரமாத்மாவானவர் சர்வசாக்ஷியாய் பின்னரூபியாயும், அந்தர்யாமியாய் அபின்னரூபியாயும் விளங்காநிற்கிறார் பகவத் சக்தியாகிற மகாமாயையானது உலகோற்பத்திக்குக் காரணமாயிருப்பதால் ஞானிகளால் பிரகிருதியென்று சொல்லப்படுகிறது. ஆதிசிருஷ்டியில் ஸ்ரீமந்நாராயணன் உலகங்களை சிருஷ்டிக்கும்பொருட்டு மூலப்பிரகிருதியென்றும், புருஷனென்றும், காலமென்றும் மூன்றுவிதமாக ஆனார். அப்படிப்பட்ட பரப்பிரம்மமாயும், தேஜோ ரூபியாயுமிராநின்ற ஸ்ரீ மகா

விஷ்ணுவையும், அவருடைய அதிபரிசுத்தகரமான பரமபதத்தையும், நிர்மல சித்தமுடைய யோகீசுவரர்கள்தாம் அறிவார்கள். எந்த ஹேயகுணரகித மான தேஜஸ்ஸை பரப்பிரம்மமென்று சொல்லுகிறேமோ அதுதான ஞான மார்க்கத்தாலறியப்படவேண்டிய ஸ்ரீமகாவிஷ்ணுவாயிருக்கிறது அந்த பரப பிரம்மமான ஸ்ரீ மகாவிஷ்ணு தூய்மையுடையவா, குறையற்றவா, முடிவில லாதவா, காலரூபமானவா, குணஸ்வரூபமானவா, குணாதாரமானவா, ஜகத் துக்கு ஆதிகாரணமானவா, எவருக்கும மூந்தவா

மூலப்பிரகிருதி பிரம்மத்திலிருந்து விகிருதியடைந்தபின்னா மஹத்தத் துவமும, அந்த மஹத்தத்துவத்திலிருந்து அஹங்காரமும, அஹங்காரத்திலிரு ந்து சூக்ஷ்மேந்திரியமாகிய தன்மாத்திரைகளும, தன்மாத்திரைகளிலிருந்து பஞ்சபூதங்களும உலக சிருஷ்டியினிமித்தம உண்டாயின ஆகாசம, வாயு, அக்கினி, ஜலம, பூமியாகிய பூதங்களைந்தும முறையே பிந்தியதற்கு முந்தியது காரணமாகின்றன

பின்னா சிருஷ்டிகாத்தாவாகிய பிரமதேவன மரம முதலான ஸ்தாவ ரங்களைப்படைத்தார இத்தன்மையான அபுத்திபூர்வகமான சிருஷ்டியா னது தாமச சிருஷ்டியென்று சொல்லப்படுகிறது இந்த சிருஷ்டி சாதக மாகமாட்டாதென்று பசு பக்ஷி மிருகம முதலான திரியக்கு ஜந்துக்களைப படைத்தார். அதுவும் அசாதகமென்று தேவாகளை சிருஷ்டித்தார். பினபு மனிதாகளை உண்டாக்கினா பின்னா சிருஷ்டிகாரணாகளான தக்ஷா முத லான பிரஜாபதிகளை மனதினால சிருஷ்டிசெய்தாா அவாகளால தாம தேவாசுரமனிதாகளால நிறைந்த இந்த உலகம சிருஷ்டிக்கப்பட்டது. பூ லோகம், புவாலோகம, சுவாலோகம, மகாலோகம், ஜனோலோகம, தபோ லோகம், சத்தியலோகம என்று மேலுலகம ஏழும, அதலம, விதலம, சுதலம, தராதலம, மகாதலம, ரசாதலம், பாதாலம என்றும கீழுலகம ஏழும ஆகிய பதினான்கினையும, அவைகளுக்கு அதிபதிகளையும சிருஷ்டித்தார அந்தந்த உலகங்களில வசிப்பவாகளுக்கு குலாசலங்களையும, நதிகளையும், அந்தந்த லோகத்துக்குத்தக்க விருத்திகளையும் உண்டாக்கினா. பூலோகத்தின் மத்திய பாகத்தில சகல தேவாகளுக்கும வாசஸ்தானமான மேருபாவதத்தையும், பூமியின் கடையில் லோகாலோகமலையையும, அதினிடையில ஏழுகடல்களை யும், அக்கடற்களினடுவில ஏழுதீவுகளையும, தீவுகடோறும் குலவரைகளையும், ஆங்காங்கு பற்பல நதிகளையும, தேவாகளைப்போன்ற மனிதாகளையும் சிருஷ டித்தார். ஜம்பூத்துவீபம், பிலக்ஷத்துவீபம, சால்மலித்துவீபம், குசத்துவீபம், கிரௌஞ்சத்துவீபம், சாகத்துவீபம, புஷ்கரத்துவீபம என்று பெயாவாய்ந்த ஏழுதுவீபங்களும் தேவாகளுக்கு வாசயோக்கியமான ஸ்தானங்கள். இந்த ஏழுதுவீபங்களும் உப்பு, கருப்பஞ்சாா, கள், நெய், தயிர், பால, சுத்தநீா என்கிற ஏழுசமுத்திரங்களால் சூழப்பெற்றிருக்கின்றன. லோகாலோக மென்கிற சக்கரவாளபாவதத்திற்கு உள்ளிட்டிருக்கிற இந்த துவீபங்களும், சமுத்திரங்களும், முந்தியதற்குப் பிந்தியது ஒவ்வொன்றும் இருமடங்கு விசால முள்ளது.

## பாரதவருஷச்சிறப்பு.

க்ஷீரசாகரத்துக்கு உத்தரதிசையிலும் ஹிமாசலத்துக்கு தக்ஷிணதிசையிலுமுள்ள பூமியானது, சமஸ்தகருமங்களுக்கும் பலத்தைக்கொடுக்கும்படியான பாரதவருஷமென்று கூறப்படுகிறது ஓ பிரமபுத்திரரான ஸநத்குமாரரேவானே! இங்கு மூவகையான கருமங்களைச்செய்பவர்கள் முறையே அக்கருமபயன்களை போகபூமிகளையடைந்து அனுபவிக்கின்றனர் பாரதவருஷத்திலசெய்த சுபாசுபகருமங்கள் யாவும், நரிக்கிறவரையில பிராணிகளால மற்றையவிடங்களில அனுபவிக்கப்படுகின்றன. நாசமற்ற மகாபுண்ணியங்களை சம்பாதிக்கிறதினிமித்தம், தேவர்கள் இப்போதும இப்பாரதபூமியில ஜனிக்க விரும்புகின்றனர் "நாம் எந்நைக்கு பரதபூமியில ஜனிக்கப்போகிறோம், அங்கு எப்போது மகா புண்ணியத்தை சம்பாதித்து தானங்களாலும யாகங்களாலும க்ஷீரசாகரசயனனான எம்பெருமானுக்கு திருவாராதனஞ்செய்து, நித்தியசூரிகளாலும முக்த புருஷர்களாலும அனுபவிக்கப்படாநின்ற அதியானந்தமயமான பரமபதத்தை எப்போது அடைவோம், பக்தி கருமம ஞானம் ஆகிய மூன்றுமார்க்கத்தாலாகிலும ஏனைய மார்க்கத்தாலாகிலும சச்சிதானந்தரூபியான ஜகதீசனை எப்போது அடையப்போகிறோம், கதிரொளிக்கு எப்படி ஒப்பிலலையோ அப்படியே இப்பாரகண்டத்தில பிறந்து ஸ்ரீவிஷ்ணுவினுடைய பாதாம்புஜசேவைசெய்கிறவனுக்கு ஒப்பானவர் ஒருவருமில்லை. ஸ்ரீஹரிபஜனை செய்பவர்களும், ஸ்ரீஹரிபக்தரான பாகவதர்களுக்குப் பிரியமானவர்களும், மகான்களுக்குப் பணிவிடைசெய்பவர்களும, நம்மால வணங்கத்தகுந்தவர்கள். ஏனெனில அவர்களே உத்தமர்கள் எவர்கள் ஹரிபூஜையை விரும்பியமனத்தினரோ, எவர்கள் ஹரிபூஜைபுரிந்துகொண்டு வருபவர்களோ, எவர்கள் எம்பெருமானை நாராயண கிருஷ்ண வாசுதேவேத்தியாதி திவ்விய திருநாமங்களால கீர்த்தனம செய்கின்றார்களோ, அஹிம்சை முதலான தருமபரர்களும சாந்தியுள்ளவர்களும உத்தமர்களுமான அவர்கள் நம்மால பூஜிக்கத்தகுந்தவர்கள் எவன் சிவ, நீலகண்ட, சங்கர என்று சொல்லிக்கொண்டு சாவபூதங்களுக்கும ஹிதனாயிருக்கின்றானோ, எவன் ஆசாரியபக்தியுள்ளவனும், சிவத்தியானம் செய்பவனும, வருணாசிரமாசாரவிதிகள வழுவாது செய்பவனும, பொறுமையுடையவனும, பொறாமையில்லாதவனும இருக்கின்றானோ அந்த உத்தமனும் நமஸ்கரிக்கத் தகுந்தவனாகிறான். சமஸ்த ஸத்கருமங்களிலும விருப்பமுடையவனும, பிராமணர்களுக்கு ஹிதத்தையே கோருபவனும், வேதாத்தியயனபரனும, பரமாத்மாவினிடம பேதபுத்தியில்லாதவனும, உத்தமனுமான பிராமணன் நம்மால் எப்போதும் பூஜிக்கத்தகுந்தவன கோக்களிடத்தில் விசுவாசமுள்ளவனும், பிரமசாரியாயிருப்பவனும, பரநிந்தைசெய்யாதவனும, அன்னியனுடைய திரவியங்களை அபகரிக்காதவனும், செய்நன்றிகுன்றாதவனும, உண்மைபகர்வோனும், தூய்மையுடையோனும், பரோபகாரசிந்தை மேற்கொண்டானும், தடாகங்கள், நந்தவனங்கள், தோப்புகள் முதலான தருமங்களைச் செய்கிறவனும,

வேதார்த்தங்களை அறிந்தவனும், புராணசிரவணம் செய்கிறவனும், ஸத்சகவாசம் செய்பவனும், இன்னும் இத்தன்மையான தருமங்களை இப்பாரதவருஷத்தில் செய்பவர்களும் எப்போதும் எவராலும் பூஜிக்கத்தகுந்தவராகின்றனர். இந்த தருமங்களில் ஒன்றையாவது செய்து அதனால் தன்னுடைய ஆத்துமாவை புனிதப்படுத்தாதவர் மூடர்களும் பாவிகளுமாகின்றனர். அவர்களினும் அஞ்ஞானிகள் யாரிருக்கின்றனர்? மகா புண்ணியகரமான இப்பரதபூமியில் ஜனனத்தை யடைந்து புண்ணியஞ்செய்யாதவர்கள் நல்ல அமிருதகலசத்தை யடைந்தும் அதை புசியாது விஷகலசத்தைத் தேடுவார்போலும். வேதப்பிரதிபாதிதியமான தருமங்களால் எவன் தனதாத்துமாவை புனிதஞ்செய்து கொள்ளவில்லையோ அவனே பாவிகளுக்குள் பெரும்பாவியான ஆத்தும ஹத்திபாவம் செய்தவனாகிறான். புண்ணியம் சம்பாதித்துக்கொள்ளவேண்டிய பூமியாகிய இப்பாரதபூமியையடைந்தும், எந்த மனிதன் தருமத்தைச்செய்கிறானில்லையோ அவனே எப்போதும் நரகவேதனையை அனுபவிப்பவன். அவனிலும் ஹீனபுத்தியுடையவன் வேறில்லை. நன்மை தீமையாகிய எக்கருமஞ்செய்யினும் அக்கருமபலனைத்தரும் இப்பரதகண்டத்தில் இருந்து பாவங்களைச் செய்பவன் க்ஷீரத்துக்காக பிரயாசைப்படும்போது காமதேனுவை விட்டு எருக்கஞ்செடியைத்தேடுவான்போலும்" என்று இவ்விதமாக, ஓ ஸநத்குமாரரிஷியே, தங்களுடைய போகங்களின் முடிவினால் பயந்த பிரமன் முதலிய தேவர்கள் இப்பாரதவருஷத்தை சிலாகிக்கின்றனர்.

வாருமையா மகாபாகவதரான ஸநத்குமாரரே! சகல கருமங்களுக்கும் பலத்தைக் கொடுப்பதான இந்த பாரதவருஷமானது தேவர்களுக்கும் கிடைப்பதற்கருமையான மகா புண்ணியபூமி இப்புண்ணியபூமியில் எவன் ஸத்கருமங்களைச் செய்கிறானோ அவனுக்குச் சமானமானவன் மூவுலகங்களிலுமில்லை. எவன் தனது கருமத்தின்முடிவை விரும்புகின்றானோ அவன் நரரூபத்தையுடைய ஹரியென்றே எண்ணத்தக்கவன். பரலோகத்தை யடையவேண்டுமென்கிற எண்ணங்கொண்ட ஒவ்வொருவனும் சோம்பலின்றி புண்ணியங்களைச்செய்து அக்கருமபலன்களை ஸ்ரீமந்நாராயணனுக்கு சமர்ப்பித்து விடுவானேல், பலாபேக்ஷையில்லாமல்செய்த அக்கருமங்களின் பலன் ஒருபோதும் குறையாது. ஆசையில்லாதவனென்றால் பலாபேக்ஷையுடன் செய்யாதவனே. தான்செய்யும் ஒவ்வொரு கருமத்தையும் 'என்கருமத்தினால் ஸ்ரீமந்நாராயணன் பிரீதனாகவேண்டும்' என்று பகவதர்ப்பணம் செய்யவேண்டும் பிரமலோக பரியந்தமான சமஸ்த உலகங்களும் புனர்ஜன்மத்தைத் தரத்தக்கவைகள் ஆகையால் அவைகளில் பற்றற்று நிஷ்காமனாயிருந்தால் பரமபதத்தையடைகிறான் சமுசாரபந்தத்தை விடவேண்டுமென்கிற எண்ணங்கொண்டவன் வேதப்பிரதிபாதிதியமானதாயும், தனதாசிரமத்துக்குரியதாயுமுள்ள கருமங்களை ஈசுவராமுகோல்லாசமாகச்செய்தால் பரமபதமெய்துகிறான் பலத்தை உத்தேசித்தாகிலும் உத்தேசியாமலாகிலும் சாஸ்திரவிதிப்படி கருமங்களைப் புரியவேண்டும் தனக்குரிய *வருணாசிரமாசாரங்களை விட்டவன்

* இதனை மன்வாதிஸ்மிருதிகள் செவ்வே உணர்த்தற்பாலன.

பதிதனாகிறான் என்று பெரியோர்களால் கூறப்படுகிறது. எந்த பிராமணன் நல்ல ஆசாரசீலனாயிருக்கின்றானோ அவனே நல்ல பிரமதேஜஸ்ஸுடையவனாயிருக்கிறான். அவனிடத்திலேயே பகவான் சந்துஷ்டனாயிருக்கிறார். அவனே இகபரலோகங்களில் சுகத்தையடைகிறான். தருமம், தவம், ஞானம் ஆகிய மூன்றும் ஸ்ரீமந்நாராயணனையேபற்றியவை. அவரிலும் இவற்றிற்கு விஷயமானது வேறொன்றுமில்லை. பிரமன்முதல் அணுபரியந்தமான ஸ்தாவர ஜங்கமங்கள் யாவும் வாசுதேவனாலேயே வியாபிக்கப்பட்டிருக்கிறது. அவரில்லாதது யாதொன்றுமில்லை. திரிமூர்த்திகளும் அவரே. தேவாசுரர் சித்தர் யக்ஷர்கள் எல்லாம் அவரே. அவரைவிட வேறொன்றுமில்லை. அந்த சர்வசிரேஷ்டரும், அணுரூபியாயும் மகத்ரூபியாயும் விளங்காநின்றவரும், சமஸ்தவியாபியாயுமிருக்கிற சர்வேசுவரனை மோக்ஷாபிலாஷையுள்ளவன் நமஸ்கரிக்கக்கடவன்

---

## ௪-வது அத்தியாயம்.

---

# பக்தியின்சிறப்பும் பாகவதலக்ஷணமும்.

சகலதருமங்களையும் சிரத்தையுடனே செய்தால்தான் கோரிய பலனைக்கொடுக்கும். எல்லாக்காரியங்களும் சிரத்தையால் சாதித்துக்கொள்ளத்தக்கனவே. சிரத்தையினாலேயே பகவான் திருப்தியடைகின்றார். பக்தியும் கருமமும் சிரத்தையுடனேதான் செய்யவேண்டும். (ஓ பிராமணோத்தமர்களே) சிரத்தையின்றி செய்யுங்காரியங்கள் நிஷ்பலமாகும் எம்மாதிரியாக சகல பிராணிகளுடைய வியாபாரத்துக்கும் உலகம் ஆதாரமோ அம்மாதிரியாகவே எந்த காரியங்களின் பலன்களுக்கும் பக்திதான் முக்கியகாரணம். சமஸ்த லோகங்களுடைய ஜீவனத்திற்கு ஜலம் எப்படி முக்கியாதாரமாயிருக்கிறதோ அப்படியே சமஸ்த பலன்களுக்கும் பக்திதான் காரணம். பூமியை ஆதாரமாகவைத்துக்கொண்டு எல்லாப்பிராணிகளும் ஜீவித்துக்கொண்டுவருவதுபோலவே, பக்தியை ஆதாரமாக வைத்துக்கொண்டு சமஸ்த தருமங்களையும் சாதித்துக்கொள்ளவேண்டும். சிரத்தையுள்ளவனுக்கே அறம்பொருளின்பம் வீடாகிய நான்கு புருஷார்த்தங்களும் சித்திக்கின்றன. தானங்கள், தவங்கள், பூர்ண தக்ஷிணைகளுடன்கூடிய யாகங்கள் இவைகள் எல்லாம் பக்தியின்றிச் செய்யப்பட்டால் ஸ்ரீமந்நாராயணன் திருப்தியடைகிறானில்லை. கோடி கோடிகணக்கான மேருமலைப்பிரமாணமுள்ள சுவர்ணங்களை பக்தியில்லாமல் தானம் செய்யினும் அது வியர்த்தமேயன்றி பயனைத்தரத்தக்கதன்று. பக்தியில்லாமல் மிகுந்த கடினமான தவம்புரிந்தாலும் அது கேவலம் தேகத்தை சோஷிக்குமேயன்றி இச்சித்தபலனைத் தரமாட்டாது. அதுபோலவே பக்தியில்லாமல் செய்யப்பட்ட யாகமும் சாம்பரிற்செய்த ஆகுதிக்கொப்

பாகும். சிரத்தாபக்திகளுடன் கிஞ்சித்தேனும் ஒரு கருமம் செய்யினும் அது சாசுவதமான சுகத்தைக் கொடுக்கும். வேதவிதிப்படி அசுவமேதயாகம் ஆயிரங்கணக்காகச்செய்யினும் பக்தியில்லையாயின் பயனுடைத்தன்று. ஸ்ரீ ஹரி பக்தியாகிற சிலாக்கியமான காமதேனு பலனைக்கொடுக்கக் காத்துக்கொண்டிருந்தும், ஞானமில்லாத மூடர்கள் அதை அடுத்து மோக்ஷமாகிற பாலைக் குடிக்காமல் சமுசாரமாகிற விஷத்தைப் புசிக்கிறார்கள். அஸாரமான இந்த சமுசாரத்தில் ஹரிபக்தியும், பாகவதசங்கமும் பொறுமையுமாகிய மூன்றும் ஸாரமுள்ளவை. ஓ பிரமபுத்திரரான ஸநத்குமாரரே! பிறர்சுகமுதலியவற்றை சகியாமையாகிற பொறாமையுடையவர்கள்செய்யும் பக்தி, தானமுதலிய கருமம் பயனற்றவையென்றறியற்பாலன. ஏனெனில், அவர்களுக்கு ஸ்ரீ ஹரி, அதிக தூரத்திலிருக்கிறார். (என்றால் பொறாமையுடையவர்களுக்கு பகவான் அனுகூலம் செய்யாரென்பது கருத்து.) பிறர்செல்வத்தைக்கண்டு மனவருத்தமடைகிறவர்களுக்கும், டம்பாசாரமுள்ளவர்களுக்கும், சிரத்தையின்றிக் கருமங்களைச் செய்பவர்களுக்கும், சிரேஷ்டமான தருமங்களைக்கேட்டும் அவ்வுண்மையை உணராதவர்களுக்கும், சாக்ஷாத் நாராயணரூபமான வேதப் பிரதிபாத்தியமான தருமங்களில் அசிரத்தையுடையவர்களுக்கும் ஸ்ரீமந்நாராயணன் பராமுகமாகவேயிருக்கிறான். எவனுக்குக் காலங்கள் ஸத்கருமமின்றி வீணாக கழிகின்றனவோ அவன், கருமான் துருத்தியைப்போல மூச்சுவிடுகிற பிரேதமாகிறான். தருமாதி சதுர்வித புருஷார்த்தங்களும் சிரத்தையுள்ளவர்களுக்கே பலிக்குமேயன்றி ஏனையோர்க்குப் பலியாது. எவன் தன் வருணாசிரமாசாரத்தைவிடாமல் ஹரிபக்திசெய்கிறானோ அவனே நித்திய சூரிகளால்* ஸேவிக்கப்படும் பரமபதத்தையடைகிறான் ஆசாரத்திலிருந்து தருமம் உண்டாகிறது. அந்த தருமத்துக்கு ஸ்ரீமந்நாராயணன் அதிபதி. ஆகையால் ஆசிரமத்துக்குரிய ஆசாரத்துடன் புரியும் பூஜையானது பகவானுக்கு பிரீதியை உண்டுபண்ணுகிறது. வேதவேதாங்கங்களை அறிந்தோனாயினும், எவன் தனக்குரிய வருணாசிரமாசாரங்களை விட்டுவிடுகிறானோ அவன் சர்வ கருமஹீனனானதால் பதிதனாகிறான். ஆசாரமில்லாத மூடனை வேதமும், ஹரிபக்தியும், சிவபக்தியும் பரிசுத்தப்படுத்தமாட்டா. மேலும் ஆசிரமாசாரஹீனனை புண்ணியக்ஷேத்திர யாத்திரையும், புண்ணியதீர்த்த ஸ்நாநமும், நாநாவித மகங்களும் ரக்ஷிக்கமாட்டா. ஆசாரத்தினாலேயே சுவர்க்கசுகமும் மோக்ஷமும் உண்டாகின்றனவென்றால் ஆசாரத்தினால் அடையப்படாதன எவை? அத்தன்மையான சமஸ்தாசாரங்களுக்கும் யோகங்களுக்கும் பக்திதான் முதற்காரணம். ஆசிரயித்தவர்களின் மனோரதத்தை பரிபூர்த்திசெய்யும் ஸ்ரீ விஷ்ணுவும் பக்தியினாலேயே பூஜிக்கப்படுகிறார். ஆகையால் இந்த பக்திதான் லோகமாதாவென்று சொல்லப்படுகிறது. சமஸ்த பிராணிகளையும் தத்தம் தாய்கள் போஷிப்பதுபோல சமஸ்த தார்மீகர்களையும் பக்தியே போஷிக்கிறது. தனது ஆசிர

* அனந்தகருட விஷ்வக்சேனாதிகள்.

மாசாரத்துடன்கூடியவனுக்கு ஸ்ரீ விஷ்ணுபக்தியுமிருந்தால் அவனை ஒப்பார் மூவுலகத்திலுமுளரோ? பக்தியினாலேயே கருமங்கள் பலனைத் தருகின்றன. அக்கருமங்களினாலேயே ஸ்ரீ ஹரி சந்துஷ்டனாகிறார். அந்த சந்தோஷத்தினால் ஞானமும், ஞானத்தினால் மோக்ஷமுமுண்டாகிறது. இவைகளுக்குக் காரணமான பக்தியோ பாகவதசங்கத்தால் உண்டாகிறது. அந்த சங்கமும் ஜன்மாந்தரங்களில் சம்பாதித்த புண்ணியங்களாலேயேயுண்டாகிறது. வருணாசிரம தருமசீலர்களும், பகவத் பக்தி உள்ளவர்களும், காமக்குரோதமுதலிய தோஷமற்றவர்களும், உலகங்களுக்குத் தமது நன்னடத்தைகளால தருமோபதேசம் செய்பவர்களும பாகவதராவார்கள். ஆகையினால் ஸாதுசங்கமானது பாவியினால் அடையத்தகுந்ததன்று. இந்த சிரேஷ்டமான சங்கமானது ஜன்மாந்தர சுகிருதிகளுக்கே கிடைக்கும். ஜன்மாந்தர பாவங்கள் எவனுக்கு நசிக்கின்றனவோ அவனுக்கே நல்லோர்சேர்க்கை உண்டாகிறது. தனது கிரணங்களால் பிராகிருதமான இருளை பகலில் நாசஞ்செய்யும் சூரியனிலும் தமது வாக்குகளால் உள்ளிருக்கும் அஞ்ஞான இருளை எப்போதும் நாசம்செய்யும் ஸாதுக்களே அதிக ஒளிபொருந்தியவர்கள். பகவத் பக்தியுள்ள தெள்ளியமனமுடையவர்கள் கிடைப்பது அருமை. அவர்களுடைய சங்கம் எவனுக்குக் கிடைக்கிறதோ அவனுக்கே ஸ்திரமான சாந்தியுண்டாகிறது.

இவ்வாறு சொல்லிக்கொண்டுவந்த நாரதபகவானைநோக்கி ஸநத்குமாரர் உரைப்பாராயினர். ஓ நாரதபகவானே! பாகவதர்கள் எவ்விதமானவர்கள்? என்ன லக்ஷணமுள்ளவர்கள்? அவர்கள் யாதுகருமம் புரிகின்றனர்? அவர்கள் அடையும் உலகமெது? இவைகளை அடியேனுக்குத் தேவரீர் பிரசாதித்தருளவேண்டும். தேவதேவனும் சர்வேசுவரனுமான ஸ்ரீ சக்கிரபாணியினுடைய பக்தராதலால் தேவரீரே சொல்லத்தக்கவர் என்று, இவ்விதம் பிரார்த்தியாநின்ற ஸநத்குமாரரைநோக்கி, நாரதபகவான் விளம்பலாயினர். வாரும் பிரமஞோத்தமரே! பரமரகசியமான இத்தேவிஷயத்தை பூர்வம் மார்க்கண்டேய மகரிஷிக்கு யோகநித்திரையைவிட்ட ஜகந்நாதனான ஸ்ரீ விஷ்ணு திருவாய்மலர்ந்தருளியிருக்கின்றார். பரஞ்சோதியாய், தேவதேவனாய், அநாதியாய், உலகரூபியாய், உலககர்த்தாவாய், பிரமருத்திர ரூபியாய் உலகங்களை சிருஷ்டித்தும் யுகாந்தத்தில பிரமாண்டங்களை சம்ஹரிப்பவனுமாய், ஸ்தாவர ஜங்கமரூபமான யாவும் நசித்தபின்னர் எங்கும் ஜலரூபமான உலகத்தில் தானொருவனே சேஷனாய் வடபத்திரத்தில் சயனிப்பவனாய், எண்ணிறந்த பிரமாண்டங்களினால் நிறைந்த உரோமங்களையுடையவனாய், தனது பாதத்தின் கட்டைவிரலுனியில் கங்கையையுண்டுபண்ணி சமஸ்தத்தையும் பரிசுத்தி செய்தவனாய், சூக்ஷ்மத்திலும் சூக்ஷ்மரூபியாய், பிரமாண்டங்களை பக்ஷித்து ஆலிலைத்தளிரில் அறிதுயில் அமரும் சர்வசக்தனான ஸ்ரீமந்நாராயணனுடைய திவ்விய லீலைகளை மகாபாக்கியசாலியான மார்க்கண்டேயர் ஸேவித்துக்கொண்டிருந்தார். சௌனகாதிரிஷிகள் இவ்வாறு புராணம் சொல்லிக்கொண்டுவந்த சூதபௌராணிகரைநோக்கி ஓ ஸ்வாமி, மகா கோரமான அந்தகாரத்தில்

சராசரங்களான யாவும் நசித்தபின்னர் ஹரி ஒருவரே மிகுந்து ஆலிலையில் துயில்வளர்ந்தாரென்று தேவரீர் திருவாய்மலர்ந்தருளியதை யாம் செவியுற்றனம். அப்படி சராசராத்மகமான சமஸ்தமும் பகவானால் பக்ஷிக்கப்பட்டு ஜலப்பிரளயத்தில் நசித்தபிறகு மார்க்கண்டேயர் ஒருவர்மாத்திரம் இருந்ததற்குக் காரணமென்ன? தேவரீர் அந்த அதி அற்புத அருத்தத்தை அன்போடு அறைய அடியோங்கள் அதி அவா அடைகின்றோம். ஹரிகதையாகிற அமிருதத்தை பானஞ்செய்ய யாருக்குத்தான் சோம்பலுண்டாகும்? என்று பிரச்னம் செய்யாநின்ற சௌனகாதிகளைநோக்கி சூதபௌராணிகர் பின்வருமாறு உரைப்பாராயினர்.

## மிருகண்டுமகரிஷியின் தவப்பெருமை.

கேளுங்கள் சௌனகாதிகளே! மிருகண்டு என்று நாமதேயமுடைய மகத்தான மகிமைபொருந்திய ஓர் மகரிஷியிருந்தார். அவர் சாளக்கிராமம் என்னும் புண்ணியதீர்த்தத்தில் பதினாயிரயுககாலம் ஆகாரமில்லாமல் பொறுமையுடன் ஐம்புலன்களையுமடக்கி சத்தியப் பிரதிஞ்ஞையுடன் தன்னைப்போலவே பிறரையும் பாவித்து சமுசார சுகத்திலும் சகதனுதிபோகங்களிலும் ஆசையில்லாதவராய், சர்வபிராணிகளிடத்திலும் ஹிதபுத்தியுடன் சுகதுக்கங்களை சகித்து, அநாதியான பிரம்மதத்துவத்தியானித்துக்கொண்டு அதி உக்கிரமான தவம்புரிந்தார். அத்தன்மைவாய்ந்த தவத்தினால் நடுக்கமுற்ற இந்திராதிதேவர்கள், க்ஷீரசாகரத்தின் உத்தரதீரத்தை யடைந்து, சர்வேசுவரனாய், சர்வோபத்திரவநிவாரணனாய், தேவதேவனாய், ஜகத்குருவாய் விளங்காநின்ற பத்மநாபனைச் சரணமடைந்து துதித்தார்கள். நாராயணா, குறைவற்றவனே, நாசமற்றவனே, சரணமென்றடைந்தோரைக் காக்கும் பெருமானே, மிருகண்டு மகரிஷியின் உக்கிரமான தவத்தால் பயந்து தேவரீரைச் சரணமடைந்த அடியோங்களை ரக்ஷித்தருளவேண்டும். தேவர்களுக்கும் அதிதேவர்களான பிரமருத்திராதிகளுக்கும் ஈசனே, சங்கசக்கர கதாபாணியான சுவாமி, உலகரூபியாயும், பிரமாண்டங்களுக்குக் காரணனாகியும், உலகங்களைப் பரிசுத்தி செய்பவனாகியும், உலகநாதனாகியும், உலகங்களுக்கு சாக்ஷியாயும் நியாயமார்க்கத்தாலறியத்தகுந்தவனாகியும், அதற்கு தானே காரணமும் சாக்ஷியுமாய் அதுவே தன் வடிவமாயிருப்பவனாகியும், கேசி என்னும் அசுரனைக் கொன்றவனாகியும், மது என்னும் தைத்தியனை சம்ஹரித்தவனாகியும், பஞ்சபூதஸ்வரூபியாகியும், ஞானரூபியாகியும் இராநின்ற உமக்கு தெண்டனிடுகிறோம். எல்லாவற்றிற்கும் முதன்மையராய், தூய்மையராய், தமோகுணரஹிதராய், ஸத்வகுணஸ்வரூபமாய், ரூபமற்றதாய், பக்தர்களை ரக்ஷிக்கும்பொருட்டு நல்ல ரூபமுடையதாய், ஏகரூபியாய், நித்தியமான தேவஸ்வரூபராய், கோபிராமணர்களுக்கு ஹிதம்விளைப்பதாய், வைதவிதமாய் விளங்கும் உமது ஸ்வரூபத்துக்கு பிரணாமம்செய்கின்றோம்.

பக்திபொருந்திய மனதை அக்கிரஹிக்கின்றவனாயும், வேதப்பிரதிபாத்தியனுமாயுமிருக்கின்ற தேவரீரை நமஸ்கரிக்கிறோம். ஸ்ரீவிசன்னகிமுதர்ப்புடி

தேவஸ்வரூபியாயும், சூரியாதி தேஜஸ்ஸ்வரூபியாயும், ஹவ்ய* கௌவிய ங்களை† புசிக்கும் அக்கினிஸ்வரூபியாயும், நித்தியனும், ஸமஸ்தர்களாலும் வந்திக்கப்படுபவனும், சராசரரூபியாயும், ஸ்மரித்தவர்களின் கஷ்டத்தை நாசம்செய்பவனுமிருக்கிற தேவரீரை அடிக்கடி தெண்டம்சமர்ப்பிக்கிறோம்; என்று இவ்வாறு தேவர்களால் செய்யப்படும் தோத்திரங்களை ஏற்று ஸ்ரீமகா லக்ஷ்மீகாந்தனை பகவான் சங்கசக்கரகதாதரனாய் அந்ததேவர்களுக்குப் பிர த்தியக்ஷமானார். மலர்ந்த செந்தாமரையிதழ்போன்ற திருக்கண்களையுடையவ ராயும், கோடிசூரியப்பிரகாசம்பொருந்திய திருமேனியுடையவராயும், சமஸ் தாலங்காரவஸ்துக்களால் அலங்கரிக்கப்பட்டவராயும், ஸ்ரீவற்சமெனுமறுவார் ந்த திருமார்பையுடையவராயும, தாம் தரிக்கும் சுவர்ணமயமான பீதாம்பரம் அதிசுந்தர சுவர்ணயக்ஞோபவீதம் முதலான ஆடையாபரணங்களுக்கும் அழகிடும் திருமேனியுள்ளவராயும், பொற்றாமரைமலர்போன்ற திருவடியை யுடையவராயும் ரிஷீசுவரர்களால ஸ்துதிக்கப்பட்ட ஸ்ரீமந்நாராயணனைத் தரி சித்து பக்திரசப்பெருக்கால் அவர் உபயசரணாரவிந்தங்களைத் தஞ்சமென் றடைந்தார்கள். அப்படி சரணடைந்த தேவர்களைக் கடாக்ஷித்து தயாநிதியான பகவான் மேககர்ச்சனம்போன்ற கம்பீரமான தமது சப்ததால் சமுத்திர ஒலியை அடக்கி ஆத்தகாம்பிரியமான வசனங்களை வசனிக்கிறார். ஓ தேவதை களே, மிருகண்டு மகரிஷியின் தவத்தாலுண்டாகிய உங்களுடைய மனோதுக் கத்தை நான் நன்கறிவேன. அம்மிருகண்டுமகரிஷி சத்ஜனராதலால் உங்களு க்கு ஓர் பாதகமும் செய்யார். சம்பத்துள்ளவர்களாயினும் ஆபத்துள்ளவர்க ளாயினும் தங்கள் தங்களால் பரிசுத்தர்களான ஸாதுக்கள் எவ்விதத்திலும் இத ரருக்கு பாதகம் விளைக்கார்கள். விஷயங்களாகிற சத்துருக்களால் எப்போதும் உபத்திரவிக்கப்பட்டவன் அவ்வுபத்திரவங்கள் தன்னை அனுகாவண்ணம் காத்துக்கொள்ளாது பிறர்களிடம் துவேஷம்செய்கிறானே அவன மூடனாகி றான். ‡ஆத்தியாத்துமிக ஆதிபௌதிக ஆதிதெய்விகமென்கிற தாபத்திரயங்க ளாகிற சத்துருக்களால் உபத்திரவிக்கப்பட்டவன் இதரரை உபத்திரவிக்க சக்தியுள்ளவனாய் எவ்விதம் ஆகுவன்? இப்படி மனோவாக்குக் காயங்களால் பிறருக்கு உபத்திரவம் விளைவிப்பவன் தான் ஒருகாலும் சுகத்தை அடைவ தில்லை. ஏனெனில் தன்னால் உபத்திரவிக்கப்பட்டவர்கள் தன்னையும் தொக்

* ஹவ்யம் என்பது தேவர்களை உத்தேசித்துச்செய்வது.

† கௌவியம் என்பது பிதுர்க்களை உத்தேசித்துச்செய்வது.

‡ ஆத்தியாத்துமிகம் - தன்னால் உண்டாவது, அதாவது ராக துவேஷ லோப மோக மத மாச்சரியாதிகளாலுண்டாவது.

ஆதிபௌதிகம் - பூதங்களாலுண்டாவது; அதாவது தேவாசுரயக்ஷரா [illegible] ராதிகளாலும் மனுஷ்ய பசு பக்ஷி மிருகாதிகளாலும் உண்டாவது.

ஆதிதெய்விகம் - தெய்வத்தாலுண்டாவது; அதாவது அதிசீத [illegible], மழை, இடி முதலியவற்றாலுண்டாவது

இரவு செய்வார்களென்கிற சங்கை அவனுக்கிருக்குமன்றோ? அதிக லோபமான மனதுடையவராய் அதனால் தமது செல்வம் குன்றியவராய் பகவத்மாயையால் மோகிக்கப்பட்டவர்களுக்குப் பயமென்பது ஸ்திரமாகவேயிருக்கிறது. பயத்த மனமுடையவர்கள் எப்போதும் துக்கத்தையேயடைகிறார்கள். சங்கையில்லாதவர்கள் எப்போதும் சுகத்தையேயடைகிறார்கள். சமஸ்தபிராணிகளிடத்திலும் ஹிதபுத்தியுள்ளவனும் பொறுமையுள்ளவனும் எப்போதும் சங்கையில்லாதவனாதலால் சுகத்தையேயடைகிறான் எந்தமனிதன் பொறாமை த்வேஷம் இவ்விரண்டையும்விட்டு உலகங்களுக்கு ஹிதத்தைச்செய்கிறானோ அவனே சாதுக்களால் இகலோக பரலோகங்களில் பயஹேதுவில்லாதவனென்று சொல்லப்படுகிறான். ஓ தேவர்களே, மிருகண்டுமகாரிஷி உங்களை பாதிக்கார், நீங்கள் சுகமாய்ப்போகலாம்; நான் உங்களுக்கு சமரக்ஷணத்தைச்செய்கிறேன்; விசனத்தை விட்டுவிடுங்கள். காயாம்பூவண்ணனை திருமால் இவ்விதமாக தேவர்களுக்கு வரமளித்து அவர்கள் ஸேவித்துக்கொண்டிருக்கும்போதே அந்தர்த்தானமாயினார். சந்தோஷமடைந்த மனமுடையோர்களான அமரர்களும் சுவர்க்கலோகத்தை யடைந்தார்கள். ஸ்ரீபகவானும் திருப்தராய் மிருகண்டுமகரிஷிக்கு பிரத்தியக்ஷமாயினார். தவநிலையிலிருந்த மிருகண்டுமகரிஷியும் திடமான ஸமாதியில் ஸ்வயம்பிரகாசமாயும் நித்தோஷமாயுமிராநின்ற பிரம்மஸ்வரூபத்தை முதலில் தரிசித்து காயாம்பூபோன்ற நிறமுடையவராயும் திவ்யபீதாம்பரத்துடன் தோன்றிய பகவானைக் கண்ணாரக்கண்டு மகத்தான குதூகலத்தையடைந்தார் பிறகு சமாதியிலிருந்து கண்களைவிழித்துக்கொண்டு தெளிந்துவிளங்கும் திருமுகத்துடன் சாந்தமூர்த்தியாய், சிருஷ்டிகர்த்தாவாய், நாசமற்றவனாய், தேவதேவனாய் விளங்காநின்ற சக்கரபாணியாகிய ஸ்ரீமந்நாராயணனுடைய திருவடித்தாமரைகளில் ஆனந்தபாஷ்பம் பெருக, தேகமெங்கும மயிர்க்கூச்செறிய தெண்டம்சமர்ப்பித்து தமது ஆனந்தக்கண்ணீரால அவனது திருவடிகளை அலம்பி மிருகண்டுவானவர் கைகளைக்கூப்பி சிரத்தில்வைத்து ஸ்துதிசெய்ய வாரம்பித்தார். பராசக்திக்கு அதிபதியும், பரப்பிரம்மரூபியும், பத்த முக்த நித்தியரென மூவகைப்பட்ட சேதனர்களுக்கும் பரனும், கரையில்லாத சமுசாரசாகரத்துக்குக் கரையையடைதற்குக் காரணனும், சுத்தஞானத்தை உண்டுபண்ணுபவனும், மேலான பிராயச்சித்தங்களிலும் தோஷமனுகாவண்ணம்செய்யும் பரிசுத்தஸ்வரூபனும், பெயர் ஜாதி முதலான குறிப்பற்றவனாயும், அநேக ஸ்வரூபமுள்ளவனாயும், நிஷ்களங்கனாயும், ஆதிகாரணனாயும், ஸர்வேசுரவனுமாய் வேதாந்தங்களால் அறியக்கூடியவனும், சிருஷ்டிக்கு முந்தியுமிருக்கும் அனாதிபுருஷனும், பிரமாதி சகலஜகத்ரூபியும், தம் ஸ்வரூபத்தில் இறையும் அகலாத பெரியபிராட்டியார் சேர்த்தியுடையவனும், சர்வேசுரனுமான தேவரீரை வணங்குகிறேன். நியாஸிகளும், ஆசையற்றவர்களும், விஷயசுகத்தை விட்டவர்களும், சமஸ்ததோஷத்தின் அகற்றினவர்களுமான யோகேஸ்வரர்களுக்கு ஞானதிருஷ்டியில் ஸேவைசாதித்த பரிசுத்தனும், சர்வோத்க்ருஷ்டனும், சம்சாரநிவர்த்திக்குக் கார

னுமாய் விளங்காநின்ற தேவரீரை நமஸ்கரிக்கிறேன். ஸ்மரிக்கிறவர்க ளுடைய ஆர்த்தியை நாசம்செய்கிறவனும், சாவியாபியும், சரணமடைந் தோரை ரக்ஷிப்பவனும், யாவராலும் ஸேவிக்கத்தகுந்தவனும், லோகாதார னும், தயாரூபியுமான தேவரீரை ஸேவிக்கிறேன். நாசமற்றவனும், அனேக திருமேனிகளையுடையவனும், அனேக திருவடி திருக்கண் திருமுடி திருத் தொடை திருக்கைகளையுடையவனும், அனேகத் திருநாமமுடையவனும், நித்திய புருஷனும், அனேககோடி யுகரூபியாயுமிருக்கிற தேவரீருக்கு தெண்டம்சமாப் பிக்கிறேன், என்றிவ்வாறு ஸ்தோத்திரஞ்செய்யாநின்ற மிருகண்டுமகரிஷி யைக் கடாக்ஷித்து சங்கசக்கரகதாபாணியான ஸ்ரீபகவான் அதிசந்துஷ்ட னும் நீண்ட தனது நான்கு திருக்கைகளாலும் ரிஷியை ஆலிங்கனம்செய்து மிகுந்த பிரீதியுடன் "நீர வேண்டியவரங்களைக் கேளும், உம்முடைய இந்த உக்கிரமானதவத்தினாலும் ஸ்தோத்திரத்தினாலும் சந்தோஷமடைந்தேன," என்று திருவாய்மலர்ந்தருளின பகவானைப்பார்த்து மிருகண்டு சொல்லுகிறார்.

ஓ தேவதேவனே, லோகநாதனே, சந்தேகமில்லாமல் அடியேன் தன னியனுகினேன். ஏனெனில் தேவரீருடைய சேவையானது பாவிகளுக்குக் கிடைப்பதருமை. பிரமாதிதேவர்களாலும் வேதங்களாலும் இன்னும் காணப் படாத தேவரீரை அடியேன் கண்ணுரக்காணகிறேனுகில இதைவிட விசேஷ மென்ன இருக்கின்றது? யாதொரு பரபிரம்மரூபியான தேவரீரை சமதரி சிகளாயும் சாதுக்களாயுமிராநின்ற பாகவதர்களும காணவில்லையோ அப் படிப்பட்ட தேவரீரை நான் பார்க்கிறேனென்றால இதைவிட விசேஷம் என்னசொல்லப்போகிறேன்? ஞானிகளும், யோகிகளும் எந்த தேஜஸ் ஸைக்காணவில்லையோ, பரோபகாரமசெய்பவர்களும், குரூரஸ்வபாவமில் லாதவர்களும் இன்னும் எந்த பிரம்மத்தையறியவில்லையோ அந்த ஸ்ரீமந் நாராயணனான தேவரீரை அடியேன் ஸேவித்தேன், ஓ ஜகத்குருவான ஜனார்த்தனா, இந்த ஸேவையினாலேயே பரிபூரண மனோரதனுயினேன். தேவரீருடைய சேவை பாவிகளுக்கு சுவப்பனத்திலும் கிடைக்காது. தேவரீ ருடைய திருநாமத்தை நினைத்தமாத்திரத்திலேயே மகாபாவிகளும் பரம பதத்தை யடைகிறார்களென்றால ஸேவித்தவர்களுக்குக் கேட்கவேண்டிய தென்னவென்றிவ்வாறு பகவத்குணனுபவம் செய்யாநின்ற மிருகண்டுமக ரிஷியைப்பார்த்து பகவான் திருவாய்மலர்ந்தருளுகிறார். ஓ பிராம்மணோத்த மரே நீரசொன்னது சத்தியந்தான்; இதனாலேயே சந்தோஷித்தேன்; என் னுடைய ஸேவை ஒருகாலும் வீணாகாது; ரிஷிகள் விஷ்ணுபக்திசெய்தவன் குடும்பியாகிறுனென்று சொல்லுகிறார்கள். ஸாதுக்கள் வசனம் பொய்யாக மாட்டாதாகையால் அவர்கள்வார்த்தையை உண்மையாகச் செய்கிறதின் பொருட்டு உமக்கு புத்திரனாக அவதரிக்கிறேன். அப்புத்திரன் சகல குணநிதியாயும், தீர்க்காயுளுள்ளவனாயும, சர்வலக்ஷணசம்பன்னனாயும் இருப் பான். நான் எந்தகுலத்தில் அவதரிக்கிறேனோ அந்த ஸத்குலமானது மோ க்ஷத்தையடைகிறது. நான் சந்துஷ்டனாயிருக்கும்போது உமக்கு எதுதான் அசாத்தியம்? எவன் என்னிடத்தில் பக்தியுள்ளவனும், என்னை உத்தே

சித்து யாகம்செய்கிறவனும், என்னையே கதியாய் எண்ணினவனும், என்னையே தியானம்செய்கிறவனுமாயிருக்கிறானோ அவனும், இன்னும என் பிரீதிக்காகவே சகலகருமங்களையுஞ் செய்கிறவனும் தன் குலமுழுமையும பகவத்சாரூபத்தை அடைவிக்கிறான் ஓ பிராமணசிரேஷ்டரே, உம்முடைய இந்த ஸ்தோத்திரத்தினாலும, தவத்தினாலும சந்தோஷித்தேன். ஆதலால் உமக்குப புத்திரனாய் உதித்து கைம்மாறுதவுவேன்; சந்தேகமின்று, என்று மிருகண்டு மகரிஷியைப்பார்த்துச் சொல்லி தமது திவ்விய திருக்கையை அவர் சிரசின மேலவைத்து அவருடைய சரீரத்தைத் தடவிக்கொடுத்து அப்போதே அந்தர்த்தானமாயினார். மிருகண்டுமகரிஷியும மிகுந்த ஆனந்தபரிதராய் தன்னைப புண்ணியவானென்று நினைத்துக்கொண்டே ஆசிரமம்சென்றனர்.

---

## ௫-வது அத்தியாயம்.

## மார்க்கண்டேயசரிதையும் பாகவதலக்ஷணமும்.

பகவானிடமிருந்து வரத்தைப்பெற்ற விஷ்ணுபூஜாபரனான மிருகண்டு மகரிஷி பகவானைப்போல்விளங்கும் மார்க்கண்டேயனென்னும புத்திரனைப் பெற்றார். அம்மார்க்கண்டேயர் மகாபாக்கியசாலியாயும், தயவுள்ளவராயும, தருமத்தில் ஆசக்தியுள்ளவராயும், தைரியசாலியாயும, திடமான பிரதிக்ஞையுள்ளவராயும், சூரியனுக்குச்சமமான தேஜஸ்பொருந்தினவராயும், இந்திரியங்களை நிக்கிரகித்தவராயும், பொறுமையுள்ளவராயும, விசேஷ ஞானமுள்ளவராயும், சமஸ்த தத்துவார்த்தங்களை யறிந்தவருமாய் பகவத் பிரீதிகரமான சிரேஷ்டமாகிய தவம்புரிந்தார். இவ்விதம் மகாபுத்திமானான மார்க்கண்டேய மகரிஷியின் தவத்தினால் ஆராதிக்கப்பட்ட ஸ்ரீமகாவிஷ்ணுவானவர் பிரசன்னராய் புராண சம்ஹிதைசெய்யும்படி அவருக்கு வரமளித்தார். சிரஞ்சீவியாயும் தேவதேவனான ஸ்ரீசக்கரபாணியின பரம பக்தனுமான மார்க்கண்டேயமகரிஷி சாக்ஷாத் நாராயணாம்சமென்றே சொல்லப்படுகிறாராகையால் மகாப் பிரளயத்திலும் ஜனார்த்தனனான பகவான் தமது மகிமையைக் காண்பிக்கும்பொருட்டு அவரை சம்ஹரிக்கவில்லை. மகாபயங்கரமான அந்த ஜலத்திலே உலர்ந்த சருகைப்போல் மிதந்துகொண்டு ஸ்ரீபகவான் சயனித்துக்கொண்டிருந்தவரையில் ஸேவித்துக்கொண்டிருந்தார். அவ்வண்ணம் அவர் இருந்தகாலத்தை இவ்வளவென்று சொல்லுகிறேன் கேளும் பிரமபுத்திரனே, பதினைந்து நிமிஷங்கள் ஒரு காஷ்டை; காஷ்டை முப்பதானால் ஒரு கலை; கலை முப்பதானால் ஒரு க்ஷணம்; க்ஷணம் ஆறானால ஒரு நாழிகை; அந்நாழிகை இரண்டானால் ஒரு முகூர்த்தம்; முப்பது முகூர்த்தம் இரவும் பகலுமாகிய ஒருநாள்; முப்பதுநாள் ஒரு மாதம்; அந்தமாதம் இரண்டுபக்ஷ

மூள்ளது இரண்டுமாதம் ஒரு இருது, மூன்று இருது ஒரு அயனம், இரண்டு அயனம் ஒரு வருஷம். இந்த மனுஷ்யவருஷம் தேவர்களுக்கு ஒரு நாள். அதில் உத்தராயணம் பகல், தக்ஷிணாயனம் இரவு மனிதர்களின் ஒரு மாதமானது பிதுர்க்களுக்கு ஒரு நாள் சூரியசந்திரகிலைகளால உத்தமமான கற்பத்தைத தெரிந்துகொள்ளவேண்டும். ஒரு தேவயுகமென்பது பன்னீராயிரந் தேவவருஷங்கூடியது தேவமானத்தில இரண்டாயிரம் யுகங்கள் பிரமனுடைய தினம் என்றும், அவைகளே மனிதர்களுக்கு இரண்டு கற்பங்களென்றும் சொல்லப்படுகின்றன. எழுபத்தொரு தேவயுகங்கள் ஒரு மனவந்தரம். பதினான்கு மனவந்தரங்கள் பிரமனுக்கு ஒரு பகல். பகல் எவ்வளவோ அவ்வளவே யிரவும் அவ்விராத்திரிகாலத்தில மூவுலகுகளும் நாசமுறுகின்றன இத்தன்மையான பிரமதேவனுடைய ஒரு தினமானது மனுஷவருஷத்தால் எத்தனை ஆயிரங்கொண்டதோ அந்தக்கணக்கைச சொல்லுகிறேன் கேளும மனுஷமானத்தில ஆயிரம சதுர்யுகம சதுர்முகனுக்கு ஒரு பகல. இம்மாதிரியாக மாதமும வருஷமும் அறியவேண்டும இந்த சதுர்முகனுடைய இரண்டு பரார்த்தகாலம ஸ்ரீமகாவிஷ்ணுவுக்கு ஒருபகலபோலாகும் இரவும இதே அளவுள்ளது இந்த கணக்குள்ள இராத்திரிகாலமவரையில மகா பயங்கரமான ஜலப்பிரளயத்தில் ஸ்ரீமந்நாராயணனுடைய சக்தியால ரக்ஷிக்கப்பட்ட மார்க்கண்டேய மகரிஷி அப்பரமார்த்தமானவைத் தியானஞ்செய்து கொண்டு அநந்தசயனஸ்தானத்தில முனகூறிய வாங்கு உலர்ந்த சருகைப்போல விருந்தார். பின்னர அம்மகாவிஷ்ணுவுக்குப பகல் ஆரம்பித்தவுடன யோக நித்திரையைவிட்டு பிரமரூபியாய் ஸ்தாவரஜங்கமரூபமான இவ்வுலகத்தைச் சிருஷ்டித்தார். இவ்வண்ணம சமஸ்த ஜலங்களையும உபசம்ஹரித்து சராசரமான இவ்வுலகத்தைச சிருஷ்டிசெய்ததை மார்க்கண்டேயர பார்த்து ஆச்சரியமடைந்து பரமபக்தியுடன பகவானை நமஸ்காரஞ்செய்து அவனுக்குப பிரீதிகரமான வாக்குகளால் துதிக்கலாயினார் அனேக சிரசுள்ளவனும், ஜலசாயியாய், வாசுதேவரூபியாய், ஆதாரமற்றவனும், திவ்விய தேஜோமயனும், சகல லோகாதாரனும், பரிசுத்தனும, சமஸ்தர்களாலுமறியப்படவேண்டியவனும், எல்லாவஸ்துக்களிலும எல்லாவிடங்களிலும எல்லா காலங்களிலும் ஒரேவிதமானவனும், சச்சிதானந்தரூபியாய், பரர்களான பிரமருத்திராதிகளுக்குப பரனும், சகலரூபியாய், அனாதியாய், சிரேஷ்டனும், அனந்த கல்லியாணகுண பரிபூரணனும, ஹேயகுணரகிதனும், சாந்தரூபியாய், பிரகிருதியைக் கடந்தவனும், மாயாதிகாரியாய், பிராகிருதரூபமில்லாதவனும், பக்த சமரக்ஷணார்த்தம் வெகுரூபத்தைத் தரிப்பவனும் விளங்காநின்ற தேவரீருக்குத் தண்டனசமாப்பிக்கிறேன இந்த சமஸ்தலோகங்களையும் சிருஷ்டி திதி சம்ஹாரமாகிற திருவிளையாடல்களைப புரியாநின்ற பகவானே நீயே தேவரீரை நமஸ்கரிக்கிறேன். சர்வேசுவரா, பரமானந்தரூபா, சரணாகதியடைந்தோரைக் காக்குமெம்பெருமானே, கருணைக்கடலே, தேவரீர அடியேனை ரக்ஷித்தருளவேண்டும் என்று இவ்வண்ணம் ஸ்தோத்திரம் செய்த பிராமணோத்தமரைப் போர உகந்தருளி, சங்குசக்கர கதாபாணி

யான லோகநாதன் திருவாய்மலர்ந்தருள்வாராயினா. ஓ பிராமணசிரேஷ்டரே, உலகத்தில என்னிடத்தில பக்தியுள்ள மனமுடைய பாகவதரிடத்து நான் பரமதிருப்தியுள்ளவன். எப்போதும் நான் அவர்களை ரக்ஷிப்பேன் நானே அந்தபாகவதரூபியாய் சகல ஜந்துக்களையும் பாதுகாக்கிறேன. ஆனதால் பரமபாகவதரான உம்மை ரக்ஷிக்க யாது தடையுள்ளது? என்றிவ்வாறு திருவாய்மலர்ந்தருளின பகவானைபபார்த்து, பாகவதர்கள் என்ன லக்ஷணமுள்ளவாகள்? எந்தகருமத்தினால பாகவதர்களாய் ஜனிக்கிறார்கள்? இவைகளை அறிந்துகொள்ள ஆவல்கொண்டிருக்கிறேன் சாதிக்கவேண்டும் என்று பிரார்த்தித்தாா அப்போது பகவான் சொல்லததொடங்கினார்

பாகவதருடைய லக்ஷணத்தைச சொலலுகிறேன கேளும் மாாக்கண்டேயரே, அவர்களுடைய மகிமையை கோடிவருஷங்கள் சொனனாலும முடியாது. சாவஜந்துக்களிடத்தும் ஹிதமுள்ளவரும, குணதூஷணைபுரியாதவரும, பொறாமையறறவரும், மாறசரியமில்லாதவரும, இநதிரியநிககிரகம் செய்தவரும, ஆசையிலலாதவரும, பொறுமையுள்ளவரும, மனோவாக்குக் காயங்களால ஒருவருககும் பீடைசெய்யாதவரும, பறறற்றவரும, ஸத்கதைகளைக கேட்க விருபபஙகொணட ஸ்ரீ விஷ்ணுபக்தியுள்ள ஸாதுககளும பாகவதரெனபபடுவர் எவாகள கஙகையினிடத்தும சாவேசுவரனிடத்தும பகதி செய்வதுபோல மாதா பிதாககளிடததில பகதியுடன சிசுருஷை செய்கிறாகளோ அவர்களும, தேவாாசசனையை பகதியுடனசெய்பவரும, தேவாாச்சனை செய்பவருக்குச் சகாயம்செய்பவரும், தேவாாசசனையைப்பாாதது சந்தோஷிபபவரும, பிரமசாரிகளுககும சநநியாசிகளுககும உபசாரமசெய்பவர்களும், பரநிநதை செய்யாதவாகளும, எவாகளிடததிலும இனசொல் பகாவோரும், ஒருவனுடைய குற்றம் நோககாது குணம் நோககுபவரும், சத்துருமித்திராிடத்தில வெறுபபு விருபபற்று சமமாயிருபபவரும, தருமசாஸதிரம் சொலலுபவரும், உணமை பகாவோரும், ஸாதுககளுககு சிசுருஷைசெய்பவரும், புராணாததஙகளைச் சொலலுபவரும், அவைகளைக கேட்பவரும, புராணார்ததம் சொலலுகிறவரிடம் பக்தியுடையவரும, கோ பிராமணபூஜைசெய்டவரும, தீர்த்தயாத்திரைசெய்பவரும், பிறாசம்பததைக்கண்டு சந்தோஷிபபவரும், பகவந்நாமசஙகீர்த்தனம்செய்பவரும், நந்தனவனமவைபபவரும, குளஙகளைவெட்டிக் காப்பவரும், தோபபுவைபபவரும, கிணறுவெட்டுபவரும், கோவில்கட்டுபவரும், காயத்திரி ஜபிபபவரும் பகவந்நாமங்களைக்கேட்டு மயிாக்கூச்செறிய ஆனந்திப்பவரும், துளசிவனஙகளைக்கணடு நமஸ்காரம்செய்பவரும், அதின் கட்டையினால காதில அலங்கரித்துககொள்பவரும், துளசியின்கந்தத்தைமோந்து சந்தோஷிப்பவரும், துளசி மிருத்திகையை எடுத்துக்கொள்பவரும், வருணாசிரமாசாரஙகளை வழுவுதலின்றி அநுஷ்டிபபவரும், அதிதிபூஜைசெய்பவரும், வேதார்த்தங்களைச்சொல்பவரும், மங்களத்துக்கெல்லா மங்களமான ஸ்ரீ விஷ்ணுவின் திவ்விய திருநாமங்களைக் கீர்த்திப்பவரும், தாமரைமணியைத் தரித்துக்கொள்பவரும், சிவனை அன்புடன் அர்ச்சிக்கவிரும்புவரும், திரிபுண்டரதாரிகளும், ருத்திராக்ஷதாரிகளும், சிவனையாகிலும் விஷ்ணுவையாகிலும்

தமக்கிஷ்டமான ரூபத்தை யாகங்களினால் ஆராதிப்பவரும், சாஸ்திரார்த்தங்களை செவ்வையாயறிந்து பிறர்களுக்கு உபதேசிப்பவரும், சமகுணம் பொருந்தியவரும், ஸ்ரீமந்நாராயணமூர்த்தி பேதங்களான பிரம விஷ்ணு ருத்திரர்களிடம் சமபுத்தியாயிருப்பவரும், தண்ணீர்ப்பந்தல்வைப்பவரும், அன்னதானம் செய்பவரும், ஏகாந்தசிவிரதம் அநுஷ்டிப்பவரும், கோதானம் கன்னிகாதானம்செய்பவரும், என்னை உத்தேசித்து கருமங்களைப்புரிபவரும் பாகவதர்ராவார். இவர்களின் மகிமையை நான் நூறுகோடிவருஷம் சொல்லினும் முடியாது. ஓ பிராமணோத்தமரே, நீர் எப்போதும் நல்ல சீலமுள்ளவராயும், சமஸ்தபிராணி ஹிதராயும், பொறுமையுள்ளவராயும், விவேகமுள்ளவராயும், தருமசீலராயும் மறுபடி யுகாந்தம்வரையில் சிரஞ்சீவியாய் நம்முடைய மூர்த்தியை தியானம்செய்துகொண்டு ஸாத்துவீகதருமத்தை அநுஷ்டித்து யுகாந்தத்தில் பரமபதத்தை யடையக்கடவீர் என்று மார்க்கண்டேயருக்கு வரமளித்து அங்கேயே அந்தர்த்தானமாயினார். மகாபாக்கியசாலியான மார்க்கண்டேயர் ஹரிபக்தியுடன் ஸாத்துவீகதருமங்களையும் ஸாத்துவீகயாகங்களையும் செய்துகொண்டு சாளக்கிராமம் என்னும் புண்ணியக்ஷேத்திரத்தில் மேலான தவம் புரிந்து பகவத்தியானத்தினால் ஆயுளைக்கழித்து பரமானந்தசுகத்தையடைந்தார். ஆகையால் ஓ மகாரிஷியே, சமஸ்தஜனங்களிடத்திலும் ஹிதபுத்தியுடையவனாய் ஹரிபக்திசெய்பவன் சந்தேகமில்லாமல் தன் மனதில்கோரிய எல்லாவற்றையுமடைகிறான். நீர்கேட்ட பாகவதமகிமையை உமக்குரைத்தேன் இன்னும் என்னகேட்கவேண்டுமோ அதைக்கேளும் சொல்லுகிறேன் என்று நாரதபகவான் சொல்லியருளினார்.

---

௯ - வது அத்தியாயம்.

# கங்கையின் பிரபாவம்.

இவ்விதமாக பாகவதர்களின் மகிமையைக் கேட்டு ஸநத்குமாரர் ஆனந்தபரிதராய் நாரதபகவானைப்பார்த்து மறுபடியும் பிரசன்னம் பண்ணுகிறார். ஓ சுவாமி தேவரிஷிசிரேஷ்டரே, புண்ணியக்ஷேத்திரங்களுள் உத்தமமான க்ஷேத்திரம் எது? தீர்த்தங்களுக்குள் உத்தமமான தீர்த்தம் எது? இவைகளை அடியேனிடத்து கிருபைகூர்ந்து சாதித்தருளவேண்டுமென்று பிரார்த்தியாநின்ற ஸநத்குமாரரைப்பார்த்து நாரதபகவான் உரைப்பாராயினர். பிராமணோத்தமரே, பரமரகசியமான சங்கதியைச் சொல்லுகிறேன் கேளும்: இதைக்கேட்கின் சகலசெல்வங்களும் உண்டாகும், கெட்டகனவுகள் உண்டாகா, சமஸ்தபாபங்களும் நசித்து புண்ணியபலமுண்டாகும். அது சமஸ்தவியாதிகளையும் நிர்மூலப்படுத்தும், ஆயுளை விருத்திசெய்யும், துஷ்டசுபாவமுடைய பிசாசங்களை நிவர்த்திசெய்யும். இத்தகைய மகிமைவாய்ந்த

விஷயத்தை நியமத்துடன் கேட்கவேண்டும். மகரிஷிகள் தீர்த்தங்களிலும் க்ஷேத்திரங்களிலும் கங்கை யமுனை இவைகளின் சங்கமஸ்தலத்தை உத்தமமென்றுரைக்கிறார்கள். வெளுத்தும் கறுத்தும் இருவிதமான நிறமுடைய இந்த தீர்த்தத்தை பிரமாதிதேவர்களும் ரிஷிகளும் மனிதர்களும் ஆவலுடன் அடைகிறார்கள். ஸ்ரீமகாவிஷ்ணுவின் திருவடிகளிலிருந்து உண்டானதால் கங்காநதி புண்ணியநதியாகும். சூரியனிடத்திலிருந்து உண்டானதால் யமுனையும் அத்தன்மையதே. ஆகையால் இவ்விரண்டின் சங்கம் உத்தமமானது. எவ்வாறெனில், நினைத்தவர்களின் கஷ்டத்தை நாசஞ்செய்வதும், சுபத்தை உண்டுபண்ணுவதும், சமஸ்தர்களுடைய பாபத்தை க்ஷீணப்படுத்துவதும், சமஸ்தமான உபத்திரவங்களை போக்கடிக்க வல்லதுமாம். இக்கடற்கலையுடுத்த பூமியில் எத்தனை புண்ணியக்ஷேத்திரங்கள் இருக்கின்றனவோ அவைகளெல்லாவற்றுள்ளும் இந்த கங்காயமுனாசங்கமமாகிய பிரயாகையென்கிற க்ஷேத்திரமானது மகாபுண்ணியகரமானது. இந்த க்ஷேத்திரத்தில் நான்முகக்கடவுள் ஸ்ரீமந்நாராயணனை உத்தேசித்து அநேக யாகங்கள் செய்தார். அத்தன்மையாகவே ரிஷிகளும் இங்கு யக்ஞங்கள்செய்தார்கள். உலகங்களிலிருக்கின்ற மற்ற தீர்த்தங்களெல்லாவற்றிலும் அபிஷேகம் செய்துகொள்வதினால் எப்பலன்கிடைக்குமோ அப்பலன் இந்தகங்காநதியின் ஒரு திவலையினால் நனைக்கப்பட்டவனுடைய புண்ணியத்தில் பதினாறில் ஒருபாகத்திற்குச் சமமாகாது. இந்த கங்காநதிக்கு ஆயிரம் பதினாயிரம் காதவழிக்கு அப்புறமிருப்பினும் மகாபாபியானவன் கங்கைகங்கையென்று சொன்னால் பாபரகிதனாகிறானென்றால் இந்த கங்கையின் சமீபத்தில் இருப்பவர்கள்விஷயத்தைக் கேட்கவேண்டுமோ? ஸ்ரீமகாவிஷ்ணுவின் திருவடிகளில் உற்பத்தியாகி விசுவேசுவரருக்கருகில் செல்லும் இந்த கங்காநதியைத்தவிர வேறெந்த நதிதான் ரிஷிகள்முதலானவர்களால் அடையத்தகுந்த உத்தமநதி? இவ்வாறு நின்மணலை நெற்றியில்தரிப்பவனுக்கு நெற்றியில் விழியும் சிரஸில் சந்திரகலையும் உண்டாகின்றன. மங்களகரமான இந்நதியில் ஸ்நானம்செய்பவனுக்கு விஷ்ணு சாரூப்பியமே கிடைக்கிறதாயின் மற்றோர்விசேஷம் விளம்பவேண்டுமோ? இந்நதி பாபிகளுக்குக் கிடைப்பதருமையே. இந்த நதியில் ஸ்நானம்செய்தால் பாபிகளும் பரிசுத்தர்களாய் திவ்வியவிமானாரூடர்களாய் ஸ்ரீவிஷ்ணுலோகத்தை அடைகின்றார்கள். மேலும் இதில் புனலாடிய புண்ணியபுருஷர்கள் தங்கள் மாதாபிதாக்களுடைய குலங்களை உத்தாரணம் செய்வித்து ஸ்ரீவைகுண்டத்தில் விளங்குகின்றார்கள். கங்கையை தூய்மையான மனதுடன் ஸ்மரிக்கிறவன் சகல தீர்த்தங்களிலும் ஸ்நானம் செய்து சகல புண்ணியக்ஷேத்திரங்களிலும் வாசஞ்செய்த பலத்தை அடைகிறான். இந்த கங்கையில் தீர்த்தமாடியவனைப் பார்த்தபாபியும் சுவர்க்கத்தை அடைகிறான், ஸ்பரிசித்தவன் இந்திரபோகத்தை அடைகிறான். இந்த நதியின் மிருத்திகையை சிரசில் தரிப்பவன் ஜடாதாரனாகவும், தேகத்தில் தரிப்பவன் சிவசாந்நித்தியத்தை அடைபவனுமாகிறான். இந்த மிருத்திகையைத் தரிப்பவனைப் பார்ப்பவன் பிரமமான நித்தியசூரிகள்ஸேவிக்கும் ஸ்ரீ

வைகுண்டத்தையடைகிறான். துளசிவேரிலும் ஸ்ரீவிஷ்ணுபக்தர்களுடைய திருவடிகளிலும் கங்கையிலும் இருக்கும் தூளியானது ஸ்ரீவிஷ்ணுசாயுஜ்ஜியத்தை யடையச்செய்யவல்லது. மனிதர்களுக்குக் கங்கையும், துளசியும், ஸ்திரமான விஷ்ணுபக்தியும், தருமம் சொல்லுபவர்களிடம் பக்தியும் மிக துர்லபமானவை. பாகவதர்களின் திருவடி தூளியும், கங்கை மிருத்திகையும், துளசியின் வேர்மண்ணும், தருமோபதேசிகளிடத்து பக்தியும் மனிதனை விஷ்ணுலோகத்தை யடையச்செய்கிறவைகள். நான் கங்கைக்கு எப்போது போவேன், எப்போது கங்கையைத் தரிசிப்பேன் என்று கவலையுற்றிருக்கும் மனிதன் விஷ்ணுலோகத்தை அடைகிறான். ஓ ஸநத்குமாரரே! இன்னும் விஸ்தாரமாகச் சொல்லவேண்டியதென்ன? இந்த கங்கையின் மகிமையை அநேக நூறுவருஷங்கள் ஸாக்ஷாத் ஸ்ரீஹரிபகவானால் சொல்லப்பட்டாலும் முடியாது. பகவந்மாயை ஜகத்தை மோகிக்கிற ஆச்சரியத்தைப்பாரும். கங்கையென்ற பெயர் இருக்கும்போதே மாயாபீடிதர்களாய் இந்நாமத்தை ஸ்மரிக்காமல் ஜனங்கள் நரகத்தை அடைகிறார்கள். கங்கையென்கிற நாமமும் துளசியும் பகவத்குணானுபவம் செய்கிறவர்களிடத்து பக்தியுமாகிய இவைகள் சம்சாரமாகிற வலையை அறுக்கும் கத்திகள். ஒருதரமாகிலும் கங்கையை ஸ்மரிக்கிறவன் சகலபாபங்களினின்றும் விடுபட்டு பரிசுத்தனாய் ஸ்ரீவைகுண்டத்தை யடைகிறான். கங்கைக்குப்போகிறேனென்கிற உறுதியுடன் மூன்றுயோஜனைவழியாவது போகிறவன் சமஸ்தபாபங்களற்று சர்வலோகாதிபதியாகிறான். இந்த மகாபுண்ணியமானதும் நதிசிரேஷ்டமானதும் சுபகரமானதுமான கங்காநதியானது எப்போதும் சமஸ்தலோகங்களையும் பரிசுத்தம்செய்கிறது. இந்த கங்காநதியானது கோதாவரி, துங்கபத்திரை, பீமா, கிருஷ்ணா, நருமதை, சரஸ்வதி, காவேரி, யமுனை, பாகுதைவேத்திரவதி, தாமிரபரணி, சதத்ரு முதலிய சமஸ்த நதிகளிலும் எப்போதுமிருந்துகொண்டிருக்கிறது. ஓ பிராமணர்களே, சாஸ்திரங்களில் மகரிஷிகளால் எந்தெந்த புண்ணியநதிகள் சொல்லப்பட்டிருக்கின்றனவோ அவைகளில் எல்லாஜலங்களிலும் இருந்துகொண்டு சமஸ்தலோகங்களையும் பரிசுத்தப்படுத்துகிறது. ஸ்ரீமகாவிஷ்ணு சமஸ்தங்களிலும் வியாபித்திருக்கிறதுபோலும், ஆகாசம் எங்கும் தோற்றுகிறதுபோலும், இந்த கங்கையும் எல்லாவிடங்களிலும் பாபத்தை நாசம்செய்துகொண்டு வியாபித்திருக்கிறது. சமஸ்தலோகங்களையும் ஸ்நானபானங்களால் பரிசுத்தப்படுத்தும் இந்த கங்கையை ஜனங்கள் ஏன் அடைவதில்லை? அந்தோ! வாராணசி என்னும் க்ஷேத்திரமானது சகல தீர்த்தஸ்தலங்களிலும் க்ஷேத்திரங்களிலும் உத்தமமானது. சர்வதேவர்களாலும் ஸேவிக்கப்படுகின்ற உத்தம க்ஷேத்திரம். கங்கை, யமுனைகள் சங்கமஸ்தலமான பிரயாகை அதினும் சிறந்தது. இதைக் கண்டமாத்திரத்திலேயே மனிதர்கள் மோக்ஷத்தையடைகிறார்கள். இந்த கங்கையானது மகரமாதத்தில் சகலஜலங்களிலும் இருந்து எல்லா உலகங்களையும் பரிசுத்தப்படுத்துகிறதுமன்றி சுவர்க்கத்தையுமடையச் செய்கிறது. இத்தன்மையான கங்கையை ஜகத்துக்கு சுகத்தை உண்டு

பணணுகின்ற சங்கரபகவான் எப்போதும் தரித்திருக்கிறார். அவருடைய மகிமையைச் சொல்ல யாரால்தான சாத்தியமாகும்? லிங்கரூபியான சிவனும, ஸ்ரீஹரியும ஒருவர்தான், சற்றேனும பேதமின்று. ஆகையால் பேதத்தைக் கற்பிக்கிறவா மகா பாபிகளாகிறாகள் ஆதியந்தமில்லாத பகவான் ஒருவரே ஹரியென்றும் சங்கரனென்றும் சொல்லப்படுகிறார். புத்தியற்ற மூடர்களான பாபிகள் பேதபுத்தி யுடையவராகிறார்கள. ஆதிகாரணமாயும் லோககர்த்தனுயுமிராகின்ற ஸ்ரீமந்நாராயணனே யுகாந்தகாலத்தில் இந்த ஜகத்தை ருத்திரரூபியாயாகி பக்ஷிக்கிறான. சிருஷ்டிகர்த்தாவான பிரமனும சம்ஹாரகர்த்தாவான ருத்திரனும், ஸ்திதிகாரணனான விஷ்ணுவும ஒருவரே; பேதமின்று. இம்மூவர்களை பேதமாய் எண்ணுகிறவன சந்திர நக்ஷத்திரங்களிருக்குமளவும நாகவாசமபணணுபவனுகிறான் பிரம விஷ்ணு ருத்திராகளை எவன ஒருரூபமாகவே பாவிக்கிறானே அவன் மோக்ஷத்தையடைகிறான் என்பது சகலசாஸ்திர அபிப்பிராயம். அப்படிப்பட்ட அனுதியாயும் சர்வக்ஞனுயும ஜகத்காரணனுயும் சாவவியாபியாயுமிருக்கிற ஸ்ரீமந்நாராயணனே அந்த கங்காநதியில லிங்கரூபியாய் எழுந்தருளியிருக்கிறா இந்த காசியிலிருக்கும் லிங்கம ஜ்யோதிர்லிங்கமென்று சொல்லப்படுகிறது ஆகையால் அதை தரிசித்தவன பரப்பிரமமத்தையடைகிறான். சிலை, மிருத்திகை, மரம, கல, படம் இவைகளில செய்யப்பட்ட சிவபிம்பமாவது விஷ்ணுபிம்பமாவது எதுவாகிலும் உத்தமமானதுதான். அதில ஸ்ரீஹரியானவர் சாந்நித்தியமாயிருக்கிறா துளசிக்காடும், தாமரைத்தடாகமும், புராண பாராயணமும் எங்கெங்கிருக்கிறதோ ஆங்காங்கு ஸ்ரீஹரி சாந்நித்தியமாயிருக்கிறார். ஓ பிராமணோத்தமர்களே, எவன தனக்காவது பிறருக்காவது புராணம படிக்கிறானே அவனை சந்தேகமில்லாமல ஹரியென்றே எண்ணவேண்டும எவன் மனோவாக்குக்காயங்களினுல பக்தியுடன சிவனையாகிலும் ஸ்ரீமந்நாராயணனையாகிலும் பூஜிக்கிறானே அங்கும பகவான எழுந்தருளியிருக்கிறா. புராண சம்ஹிதைசொல்லுகிறவன் ஸ்ரீ ஹரியென்று சொல்லப்படுகிறான். அவனிடத்தில பக்திசெய்பவன பிரதிதினமும கங்காஸ்நானஞ்செய்தபலனடைகிறான. புராணங்கேட்பதில் உண்டாகும் பக்தி கங்காஸ்நானத்துக்கும், புராணஞ்சொல்பவரிடத்து பக்தி பிரயாகையில்செய்யும் கருமங்களுக்கும் சமமானவை. புராணங்களை உபாப்பதினுலும தாமோபதேசஞ்செய்வதினுலும ஜனங்களை சமுசாரசாகரத்தினின்று கரையேற்றுபவனை சந்தேகமில்லாமல ஹரியாகவே பாவிக்கவேண்டும். கங்கைக்குச்சமமான தீர்த்தமும், தாயுக்குச்சமமான குருவும், விஷ்ணுவுக்குச்சமமான தெய்வமும், ஆசாரியனுக்கு அதிகமான தத்துவமும் இல்லை [இதில சொல்லியவாறு குருக்களுக்குள் மாதா முக்கியமென்பதும், தீர்த்தங்களுக்குள் கங்கை முக்கியமென்பதும்போல் தெய்வங்களுக்குள் ஸ்ரீஹரிமுக்கியரென்பதும் தின்னமுரில் இதற்கு முன்னும்பின்னும் ஹரியையாவது ஹரனையாவது பூஜிப்பது சமமென்றும், அவ்விருவரும் சமரென்றும், அவர்களுள் வேற்றுமை நினைப்பவனுக்குக் குற்றமுண்டென்றும் சொல்லியவற்றின் கருத்து என்னவெனில் ஹரிக்

குச் சமமான தெய்வமில்லையென்பதேயாகிலும் சிவாதிபூஜைசெய்பவரும் சர்வாந்தராத்மாவான ஸ்ரீமந்நாராயணனுகவே பாவித்துச் செய்யவேண்டுமென்பதேயாம் ] மந்திரங்களுக்குள் வேதத்தைப்போலும், தெய்வங்களில் பரமாத்மாபோலும், தனத்தில் வித்தைபோலும், நதிகளில கங்கையாகும. வருணங்களுக்குள் பிராமணவருணமெபபடியோ, நக்ஷத்திரங்களுககுள சந்திரனெப்படியோ, சமுத்திரங்களுக்குள் திருபபாறகடல எபபடியோ அபபடியே தீர்த்தங்களுககுள் கஙகையாகும பொறுமையினுமுயாந்த பந்துவும, சத்தியத்தினுமுயர்ந்த தபமும், மோக்ஷததினுமுயாந்த பேறும், கஙகையினுமுயர்நத நதியும் கிடையாது. சிறப்புள்ள கஙகையின் நாமம பாபமாகிய காட்டைகொளுததும நெருபபு, சமுசாரமாகிற ரோகததை நிர்மூலமாககும் ஔஷதம் ஆகையால பிரயததினததுடன் கங்கைகயை யடையவேணடும். கஙகையும் காயத்திரியுமாகியவிரணடும் பாபமனைத்தையும் நாசம்செய்யத்தக்கவை. ஆகையால இவவிரணடிலும பகதியில்லாதவன் பதிதன என்றறியவேணடும். காயத்திரி சந்தஸ்களுககு மாதா. கஙகை இந்தவுலகமாதா. இவையிரணடும் சகலபாவநாசததுககும காரணமானவை விஷ்ணுபகதியுடனகூடிய இவையிரண்டும சாவாபீஷ்டங்களையும சாதிக்கத்தக்கவை. காயத்திரி எவனிடத்தில் பிரசனனமாயிருககிறுளோ அவனுககு கங்கையும் பிரசனனமாகிறுள் சதுர்விதபுருஷாாத்தங்களுககும் பலனகளாய், நிஷ்களங்கமாய், உததமமாயிராநினற இநதகாயததிரி கங்கைகள் சகலலோகஙகளையும் அநுக்கிரகிபபதறகாகவே பிரவாததிததனா இந்தகஙகையும, காயததிரியும, துளசியினிடததும் விஷ்ணுவினிடத்தும் பகதியும மனிதர்களுக்குக் கிடைப்பது அருமை. இந்தகங்கை நினைததமாததிரததில பாபததை நாசம் செய்யும், தரிசனமாத்திரத்தில விஷ்ணுலோகத்தை அடைவிககும், பானம் செய்தால விஷணுசாரூபயததைததரும, இந்நதியில ஸநானம்செய்தவாகள் நிலாக்கியமான விஷ்ணுலோகத்தையடைவார்கள் அநாதியாயும், வாசுதேவனுயும், லோகசிருஷ்டிகாததாவுமான ஸ்ரீமந்நாராயணமூர்ததி கஙகாநாமத்தை உச்சரிப்பவர்களுககுக கோரியபலனைக் கொடுக்கிறுர் மனிதசிரேஷ்டனுன எவன்மேல கஙகைநதியின ஜலத்திவிலைபடுகிறதோ அவன் சகலபாபங்களினின்றும் விடுபட்டவனுய் மோக்ஷத்தையடைகிறுன் பூாவம் இந்த கஙகாநதியின் நீரததிவிலைப்பட்டதினுல் சகரவம்சஸதர்கள் ராக்ஷதத்தனமையைவிட்டு பரமபததததையடைந்தார்கள்

## எ - வது அத்தியாயம்.

# பாகு உபாக்கியானம்.

சௌனகாதிரிஷிகள் சூதபௌராணிகரை நோக்கி கூப்பின கையராய் ஓ பௌராணிகரே, சகரவம்சத்தில் ராக்ஷதத்தன்மையிலிருந்து விடுவிக்கப்பட்டவர் யாவர்? சகரனென்பவன் யாவன்? எங்கே உண்டானவன்? பகீரதனன்றோ கங்கையைக் கொண்டுவந்தவன்? இவையெல்லாவற்றையும் அடியேங்களுக்கு விஸ்தாரமாகச் சாதித்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தனர். அப்போது சூதபௌராணிகர் பின்வருமாறு விளம்பலாயினர்.

ரிஷிகளே கேளுங்கள் முன்னம் நாரதமகரிஷியால் ஸநத்குமாரபகவானுக்கு உபதேசிக்கப்பட்ட உத்தமமான இந்தச்சரித்திரத்தைச் சொல்லுகிறேன். நீங்கள் அனைவரும் இந்தக்கங்கையின் பிரபாவத்தைப் பக்தியுடன்கேட்க உத்தேசித்திருப்பதால் சந்தேகமின்றி மகானுபாவர்களும் கிருதார்த்தர்களுமாயினீர்கள். பிரமயோகிகளான மகரிஷிகள் இந்தக்கங்கையின் பிரபாவத்தை சிரவணம்செய்வது புண்ணியசாலிகளுக்கும் கிடைத்தல் மிக அரிது என்கிறார்கள். ஓ மகரிஷிகளே, சகரவம்சமானது எவ்விதம் இந்தக் கங்காஜலாபிஷேகத்தினால் மோக்ஷத்தையடைந்ததோ அப்படிப்பட்ட உத்தமமானதாய் மகத்தான ஆச்சரியத்தை உடைத்தானதாய் அதி அற்புதமாய் விளங்காநின்ற சரித்திரத்தைக்கேளுங்கள். சூரியவம்சத்திலே விருகன் என்பவனுக்கு பாகுவென்றொரு புத்திரனுதித்தனன். தர்மபரனான அவன் அறநெறி சிறிதும் தவறுதலின்றி பூமண்டலாதிபத்தியம்செய்துகொண்டுவந்தனன். பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திராதிய சதுர்வர்ணத்தினரையும் ஏனையோர்களையும் அவரவர் குலாசாரக்குறைவு நேரிடாவண்ணம் பரிபாலித்துவந்ததால் அந்தபாகுராஜனுக்கு லோகாதிபதியென்கிற பெயர் தகுந்ததாயிற்று. ஓ பிராமணோத்தமர்களே, அந்தபாகுராஜா சப்தத்வீபங்களிலும் எழுபது அசுவமேதயாகம் செய்ததுமன்றி தனது கிரகத்தில் புஷ்பமுதலிய மங்களத்திரவியங்களினால் சமஸ்ததேவர்களையும் பூஜித்துவந்தான். நீதிசாஸ்திரவிசாரத்தினால் காலத்தைக்கழித்து சத்துருக்களை ஜயித்ததினால் கிருதார்த்தனென்றும் சகல ஜனங்களுக்கும் உபகாரம் செய்கிறவனென்றும் நினைக்கப்பட்டான். அவனது ஆக்ஷியிலுள்ள பிரஜைகளுக்கு விசனமென்பதே தெரியாது. சதாகாலமும் சுகிகளாய் சந்தனாதிகளை பூசிக்கொண்டு ஆபரணாலங்கிருதராயிருந்தார்கள். அந்தக்காலத்தில் பூமி உழாமலே விளைந்தது. மரங்கள்முதலியன பூரணமாய் பழங்களுடனும் புஷ்பங்களுடனும்கூடியிருந்தன. அந்தந்தக்காலங்களில் தேவேந்திரன் மழையை வருஷித்துவந்தான். ஓ மகரிஷிகளே, பிரஜைகளின் மனது பாபத்தில் பிரவேசித்ததேயில்லை. தர்மபரிபாலனம்செய்துவந்தமையால் ரிஷிகள் நிர்விக்கினமாய் தபம்புரிந்துவந்தனர். சமஸ்தசாஸ்திரங்களின் மெய்ப்பொருளை உணர்ந்தவனும், நன்றியறிந்தவனும், சுபலக்ஷணமுடைய

வனுமான பாகுமகாராஜன் தனது குணங்களால பிரஜைகளை நட்புறச்செய்து கொண்டு இந்த அவனிமுழுதும அரசுபுரிந்துவந்தான இவ்விதமாய் பரிபாலித்துவந்த அம்மகாராஜனுக்கு சமஸத சமபததையும நாசமசெய்யவல்லதாய பொறாமையுடனகூடிய பேராசைககுக காரணமான அகஙகாரமுணடாயிறறு அதாவது நான் அரசன், சமஸதவுலகஙகளையும ஆள்பவன, பலிஷ்டன, நான அநேக் மகஙகளியற்றினேன, ஆகையால் எனனைவிட யாவராலும் பூஜிக்கததக்கவன யாவனுளன? மேலும் நான் பணடிதன்; வனப்பு வாய்ந்தவன, சமஸத சத்துருககளையும ஜயித்தேன, சகல துவீபஙகளையும் ரக்ஷிக்கிறேன், சகல துஷடாகளையும சிக்ஷிதது அடககியிருககிறேன், நானே குணமுள்ளவன, வேதவேதாஙகஙகளை பரிசீலிதது அவைகளின் உணமையை அறிநதிருக்கிறேன, நீதிசாஸதிரததிலோ பணடிதன, ஒருவராலும் ஜயிககமுடியாதவன, குறைவிலலாத சமபத்துடையவன, ஆகையால என்னையன்றி பிரபு எவனிருககிறான? எனறு இவவிதமான அஞ்ஞானததினுலுணடான அகஙகாரமானது சகலசமபததும நாசமாகவேணடியநிமிததம உணடாயிறறு எவனிடததில அகஙகாரமிருககிறதோ அவனிடததில காமககுரோதாதிகளும அவசியமாயிருககும இவைகளினுல மனிதன நசிபபது திணணம. மனிதாகளுககு யெளவனம, விசேஷதனம, பிரபுததன்மை, புததியினமை இவை நானகில ஒனறிருநதாலே கெடுதியைககொடுககும. நானகும ஒனறுகூடியிருநதால கெடுதிககுக கேட்கவேணடுமோ? ஆகையால் சமஸதஜனஙகளிடததும விரோததததையும தேகநாசததையும சகல சமபத்துநாசததையும தராநினற அசூயை பொறாமைமுதலிய துாக்குணங்கள் பாகுராஜனுககு உணடாயிறறு அது சரியானதே எனனில விவேகமிலலாத மனிதனுககு உணடாகும சம்பததானது சரதகால நதிபோல குறையுமேயலலது ஸதிரமாயிராது அசூயையுளளவாகளிடமிருக்கும் தனமானது பெருஙகாறறில அகபபடட உமியும நெருபபும்போல இருந்தவிடம் தெரியாதுபோய்விடும ஆகையால பிறராககண்டு சகியாமையாகிற அசூயையுடையவாகளுககும, டமபமான ஆசாரமுடையவாகளுக்கும், எவருங் குரூரமானவாாததை சொலலுகிறவாகளுககும் இகலோகததிலும பரலோகத்திலும சுகமே கிடையாது அசூயை குடிகொணட மனததினரும், குரூரவார்ததை சொலலுபவரும், பெணடுகளுக்கும பிளளைகளுக்கும பந்துக்களுக்கும் சததுருககளாகவேயிருபபாாகள் ஒருவனுககு பிறருடைய சம்பததைபபாாததுணடாகும் அசூயையானது தனககுள்ள யாவற்றையும் அடியோடு வெட்ட சம்பாதித்த கணடகோடரியென்று எண்ணவேண்டும். இந்தவிஷயத்தில் சற்றேனும ஐயமிலலை பிறா சமபத்தைககணடு அசூயைப்படுபவன் தனசொந்த சிரேயஸின நாசத்துக்கு முயற்சிசெய்பவனே. ஓ பிரமமேணேத்தமாகளே, தன மிததிரா, புததிரா, ஸதிரீ, நிலங்கள், தனம், தானியம, கீர்ததியாகியவிவைகள நசிக்கவேணடுமென்கிற எண்ணங்கொணடவன்தான், பாசமிருத்தியைக் கணடு பொறாமை யடையவேணடும். ஆகையால் பொறாமை குடிகொணட சித்தனுன இந்த பாகு அரசனுககு

வெகு பலவான்களான ஹேஹய தாலஜங்காதிகள் சத்துருக்களானார்கள். அதனால் பெருத்த ஆபத்து உண்டாயிற்று. ஸ்ரீயப்பதியின் அருளுடையோனுக்கே சகல ஐசுவரியமும் உண்டாகின்றன. அவர் பராமுகமாயிருக்கப் பெற்றோனுக்கு சகலமும நாசமடைகின்றன. அப்பகவானது கடாக்ஷமிருக்கும்பரியந்தமே பாரியாபுத்திர பந்துமித்திர கிருகக்ஷேத்திர தனவாகனாதிகள் நிலைக்கின்றன. முடடாசளும, குருடாகளும், செவிடர்களும், மூடர்களுமாகிலும மாதவன் கடாக்ஷம்பெற்றவராகில சூரர்களும் விவேகிகளுமாய்ப புகழப்படுவாாகள். சம்பத்து நசிக்கவேண்டியவனுக்கே அசூயைமுதலிய துர்குணங்களும், பிராணிகளிடதது துவேஷமும் உண்டாகின்றன. அவை விஷ்ணுகடாக்ஷமின்மையபறறியே. அகங்காரம் விவேகதலைத நாசம செய்கிறது, அதாவது அவிவேகமுண்டாகிறது பின்பு அவிவேகத்தின பரிஜனங்களான ஆபததுகள உண்டாகின்றன. ஆகையால் ஆபததுக்கு ஆதிகாரணமான அகங்காரததை நீக்கிவிடவேண்டியது. அகங்காரம உண்டாகும்போதே அசூயைமுதலிய துர்குணங்கள உண்டாவதால அகங்காரமுள்ளவன உடனே நாசததை யடைகிறான. அசூயையுடனகூடிய அந்த பாகுராஜனுக்கு சததுருக்களுடன ஒருமாதகாலம இடைவிடாமல் மகாபயங்கரமான யுததம உண்டாயிறறு. அவயுத்ததத்தில சததுருக்களால ஜயிக்கபபட்டு அந்த பாகுராஜன தனது பத்தினியுடன் ராஜ்ஜியததைவிட்டு வனம்போயினன. அங்கு அநத ராஜபத்தினியினது காபபததுக்கு பயந்த சத்துருக்களான ஹேஹயாதிகளால அநத காபபநாசநிமிததம் அவளுக்குவிஷம கொடுக்கபபட்டது. இவ்வாறு விஷததைப பக்ஷிதது விசனபபடும் கர்ப்பிணியான தனது ஸதிரீயுடன் அநத பாகுராஜன மகாவிசனாக்கிராந்தனாகி காட்டில் அலைந்து, கொடுமவெயிலில அடிபட்டு, பசியாலும தாகத்தாலும் பீடிக்கப்பட்டு, தன் பிராரப்தகருமங்களைக குறிதது அழுதுகொண்டு, அவுர்வமகாமுனிவருடைய ஆசிரமத்தையடைந்து, அததபோவனத்தில ஒரு பெரிய தடாகத்தைக்கணடு மகத்தான ஆனநததததையடைந்தான். மகா அசூயையுள்ள அவனுடைய சுபாவத்தையறிந்து அத்தடாகததிலிருந்த பக்ஷிகளெல்லாம் மறைந்து பின்வருமாறு சொலலிககொணடன. ஓ பக்ஷிகளே, வெகு கஷ்டம். மகாபாபியான இந்த பாகு வருகிறான்; இவனைக்கண்ணுறாது தத்தமிருப்பிடங்களில மறையுங்கள் என்றன. இவ்விதம் பக்ஷிகளும் அசூயையுடைய சித்தனான அவனைப்பார்த்து நிந்தித்ததால் ஜகததுக்கு வெறுப்பை உணடுபண்ணுகின்ற மகாகஷ்டமான அசூயையை விட்டுவிடவேண்டுமன்றோ? பாகுராஜன் அந்த சரசிலிறங்கி ஸ்நானம்செய்து, வேண்டுமளவு பானம் செய்து, மரத்தடியில் உட்கார்ந்து, தனது ஸ்திரீயுடன் சிரமபரிகாரம் செய்துகொண்டிருந்தான். இவ்வாறு வனத்தையடைந்து மகா கஷ்டத்தையனுபவிக்கிற ராஜனுடைய துர்க்குணங்களை எண்ணி அவனுடைய ஆக்ஷிக்குட்பட்டிருந்த பிரஜைகளும் அவனை நிந்தித்தார்கள். எப்படிப்பட்டவனாயினும் நல்லகுணமுள்ளவனே சிரேஷ்டன். அகண்ட ஐசுவரியத்தையுடையோனாயினும் துர்க்குணமுடையவன் சகல ஜனங்களாலும் நிந்திக்கப்படு

வான். உலகத்தில் அபகீர்த்திக்குச் சமானமான மிருத்தியுவும் கீர்த்திக்குச் சமானமான தாயும் இல்லை. பாகுராஜன் வனமடைந்ததனால் அவனுடைய தேசத்திய ஜனங்களில் ஒவ்வொருவரும் தங்களுடைய சத்துருக்கள் கொல்லப்பட்டால் எவ்வளவு சந்தோஷத்தையடைவார்களோ அவ்வளவு சந்தோஷமடைந்தார்கள். ஓ வித்துவசிகாமணிகளே, இவ்விதமாய் நிந்திக்கப்பட்ட பாகுராஜன் வனத்தில் நடைப்பிணமாயினன். அபகீர்த்தி எவனையும் நாசம்செய்துவிடும். அபகீர்த்திக்குச் சமானமான மிருத்தியுவும், கோபத்துக்குச் சமானமான சத்துருவும், நிந்தைக்குச்சரியான பாபமும், மோஹத்தையொத்த பயமும், அசூயைக்கு ஒப்பான அபகீர்த்தியும், காமத்துக்குச் சரிசமான நெருப்பும், ஆசைக்குச்சரியான பாசமும், சங்கத்தைப்போன்ற விஷமும் இல்லையென்று நினைத்து துக்காக்கிராந்தனாகி அழுது மனோவியாதியால் தேகம் மெலிந்து ரூபபையடைந்து இவ்விதமாய் அவ்வாசிரமத்தில் வருத்தப்பட்டுக்கொண்டிருந்து, வியாதிபீடிதனாய், வெகுகாலம் சென்று மரணத்தையடைந்தான். கர்ப்பிணியாயிருந்த அவனது மஹிஷியும் நிர்ஜனமான காட்டில் அதிக துக்கத்துடன் அழுது சககமனஞ்செய்ய உத்தேசித்து, விறகுகளை சம்பாதித்து, சிதையை அடுக்கி, அதில் தன் பர்த்தாவை வைத்து தானும் ஏறப்போனாள்.

அப்போது மகாதபஸ்வியும் தேஜோவானுமான அந்த அவுர்வமகாரிஷியானவர் ஞானதிருஷ்டியில் இந்த விருத்தாந்தமெல்லாம் அறிந்து, மகாபதிவிரதையான அந்தராஜமஹிஷி ரோதனம்பண்ணிக்கொண்டிருந்த ஸ்தானத்தையடைந்தார். மகானுபாவர்களாயும் தேஜோநிதிகளாயுமிருக்கிற ரிஷிகள் பூத, பவிஷ்யத், வர்த்தமானமென்கிற முக்காலங்களையும் அறிவார்களாகையால் இந்த மகரிஷி இதை அறிந்தவராயினர். ஓ பிராமணோத்தமர்களே, இவ்விதமாக சிதையில் அக்கினிப்பிரவேசஞ்செய்ய முயலாநின்ற ராஜபத்தினியைப்பார்த்து மகரிஷி தருமமானமொழிகளைப் பின்வருமாறு உரைப்பாராயினர். ஓ ராஜசிரேஷ்ட பத்தினியே, மகாபதிவிரதையான நீ இத்தன்மையான சாஹசகாரியத்தைச் செய்யலாகாது. ஏனெனில் நினது கருப்பத்தில் சத்துருக்களை அதோஹதஞ்செய்யத்தகுந்தவனும், சக்கரவர்த்தியாகும்படியானவனுமான புத்திரன் இருக்கிறான். ரஜஸ்வலைகளும், இளங்குழந்தைக்காரிகளும், கர்ப்பவதிகளும், ருதுவாகாதபெண்களும் சககமனஞ்செய்யலாகாது. உத்தமரிஷிகளால் பிரமஹத்திமுதலிய மகாபாபங்களுக்கும் பிராயச்சித்தம் கூறப்பட்டிருக்கிறது. ஆனால் டம்பனுக்கும், யாவரையும் நிந்திப்பவனுக்கும், கர்ப்பத்தைச் சேதஞ்செய்பவனுக்கும், நாஸ்திகவாதஞ்செய்பவனுக்கும், செய்ந்நன்றி கொன்றோர்க்கும், தருமத்தில் உபேக்ஷைசெய்கிறவனுக்கும், சினேகித்துக் கெடுப்பவனுக்கும் பிராயச்சித்தமில்லை யென்கிறார்கள். ஆகையால் இவ்விதமான கர்ப்பநாசமாகிற மகாபாபத்தைச் செய்யலாகாது. தற்காலம் உண்டாயிருக்கும் துக்கமெல்லாம் சீக்கிரத்தில் சமனத்தையடையுமென்றிவ்வாறுகூறச் செவியுற்ற பதிவிரதாசிகாமணியான ராஜபத்தினி அம்மகரிஷியின் அனுக்கிரகத்தை நம்பி அவர் திருவடி

களில் பணிந்து அழுதாள் சகலசாஸ்திரங்களையும் ஐயந்திரிபறவுணர்ந்த அவ்ர்வமகரிஷியும் அந்த ராஜபத்தினியைப்பார்த்து அம்மா, அழாதே, நல்ல சமபத்தை யடையப்போகிறாய், கண்ணீர் விடவேண்டாம். அப்படிவிடும கண்ணீர் உண்மையில் பிரேதமானவர்களைக் கெடுத்துவிடும் ஆகையினால் விசனத்தைவிட்டு இப்போது செய்யவேண்டிய கருமங்களைசசெய் பண்டிதனிடத்திலும, மூடனிடத்திலும, தரித்திரனிடத்திலும, சம்பத்துள்ளவனிடத்திலும், கெட்டநடகையுள்ளவனிடத்திலும, யதியினிடத்திலும, எவ்விடத்திலும் மிருத்தியு சரியாகவே இருக்கிறது அவனுக்கு வித்தியாசமே இல்லை ஒவ்வொருவனும் பட்டணத்திலாயினும், காட்டிலாயினும், சமுத்திரத்திலாயினும், மலையிலாயினும, இன்னும எங்கேயாயினும் அவனவனசெய்த கருமபலனகளை அனுபவித்தே தீரவேண்டும. மேலும மனிதர்களுக்கு துக்கங்கள் எப்படி அபேக்ஷிக்கப்படாமலே உண்டாகின்றனவோ அப்படியே சுகங்களும உண்டாகின்றன ஜன்மாந்தரத்தில எந்தெந்த கருமங்களைச் செய்கிறோமோ அவைகளையே இங்கு அனுபவிக்கிறோம இதற்கு தெய்வம்தான் காரணம. வேறு காரணவசாது ஒன்றுமில்லை ஓ அரவிந்தம் போன்ற வதனத்தையுடைய நங்காய்! பிறந்த ஒவ்வொருவனும் கர்ப்பத்திலாகிலும், பால்லியத்திலாகிலும, பருவத்திலாகிலும, முதுமையிலாகிலும், எப்போதாகிலும அவசியமாய மிருத்தியுவுக்கு சுவாதீனமாகவேண்டும. சாக்ஷாத் கோவிந்தனாகிய பகவான அதனதன கருமானுசாரமாக ஒவ்வொரு ஜந்துவையும் ரக்ஷித்தும் சமஹாரித்துமவருகிறா இப்படி இருக்க பிறப்புக்கும் இறப்புக்கும ஹேதுமாத்திரமாயிருக்கும ஜந்துக்களை அந்த பிறப்பு இறப்புகளுக்கு முதற்காரணமாய் மூடர்கள தெரியாது கூறுவர். ஆகையால் இந்த துக்கத்தைவிட்டு பர்த்தாவுக்குச செய்யவேண்டிய உத்தரக்கிரியைகளைச்செய்து விவேகவிஷயத்தால தைரியமாயிருத்தலவேண்டும துக்கங்களை அனுபவித்து வருந்துவதற்கு ஹேதுவான கருமபாசத்தினால் கட்டுண்ட இந்த உடல் பலதுன்பங்களாலும பிணிகளாலும் சூழப்பட்டிருக்கிறது. இந்த தேகத்துக்காக தகாதகாரியத்தைச செய்யலாகாது, என்று இவ்விதமாய் ராஜபத்தினியைத் தேற்றி கருமங்களை விதிப்படி இயற்றுவித்தார்.

இவ்விதம் ரிஷியினால் தேற்றப்பட்ட ராஜமகிஷியும் தனது துக்கத்தையொழித்து மகரிஷியை நமஸ்கரித்துச சொல்லலாயினள் ஓ மகரிஷியே, தேவரீரைப்போன்ற ஸாதுக்கள் பரோபகாரத்தையே செய்கிறார்களென்பதில என்ன ஆச்சரியம. ஏனெனில் மகாவிருக்ஷங்கள் தங்களுடைய உபயோகத்தின்பொருட்டு பலிக்காமல் இதாருடைய உபயோகநிமித்தமாகவே பலிக்கின்றனவன்றோ? அப்படியே ஸாதுக்களும் ஆகிறார்கள். எவன் துக்கத்தை அனுபவித்துக்கொண்டிராநின்ற பிறரைப்பார்த்து அவர்களுடைய துக்கநிவர்த்தியாகும்வண்ணம் பிரியவசனங்களை மொழிந்து துக்கநிவர்த்தி செய்கின்றானோ அவன் ஸ்ரீவிஷ்ணுபகவானுடைய குணமாகிய ஸத்துவகுணநிஷ்டன். ஏனெனில சர்வஜன ஹிதனானதால் சுத்த ஸாத்துவீகனாகின்றான்.

பிறாதுக்கத்தில தககிப்பதும் பிறாசுகததில சுகிபபதுமான உத்தமகுண முடையோனே மனுஷியரூபம்பூண்ட ஹரியெனறே எணணவேண்டும ஸா துக்கள் சாஸதிரஙகளை தஙகளுடைய துககநிவாரததியின பொருட்டு கற்கின்று கிலலை, இதரருடைய துக்கநிவாரததியினபொருட்டே. சூரியனிருககிறவிட தது இருட்டிலலையோல் ஸாதுககளிருககுமிடதது துககபாதை உணடாவ தில்லை, என்று இனனும் அனேகவிதமாய் மகரிஷியை சிலாகிததபினபு பாத் தாவுக்கு கருமமியற்றினள அந்த பாகுராஜனுடைய பிரேதம் அவுரவமக ரிஷியின கடாக்ஷம பெற்றதால அவவரசன் சகலபாவஙகளும தொலைந்து பரி சுததனாய் அமரேசனைபபோல் அனேககோடி விமானஙகளுககு அதிபதியாய் ஸ்ரீவைகுணடத்தை யடைநதான ஓ ஸாதுககளான மகரிஷிகளே, சேஷுங கள் மகாபாபியினுடைய பிரேதசரீரததையாகிலும, அதை தகனமசெய்த சாம் பலையாகிலும், புகையையாகிலும, புணணியபுருஷன கடாக்ஷித்தால் அந்த பிரேதசரீரததையுடைய ஜீவன் பரமபதம எய்துகிறுன. பஞசமகாபாதகம் செய்தவனாயினும் மற்றும அனேகவிதமான உபபாதகம செய்தவனாயினும் மகானகளால கடாக்ஷிககபபெற்றானாகில பரமபததததை யடைகிறானென் பதில் ஐயமிலலை. அவுரவமகாரிஷியினியமனபபடி தனது பாததாவின உத தரகிரியைகளை நடததியபினபு அமமகரிஷியின ஆசிரமமசென்று தினந்தோ றும அவருககு ஆதரவுடன் சிசுருஷைசெய்துவநதாள்.

---

அ - வது அத்தியாயம்.

---

# சகரசரித்திரமும் சாகரர் கடல்தோண்டியதும்.

பதிவிரதாசிரோமணியான அந்த ராஜபததினி களஙகமற்ற சித்த முடையவளாய் பரமபகதியுடன் ஆசிரமததை மெழுகல முதலான பணிவிடை களை அம்மகரிஷி சந்தோஷமுறச செய்துவநதனள் இவ்வாறிருககையில சிசுருஷை மகாத்மியததால சமஸதபாபமும் தொலைததவளாய் மகாபுணணிய தினததில விஷததுடனகூடிய ஓர்புததிரனை ஈனறனள். ஓ மகரிஷிகளே, ஸாதுசஙகமானது மிகுந்த ஆச்சரியமுடைத்து. அது எந்த விஷயத்தைத் தான் நாசமசெய்யமாட்டாது? எநத சுபத்தைததான கொடுக்கமாட்டாது? எதைததான மனிதருக்குச் செய்யமாட்டாது? மகானுபாவாகளுக்குச்செய் யும் சிசுருஷையானது தனக்கு தற்செயலாய் நேரிட்ட பாபத்தையும், தான் தெரிந்துசெய்ததையும், ஒருவனைக்கொணடு செய்வித்திருந்ததையும, மற் றைய விதமானதையும் நாசம்செய்துவிடும். எப்படி ஒரு களையளவிருந்தா லும் சந்திரன் சிவனால் அங்கீகரிககபபட்டதனால் விருத்தியையும பூஜை

யையும் பெறுகின்றனே அப்படி ஸாதுக்களால் பரிக்கிரகிக்கப்பட்டவன் ஜடனாயிருந்தாலும் சமஸ்தர்களாலும் பூஜிக்கத்தகுந்தவனாகிறான். ஓ பிராம ணோத்தமர்களே, ஸாதுசங்கமானது இகம்பரமாகிய இரண்டு உலகத்திலும் பரமமான சமிருத்தியைக் கொடுக்கிறது. ஆகையால் ஸாதுக்கள் பூஜிக்கத் தகுந்தவர்கள். மகான்களது குணங்களைப்புகழ யாரால்தான் சாத்தியமாகும்? ஏனெனில் கர்ப்பத்தில் இருந்த விஷமும் நஷ்டமாய்ப்போய்விட்டதன்றோ? மகாதேஜஸ்வியான அவுர்வமுனிவரும் விஷத்துடன்கூட உதித்த குழந்தை யைக் குளிரக்கடாக்ஷித்து ஜாதகருமமுதலியவைகளை விதிப்படி இயற்றி விஷத்துடன் பிறந்த காரணத்தால் அதற்கு சகரனென்கிற நாமதேயமளித்து தம் தபோமகிமையால் உண்டாகும் தேன் பால் அமுதுமுதலானவைகளால் அதை நாளொருமேனியும் பொழுதொருவண்ணமுமாய் வளர்த்துவந்தார். மந்திரசாஸ்திரத்தில் வல்லவரான அம்மகரிஷி அக்குழந்தைக்கு தகுந்தவய தில் சௌளமசெய்வித்து ராஜநீதி தண்டநீதி முதலான தருமசாஸ்திரங்களை ஓதிவைத்தார். பாலவியம நீங்கி தாருண்ணியபருவத்தை யடைந்து சமா தத்தனாய் விளங்கிய சகரனுக்கு சகல மந்திரபாகங்களுடன்கூடிய தனுர் வேதத்தை உபதேசித்தார். இவ்வண்ணம் அவுர்வமுனிவரால் உபதேசிக் கப்பெற்ற சகரன் பலிஷ்டனாயும், தனுர்வித்தையில் சிறந்தோனாயும், குண சாலியாயும், பரிசுத்தனாயும், தருமசாஸ்திரத்தில் வல்லவனாயும், மகாபராக் கிரமசாலியாயும் விளங்கி அம்மகரிஷிக்குக் காலைதோறும் சமித்து தருப்பை முதலானவைகளை சேகரித்துக் கொண்டுவந்து கொடுத்துவந்தான். இவ் வாறு ஒருநாள் ரிஷி சிச்ருஷையில் விருப்பங்கொண்ட சகரன் தனது மாதா வை சாஷ்டாங்கமாய் தண்டசமர்ப்பித்து வெகுவணக்கத்துடன் கைகளைக் கூப்பிக்கொண்டு பின்வருமாறு விண்ணப்பம் செய்யலாயினன். அம்மா, எனது பிதா எங்கிருக்கிறார்? அவருடைய நாமம் யாது? ஜாதி என்ன? இவைகளை அடியேனுக்குச் சொல்லவேண்டும். உலகத்தில் பிதாவில்லாமல் ஜீவிப்பவர் இறந்தவர்களேயாவர். தரித்திரனாயினும் பிதாவுடையனா யின் அவன் குபேரனுக்குச் சமானமானவனே. தருமமில்லாதவனுக்கு இகபரலோகங்களில் சுகமில்லாததுபோல மாதா பிதாக்களில்லாதவனுக்கு சுகமே கிடையாது ஓ மாதாவே, தந்தையில்லாதவன், ஞானமற்றவன், விவேகமற்றவன், பிள்ளையில்லாதவன், கடனுள்ளவன் இவர்களுடைய ஜன் மம் அப்பிரயோசனமானது. சந்திரனில்லாத இரவுபோலும், தாமரை இல்லாத தடாகம்போலும், பதி இல்லாத ஸ்திரிபோலும், தருமமில்லாத பிராணிபோலும், தனமில்லாத சமுசாரிபோலும், குழந்தையில்லாத வீடுபோ லும், விஷ்ணுபக்தி இல்லாத தருமம்போலும், வேத அத்தியயனம்செய்யாத பிராமணன்போலும், அதிதிபூஜையில்லாத கிரகஸ்தனைபோலும் தானம்செய் யப்படாத திரவியம்போலும், சத்தியமில்லாத வாக்கியம்போலும், மந்திரி இல்லாத சபைபோலும், தயை இல்லாத தபம்போலும், சற்குணமில்லாத ஸ்திரீபோலும், நீரில்லாத நதிபோலும், பொறுமையை பயக்காத வித்தை போலும் பிதாவில்லாதவன் பிரயோசனமற்றவன். இரத்ததிரிபவன்போல்

பிதாவற்றவன் எளியவனும் பலதுன்பப்படுபவனுமாவான் என்று சொல்லி முடித்தான்.

இவ்விதமாய் தனபுத்திரனால் சொல்லப்பட்ட வார்த்தையைக்கேட்டு அதிகதுக்கத்துடன் பெருமூச்சுவிட்டு சகரனைப்பார்த்து ஆதிமுதல்நடந்த விருத்தாந்தங்களைச் சொன்னாள் அதைக்கேட்டு கோபத்தினால் கண்கள் சிவந்து இப்போதே சத்துருக்களைக் கொல்லுகிறேனென்று பிரதிஞ்ஞைசெய்து தனது மாதாவையும் மகரிஷியையும் பிரதக்ஷணஞ்செய்து ஸேவித்து அவர்களால் நியமிக்கப்பட்டவனாய், சத்துருக்களை ஜயிக்கும்பொருட்டு தன் வாக்கு பழுதுபோகாது தான் சுத்தனாகும்படியாக சகரன் அவுர்வாசிரமத்தை விட்டு புறப்பட்டு, குலபுரோகிதரான வசிஷ்டமகரிஷியை யடைந்து, அவர் ஞானதிருஷ்டியால் யாவற்றையும் அறிந்திருந்தும் சகலசமாசாரங்களையும் ஆதியோடந்தமாகத் தெரிவித்தான் அப்போது வசிஷ்டரும் தனது சிஷ்யனுக்கு ஐந்திராஸ்திரம், வாருணாஸ்திரம், பிரமாஸ்திரம், ஆக்கினேயாஸ்திரம் முதலிய அஸ்திரங்களையும், சத்தியையும், சிரேஷ்டமான தனுசையும் ஈந்து அவனை நன்கு ஆசீர்வதித்து விடைகொடுத்தனர் மகரிஷியின் அனுமதி பெற்று சத்துருக்களையடைந்து ஒரேவில்லினால் சத்துருக்களையும் அவர்களின் புத்திரபௌத்திராதிகளையும் தொம்சம் செய்தனன் அந்தத்தனுசினால்விடப்பட்ட பாணங்களாகிற நெருப்பினால் கொளுத்தப்பட்டு சிலர் இறந்தார்கள் சிலர் பயந்து ஓடிப்போய்விட்டார்கள் சிலர் தலைவிரிகோலமாய் மேடான புற்றுகளின்மேலேறி எதிரில் நின்றனர் சிலர் புல்லைக்கடித்தார்கள். நிர்வாணிகளாய் சிலர் ஜலத்தில் பிரவேசித்தார்கள். சகயவனாதிகளும் இன்னும் சிலரும் தங்களைக் காக்கவேண்டுமென்று அந்த சகரனுடைய குலகுருவான வசிஷ்டமகரிஷியை சரணமடைந்தார்கள் ஜயசாலியான சகரன் தன்னால் ஜயிக்கப்பட்ட சத்துருக்கள் வசிஷ்டரை சரணமடைந்தார்கள் என்பதை யறிந்து உடனே அவர் சமீபத்தை அடைந்தான் வசிஷ்டமகரிஷி சகரராஜன் வருவதையும் அவனுடைய சத்துருக்கள் சரணமடைந்திருத்தலையும் பார்த்து தன்து சிஷ்யனுடைய அபீஷ்ட பூர்த்திக்கும் சரணாகதரக்ஷணத்துக்கும் அனுகூலமாக அப்போதே ஆலோசித்து, சிலரை மொட்டைகளாகவும், சிலரை விரிதலையராகவும், சிலரை தலைமொட்டையாய் தாடிமட்டில் உள்ளவர்களாகவும், சிலரை வேதபாஹ்யர்களாகவும் செய்தார் இவ்வண்ணம் செயப்பெற்று பிணங்களைப்போலிருக்கிற சத்துருக்களைப்பார்த்து சிரித்து தபோநிதியான வசிஷ்டரைநோக்கி ஓர்விசேஷம் விளம்பினான்

ஓ ஆசாரியரே, துராசாரர்களான இவர்களை ஏன் வீணாக ரக்ஷிக்கவேணடும்? எனது ராஜ்ஜியத்தை அபகரித்த இவர்களை நான் எவ்விதமாயினும் கொல்லவேபோகிறேன்; தருமவிரோதிகளைக்கண்டு அவர்களை ஹதஞ்செய்யாது உபேக்ஷைசெய்கிறவன் சகலநாசத்துக்கும் காரணமாகிறான் என்பதில் சந்தேகமில்லையன்றோ? துஷ்டர் பலாதிகராயின் உடம்புமறந்து சகல லோகத்தையும் உபத்திரவம் செய்கின்றார்கள். அவரே பலஹீனராயின் மிக ஸாதுக்கள்போலாகின்றார்கள். ஆச்சரியம்! மாயையின் மகிமையைப்பாருங்

கள். பாபபுத்திகளான துஷ்டர்கள் தங்களுக்கு நல்லபலம் உண்டாகிறவரையில் மோசக்கருத்தை உட்கொண்டு அடங்கியிருக்கிறார்கள். க்ஷேமப்படவேண்டியவன் சத்துருக்கள்செய்யும் அடிமைத்தனத்தையும், வேசிகளின் சிநேகத்தையும், பாம்புகளின் ஸாதுத்தனமையையும் நம்பலாகாது. துஷ்டர் முதலில் எந்த பல்லைக்காட்டி சிரிக்கிறார்களோ அந்தபல்லையே தங்கள் சாமர்த்தியம் கெட்டபிறகும் காண்பிக்கிறார்கள். எந்தநாவுடன் குரூரமான வாக்கியங்களை மொழிகின்றார்களோ பலம்கெட்டபிறகு அந்நாவினால் தாழ்மையாய்ப் பேசுகிறார்கள். நீதிசாஸ்திரங்களை அறிந்தவன் தன்க்ஷேமத்தை உத்தேசித்தால் துஷ்டர்களின் ஸாதுத்தனமையையும், அவர்கள் அடிமையாகுதலையும் நம்பாதிருக்கக்கடவன். எவ்வளவுவணங்கினாலும் துஷ்டர்களினிடத்தில் அன்புசெலுத்தாதிருக்கக்கடவன். துஷ்டர்கள் சமயமறிந்து உயிரை அபகரிப்பார்கள். சமயத்திலவணங்கும் துஷ்டனையும், கபடமுள்ள மித்திரனையும், துஷ்டையான ஸ்திரீயையும் விசுவசிப்பவன் மரணமடைந்தவனே. இதில் சற்றேனும் சந்தேகமில்லை. ஆகையால் பசுவேடம்பூண்டு புலித்தொழில்புரியும் இவர்களை ரக்ஷிக்கவேண்டாம். தேவரீருடைய அநுக்கிரகத்தினால் இந்த சத்துருக்களெல்லோரையும் கொன்று பூமியை அனுபவிக்கிறேன் என்று உரைத்தான். அதுகேட்டு மிகுந்த திருப்தியடைந்த வசிஷ்டமகரிஷி சகரனிட சரீரத்தைத் தடவிக்கொடுத்து ஓர் விசேஷம் விளம்பலுற்றனர். ஓ மகாபாக்கியவானான சகரனே, நன்று, நன்று. உண்மை புகன்றனை, ஆயினும் எனது வார்த்தையைக்கேட்டு பொறுமையடையவேண்டும். இவர்களை நான் முன்னரே உன் பிரதிஞ்ஞைக்கு விரோதமின்றி கொலையொத்த அங்கப்பழுது செய்திருக்கிறேன். இவர்களைக்கொல்வதினால் உனக்கு என்னகீர்த்தி உண்டு? கருமமாகிற வலையினால் கட்டப்பட்ட சகல ஜந்துக்களும் தத்தம் பாபங்களால் ஹிம்சிக்கப்படுகின்றன. ஆகையால், அப்படிப்பட்டவர்களை நீ ஏன் மாய்த்தல்வேண்டும்? பாபத்தினால் உண்டான இந்த தேகம் முந்தியே பாபத்தினால் ஹதமாயிருக்கிறது. ஆத்துமாவைக்கொல்ல ஒருவனாலும் சாத்தியமாகாது. ஏனெனில் அது நித்தியமும் ஞானபூரணமுமானது என்பது சாஸ்திர உறுதி. அவரவர்கள் செய்தகருமங்களின் பலன்களை அனுபவிப்பதற்கு அவரவரே காரணமாகின்றனர். அக்கருமங்கள் தெய்வமூலமானவை. இந்த ஜகத்து தெய்வாதீனமானது. ஆகையால் தெய்வமே துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனம் புரிவது. பராதீனர்களான மனிதர்களால் எந்தகாரியம்தான் செய்யற்பாலது? இந்த சரீரம் பாபத்தினாலே உண்டானது; பாபத்தினாலே வளர்கின்றது. கொலை பாபமூலமென்று அறிந்தும் ஏன் கொலைக்கு எத்தனம்செய்கிறாய்? ஆத்துமா பரிசுத்தமாயினும் தேகசம்பந்தத்தால் தேகியென்று கூறப்படுகிறது. ஆகையால் இந்தகொலை சந்தேகமில்லாமல் பாபமூலமாகவே யிருக்கிறது. பாபமூலமான இந்த தேகத்தைக் கொல்வதால் உனக்கு என்னகீர்த்தி உண்டாகிறதென்று நிச்சயித்துக்கொண்டு பிறகு இவர்களைச் சம்ஹரித்தல் ஆவசியகமாயின் சம்ஹரி; அவ்விதமின்றேல் விட்டுவிடு என்ற வசிஷ்டமகரிஷியின் வார்த்தையைக்கேட்ட சகரன்

கோபத்தினின்றும் நீங்கின வசிஷ்டரிஷியும் சகரனைத் தமது அஸ்திரங்களால் தடவி ஆசீர்வதித்தார். அதர்வணவேதங்களை அறிந்தவரான அம்மகரிஷி நல்ல விரதசீலர்களான ரிஷிசமூகங்களுடன் மகா பலம்பொருந்திய சகரனுக்கு மகுடாபிஷேகம் செய்வித்தனர். அச்சகரன் காசியபபுத்திரியான சுமதியையும் விதர்ப்பராஜன் புத்திரியான கேசினியையும் விவாகம்செய்து இல்லறம் நடாத்திவந்தனன். இவ்வாறு ராஜ்ஜிய பட்டாபிஷேகமடைந்த சகரமகாராஜனைப் பார்க்கவேண்டி தபோநிதியான அவுர்வமகாமுனிவர் எழுந்தருளி ராஜனுடன் சம்பாஷித்துக்கொண்டிருந்துவிட்டு தமது ஆசிரமம் சென்றனர். பின்பு அநேகவருஷங்கள் சென்றும் புத்திரப்பேறின்மையால் அவுர்வமகரிஷியையடைந்து கற்புவாய்ந்த அச்சகரபத்தினிகள் புத்திரார்த்தம் பிரார்த்தித்தார்கள். பார்க்கவமந்திர மறிந்த அவுர்வரும் யோகநிலையாலுணர்ந்து அவ்விரண்டு ஸ்திரீகளையும் நோக்கிச் சொல்வாராயினர்: பெண்காள்! வம்சவிருத்திகரனான புத்திரனொருவன் ஒருத்திக்கும் அப்படியல்லாத அறுபதினாயிரம் புத்திரர்கள் மற்றொருத்திக்கும் உண்டாவார்கள், இவைகளில் எது எவளுக்குவேண்டுமோ அதைக்கேளுங்கள் என்றார். உடனே சமர்த்தையான கேசினி வம்சவிருத்திகாரணனான ஓர் பிள்ளையையும் மூடையான சுமதி அறுபதினாயிரம் புத்திரரையும் வேண்டினர். ரிஷிவாக்கியத்தின்படி கேசினி அசமஞ்சஸனென்னும் ஓர் மகவையீன்றனள். சுமதியின் உதரத்தில் அறுபதினாயிரம் பிள்ளைகள் ஜனித்தார்கள். கேசினி புத்திரனான அசமஞ்சஸன் பால்லியத்திலே பயித்தியம்பிடித்தவனைப்போல துஷ்டகாரியங்களைச் செய்துவந்தனன். அப்படி கெட்டகாரியங்களைச் செய்துவந்த அசமஞ்சஸன் சகவாசத்தால் சுமதிபுத்திரர்களாகிய அறுபதினாயிரவரும் துஷ்டத்தையுள்ளவர்களாயினார்கள். தந்தையான சகரர் தனது புத்திரர் பால்லியத்தினால் இவ்விதம் செய்கின்றனரென்று நினைத்திருந்தார். துஷ்டர்களுடைய சகவாசம் மிகவும் கொடியது. அக்னி சர்வபூஜ்ஜியமானதாயினும் இரும்பைச்சார்ந்த தோஷத்தால் கருமான் சம்மட்டியால் அடிக்கப்படுகிறதுபோல அசமஞ்சஸசகவாசம் அறுபதினாயிரவர்க்கும் துஷ்டத்தையைக்கொடுத்தது. இந்த அசமஞ்சஸனுக்கு அம்சுமான் என்ற ஸாதுஜனபக்ஷபாதியும், சுகுணசாலியும், தருமநிஷ்டனும், பிதாமகனான சகரமகாராஜனுக்கு ஹிதம்செய்வதில் பிரியமுள்ளவனுமான ஓர் புத்திரன் உண்டானான். துஷ்டத்தையுடையவர்களும் லோககண்டகர்களுமான அச்சகரபுத்திரர் ஸத்கருமானுஷ்டானம் செய்யும் ஸாதுக்களுக்கு விக்கினம்செய்துவந்தனர். பிராமணர்களால் யதாவிதியாக ஹோமம்செய்யப்பட்ட ஹவிஸ்ஸுக்களை அந்த சாகரர் தேவதைகளை நிராகரித்து தாங்களே புசித்துவந்தார்கள். சுவர்க்கலோகத்திலிருந்து அரம்பைமுதலான அப்சரசுகளை அபகரித்துவந்து பலாத்காரமாய் அளகபாரத்தைப்பற்றி யீர்த்து அநேகந்தடவை அவமதித்தார்கள். எப்போதும் கட்குடியே தொழிலாகக்கொண்ட அந்த துஷ்டர்கள் சுவர்க்கத்திலிருக்கும் பாரிஜாதமுதலிய புஷ்பங்களை அபகரித்துவந்து அப்புஷ்பங்களால் தங்களுடைய தேகங்களை அலங்கரித்துக்கொண்டும் ஸாதுஜனங்களின் தனங்களை அபகரித்

தும் சகல ஸத்கருமங்களையும் நாசம்செய்தும் வந்தார்கள். மகாபலசாலி களும் பாபிகளுமான அவர்கள் தங்கள் தந்தையாகிய சகரராஜனுடனும் யுத்தமசெய்ய ஆரம்பித்தார்கள். இவ்விதமாய் இவர்கள் துர்நடதைதயைக் கண்டு மகாதுக்கத்துடன்கூடிய இந்திரன்முதலிய தேவர்கள் இச்சாகரரு டைய நாச உத்தேசியமாய் ஆலோசித்து பாதலமத்தியத்தில தன்மகிமை தெரியாவண்ணம் விஷ்ணுவின் பரமாநந்தரூபியான ஸ்ரீமந்நாராயணனைத் தியா னம்செய்யும விஷ்ணுதுல்லியரான கபிலரையடைந்து தணடம் சமாபபித்து பின்வருமாறு ஸ்தோத்திரமசெய்தாரகள். ராகத்வேஷாதிரகிதராய் விளஙகி மனுஷியரூபியாய் மறைநதிருககும் விஷ்ணுரூபியும் தபோநிதியுமான தேவ ரீரை தணடம் சமாபபிககிறோம பரமபுருஷரான ஸ்ரீமநநாராயணனுடைய பக்தரும், உலகானுக்கிரகம செய்பவரும, சமுசாரமாகிற காட்டைக்கொளுத் தும் தீயாய் விளஙகுபவரும, ஞானமுள்ளவரும, மகானும், நிஷ்காமனுமான தேவரீரை அநேகந்தரம் நமஸகரிககினறோம, சகரபுததிரர்களால் உபத்திர விக்கபபட்டு தேவரீரை சரணமடைநதிருககிற அடியேஙகளை ரக்ஷித்தருள வேணடும சுவாமியெனறு ஸ்துதிசெய்த தேவாகளை சகலசாஸ்திரார்த்தங்களை யறிந்த கபிலமகரிஷி யதாவிதியாக பூஜித்து அததேவாகள் சந்தோஷிக்கும்படி யான ஓர் விசேஷம திருவாய்மலாநதருளினார். அமரர்காள்! நீங்கள் இது விஷயததில் கஷ்டத்தையும் ஆச்சரியததையும் அடையவேணடியதில்லை. ஏனெனில் சம்பததும், ஆயுள், கீர்த்தி, பலம இவைகளின் நாசததையடைய வேண்டியவாகளே உலகஙகளை உபததிரவிப்பாாகள். நிரபராதிகளை உபத் திரவிக்கிறவன் சமஸதலோகங்களிலும பாபததை அநுபவிக்கிறதில ஆசை யுள்ளவனென்று அறியவேணடும. எவன் மனோவாககுக்காயங்களினால இத ரர்களை எப்போதும் உபததிரவிககிறானோ அவனை தெய்வமே சீககிரத்தில கெடுத்துவிடும். இதுவிஷயத்தில சந்தேகமிலலை எவன ஆயுள், சந்ததி, காந்தி இவைகளின நாசத்தை சீககிரத்தில அடையவேணடியவனோ அவன் தான் பிறர்களை பீடிப்பான் என்று பெரியோாகள் சொலலுகிறார்கள். அச சாகரர்கள் இன்னும் சிலதினததுககுள்ளேயே நாசமடையபபோகிறார்கள். ஆதலால அந்த சாகராகளால உணடான துககத்தை விட்டுவிட்டு சுவாக்கத் தை அடையுங்கள் என்று கபிலமுனிவர் சொலல, தேவாகள் அம்மகாமுனி வரை தண்டம்சமர்ப்பித்து சுவாக்கலோகததையடைந்தாாகள்.

இத்தருணத்தில் சகரமகாராஜன் வசிஷ்டர்முதலிய மகரிஷிகளுடன உத்கிருஷ்டமான அசுவமேதமென்கிற யாகத்தைச்செய்ய வாரமபிததலும் யாகக்குதிரையை அமரேசன் அபகரிதது கபிலமகரிஷி எழுந்தருளியிருக்கின்ற பாதல உலகில ஒருவர்க்கும் தெரியாமல் கொணடுபோய்விட்டுவிட்டான். சகரபுத்திரர் அறுபதினாயிரவரும் யாண்டும் தேடியும் குதிரையைக் காணாது வியபபுற்று பாதலத்தையும் பாாக்கவேணடி ஒவ்வொருவரும் ஒவ்வொரு யோசனைதூரம் பூமியைததோண்டி மணலைக்குவித்து அவ்வழியாய் பாதலம் அடைந்தனர். அங்கு கோடிசூரியப்பிரகாசமுள்ளவராய் தியானநிஷ்டரா யிருக்கும் மகாத்துமாவான கபிலமுனிவரையும் அவரருகில் குதிரையை

யுங்கண்டு, மதிமோசங்கொண்டு, பாபத்தொழிலுக்குத் துணிந்து, அம்முனிவரைக் கட்டப்பார்த்து இவனை அடி அடி கொல்லு கொல்லு பிடி பிடியென்று அவர்கள் ஒருவரோடொருவர் சொல்லிக்கொண்டார்கள் ஆ ஆ இவன் குதிரையைத் திருடிக்கொண்டுவந்துவிட்டு வெகு நல்லவன்போல் எண்ணப்படுதற்காக கொக்குபோல தியானஞ்செய்கிறான், உலகத்தில் துஷ்டர்கள் நல்லவர்போல் வேஷமாத்திரந்தான் தரிப்பார்கள் என்று சொல்லிக்கொண்டு அம்முனிவரைக்கண்டு நகைத்தும், சகல இந்திரியங்களையுமடக்கித் தனக்குள் தன் சுவரூபத்தைக் கண்டுகொண்டிருந்த கபிலர் அவர்களது தொழிலை அறியாதுபோலிருந்தார். கேடுகாலங் கிட்டி மதிகெட்டவர்களான அவர்களிற்சிலர் அம்முனிவரை நெருங்கி அவரது கையைப்பிடிக்கச் சிலர் அவரைப் புடைத்தனர். அப்போது தியானநிலையைவிட்ட அம்முனிவர் உலகத்துக்கு தீங்குசெய்பவர்களான அவர்களைப்பார்த்து வியப்புற்று ஆழ்ந்த கருத்துடன் ஒருவார்த்தை விளம்பலாயினார் செல்வச்செருக்குடையோர்களும், பசித்தோர்களும், காமவெறிகொண்டோர்களும், அகங்காரிகட்கும் பகுத்தறிவுண்டாவதில்லையன்றோ? நிதியை வைத்திருந்த பொறையுடைய பூமியே நெருப்புபோலிருக்குமாயின் மனிதன் அப்பொருளைப் பெற்றவனாகில் கேட்கவேண்டியதென்ன? துஷ்டர்கள் நல்லோர்களை பாதித்தால் ஆச்சரியம் என்னவிருக்கின்றது? ஆற்றுப்பெருக்கு கரையின்கணுள்ள மரங்களை வீழ்த்தாமலிருக்குமோ? செல்வமும் பருவமும் பிறர்மனையாளின்கண் விருப்பமுமாகிய இவைகளிருந்தால் ஒன்றுந்தெரியாமல் மதியுங்கண்ணுங் கெட்டுப்போகும். பொன்னின் பெருமையைச்சொல்ல யாராலுமாகாது. ஏனெனில் அதன்பெயர்கொண்ட *ஊமத்தைகூடவன்றோ மதிமயக்குண்டாக்குகிறது. துர்ஜ்ஜனனது செல்வம் தீக்குத்துணைபட்ட காற்றுபோலும், பாம்புக்குவார்த்த பால்போலும் உலகத்துக்குக் கெடுதிசெய்யும். பொருட்செருக்கினால், மனிதன் கண்ணிருந்தும் கண்கெட்டவனாகிறான். கண்தெரிந்தவனாகில் அவன் தனக்கு நலத்தைத் தேடிக்கொள்ளாது தீங்குவிளைத்துக்கொள்ளுவனோ? என்று இவ்விதமாக உரைத்து கோபமூண்டு தமது கண்ணினின்றும் அக்கினியை விடுத்தார் அந்த அக்கினி அச்சகரபுத்திரர்களைவரையும் அப்போதே நீறாக்கியது. அவ்வக்கினியைக்கண்டு பாதலலோகத்திலிருக்கும் சகலஜந்துக்களும் அகாலப்பிரளயம் நேரிட்டதாக நினைத்து பரிதபித்தன. அத்தீயால் சர்ப்பங்களும் ராக்ஷதர்களும் வருத்தப்பட்டு சமுத்திரத்துக்குச் சென்றனர். ஸாதுக்களுக்குக் கோபம்வந்தால் அதைத் தாங்கவல்லவரில்லையன்றோ?

இவ்வமயத்தில் நாரதபகவான் அச்சகரராஜனது வேள்விச்சாலையை அணுகி அவர்களெல்லோரும் மடிந்தசெய்தியை அவ்வரசனுக்குத் தெரிவித்தனர். எல்லாமறிந்த சகரசக்கிரவர்த்தியார் இச்செய்திகேட்டு மகிழ்ந்து அக

* பொன்னின்பெயர் யாவும் ஊமத்தையையும் உணர்த்துமென்று அமரகோசம் கூறுகின்றது.

கொடியவர்களை தெய்வமழித்ததென்று சொன்னார். நாடோறும் தருமவிரோதமான கருமங்களைச்செய்பவர் தாய் தந்தை சகோதர புத்திரராயினும் சத்துருக்களாவார்கள். தனக்குரிய தருமத்தில் விருப்பமற்றவனும் உலகத்தார்க்கு இடர்செய்துகொண்டிருக்குமவனை சத்துருவென்றே உணரவேண்டுமென்று சாஸ்திரங்கள் உறுதியாயுரைக்கின்றன. துர்ஜ்ஜனர்களழிவது ஸாதுக்களுக்கு நன்மையாதலால் சகரரானவர் தமது பிள்ளைகளின் அழிவைப் பற்றி சோகமுறவில்லை. புத்திரனில்லாதவர்களுக்கு யாகத்தில் அதிகாரமில்லாமையால் அந்த சகரசக்கிரவர்த்தி தனது பேரனும், அசமஞ்சஸன் புத்திரனும், நல்லபுத்திமானும், பேசவல்லவனுமான அம்சுமானென்பவனை புத்திரனிடமாக வைத்துக்கொண்டு குதிரையைக் கொண்டுவரும்படி ஆஞ்ஞை செய்தார். அவனும் அப்பள்ளவழியாக பாதலஞ்சென்று தேஜோராசியான கபிலரைக்கண்டு வந்தனைவழிபாடியற்றி அதனால் சீற்றமற்றிருக்கும் அம்முனிவரருகில் கைகுவித்துநின்று ஓர்விண்ணப்பம் செய்தனன். ஓ சுவாமி, ஸாதுக்கள் பிறரிழைத்த பிழைகளை பொறுப்பதுமன்றி அவர்களும் நற்புத்தியளிக்கவல்லவரன்றோ? ஆதலால் தேவரீர்விஷயத்தில் என் தந்தைகள்செய்த கடுந்தொழிலைப் பொறுத்தருளவேண்டும். ஸாதுக்கள் துஷ்டர்கள்விஷயத்திலும் அருள்செய்வதே திண்ணம். சந்திரன் தனது பிரகாசத்தைச் சண்டாளன் வீட்டிற் செலுத்தாமலிருப்பனோ? நல்லவன் தான் வருத்தமுறினும் யாவருக்கும் அருளேபுரிகுவன். தேவர்களால் உண்ணப்பட்டும் சந்திரன் சந்தோஷத்தையே வழங்குகிறான். சந்தனமரம் வெட்டப்படினும், அறுக்கப்படினும், அரைக்கப்படினும் மணமே கொடுக்கும். அதுபோல நல்லோர்கள் தாம் வருந்தியும் பிறர்க்கு இன்பமே விளைப்பர். மகாமுனிவர்கள் தமது பொறுமை, தவம், நல்லொழுக்கம் இவைகளால் உலகங்களையெல்லாமாளவல்ல மகாபுருஷர்களென்று சான்றோருரைக்கின்றனர். வேதவடிவாய், பரமாத்துமாவுக்கு உகப்பான ஒழுக்கமுடையோராய், எப்போதும் பரமாத்துமாவைத் தியானம்செய்பாநின்ற மகரிஷியே, தேவரீருக்கு அநேகநமஸ்காரம் செய்கின்றேன், என்றிவ்வாறு தோத்திரஞ்செய்ய கபிலர் பிரசன்னராகி அம்சுமானைப்பார்த்து உனக்கென்னவேண்டும் அதைக்கேள் கொடுப்பேனென்று அன்புடன் வினவினார். கபிலரிங்ஙனம் திருவாய்மலர்ந்தருள அம்சுமானும் சுவாமி, எனது தந்தைமார்கள் பிரமலோகஞ்சேரும்படியான கிருபை புரியவேண்டும் எனப் பிரார்த்தித்தனன். கபிலமுனிவரும் அவனது வேண்டுகோளுக்கிணங்கி சந்தோஷித்து உரைப்பாராயினர். உனது பௌத்திரன் கங்கையைக்கொண்டுவந்து இவர்களை பிரமலோகம் சேர்ப்பான். அப்புண்ணிய தீர்த்த கங்கை இவர்களுடைய பாவத்தைத்தீர்த்து பரமபதமளிக்கவல்லது. பின்னர், இக்குதிரையை உனது பிதாமகன் புரிகின்ற யாகத்துக்கு உதவியாகும்படி கொண்டுபோ, எப்போதும் தருமத்தில் சிரத்தையுடையவனாயிரு; உனக்கு மங்களமுண்டாகுக, என்று சொல்லக்கேட்டு அம்சுமான் அவருக்கு வந்தனையியற்றி குதிரையைக் கொண்டுவந்து பாட்டனாரிடத்தில் ஒப்புவித்து நடந்தசெய்தியையும் சொன்னான்.

அந்த அம்சுமானுக்குத் திலீபனென்று ஓர் புத்திரனுதித்தான். திலீபனுக்குப் பகீரதன் பிறந்தான். இந்தப் பகீரதன்றான் கங்கையைக்கொண்டுவந்தவன். பகீரதன் வமிசத்தில் மகாபலம்பொருந்திய சுதாசனென்பவன் பிறந்தான். அவன்குமாரன் சௌதாசன், இவன் உலகின்கண் பிரசித்தமான கீர்த்திபெற்றவன். இவன் மகரிஷி வசிஷ்டருடைய சாபத்தால் ராக்ஷசவுருவடைந்து கங்கைத்துளிகள் நனைத்தமாத்திரத்தில் அவ்விராக்ஷசரூபநீங்கி சுயரூபமடைந்தான்.

---

## ௯-வது அத்தியாயம்.

---

## சௌதாச உபாக்கியானம்.

சௌனகாதிரிஷிகள் புராணஞ்சொல்லிவந்த சூதபௌராணிகரை நோக்கி, ஓ தெளிவான அறிவுள்ள பௌராணிகசிரேஷ்டரே, சௌதாசனென்னுமரசன் வசிஷ்டமுனிவராலேன் சாபமடைந்தனன்? பின்னர் எவ்வாறு கங்கைத்துளிகளால் சாபத்தினின்று நீங்கினன் கங்கையின் பெருமை கேட்பவர்க்குஞ் சொல்பவர்க்கும் பாவமகற்றுமாதலான் இச்சரித்திரமுழுதும் எங்கட்குச் சொல்வீராகவென்று வினவினர் அப்போது பௌராணிகர் சொல்லலுற்றார்.

சகலதருமங்களையும் உலகநடைகளையும் அறிந்தவனும் மனோவாக்குக்காயங்களில் பரிசுத்தனுமான சௌதாசனென்னுமரசன் தருமத்தில் இச்சையுடையவனாய் எழுகடலுக்குட்பட்ட பூமியை சக்கரசக்கிரவர்த்தியா ஆண்டுவந்தாற்போலவே அறமுறை பிறழாது தேகவலுக்குன்றாது புத்திரபௌத்திரர்முதலியவெல்லாச் செல்வங்களுடன் முப்பதினாயிரவருஷம் ஆக்ஷிபுரிந்துவந்தனன். அவன் தன்னரசாக்ஷிகாலத்திலொருநாள் வேட்டையாடவிருப்பங்கொண்டு மந்திரிமார் புடைசூழ சேனைகளுடன் வனம்புகுந்து, விலங்குமுதலியவற்றைக்கொன்று, நடுப்பகலில் மிகுந்த தாகங்கொண்டு நருமதையாற்றையடைந்து, அவ்வாற்றில் ஸ்நானஞ்செய்து, அநுஷ்டானமுடித்து, போஜனஞ்செய்து மந்திரிகளுடன் அன்றையிரவு அவண்தங்கியிருந்தனன். மறுநாட்காலையிலெழுந்து காலக்கருமங்களை முடித்து வேட்டைவிருப்பத்தால் வெளிப்பட்டு காட்டில் திரிந்தான் இப்படி வெகுநாள் திரிந்துவருங்காலத்திலொருநாள் அக்காட்டைவிட்டு மறுகாட்டுக்குச்சென்று அம்பு தொடுத்துக் களவிழுத்து ஓர்மானைத் துரத்தி மந்திரிகளைவிட்டு தன்னந்தனியனாய் அம்மான் சென்றவழியே ஏகுகையில் ஓர் குகையில் புணர்ச்சிகெத்தனித்த மிதுனமான புலிகளைக்கண்டனன். பாணமந்திரத்தில் திறவானான அவன் அவைகளைக்கண்டவுடன் முன்துரத்திப்போன மானின் வழியைவிட்டு அப்புலிகளுக்கெதிர்சென்று தன்னம்பினால் அவற்றில் பெண்புலியைக் கொன்றுவீழ்த்தினான். அப்புலி விழும்போது முப்பதுயோசனை உயரமுள்ள பயங்கரசரீ

ரத்துடன் பிரளயகால மேகமுழக்கம்போன்ற தொனியுடன் ஓர் ராக்ஷதனுகி வீழ்ந்தது. இவ்வாறுவீழ்ந்த ராக்ஷதனைப்பார்த்து மற்றொருபுலி இதற்கு பதில் செய்வேனென்று சொல்லி அதிகவேகத்துடன் ஓடி மறைந்தது. இவ்வாச்சரியத்தைக்கண்ட அரசன் பயத்தினுல் நடுக்கமுறுகையில் தனது சேனைகள் வந்துசேர்ந்தன. அவன் நடந்த ஆச்சரியசெய்தியை மந்திரிகளுக்குச் சொல்லிக்கொண்டு, சகல அலங்காரங்களுடன்கூடிய தன்னகரஞ்சென்று மனதில் அச்சத்துடனே முன்போல அறவழிபிறழாது பூமியை ஆக்ஷி புரிந்துவந்தனன். இவ்வாறு அனேகநாள் சென்றபின்னர் அவ்வரசன் வசிஷ்டாதிகளான பிரம்மவித்துக்களுடன் மிகுந்த சிரத்தையோடு அசுவமேதமென்னும் வேள்வி செய்யத்தொடங்கினன். அவ்வேள்வியில் யதாவிதியாக பிரமன்முதலிய தேவர்க்கு ஹவிசு அளிக்கப்பட்டது. வேள்விமுடிந்தவாறே வசிஷ்டமுனிவர் ஸ்நானத்துக்காக வெளியேபோயினர் அச்சமயத்தில் முன்னம் புலிவடிவாய் புணர்ச்சிக்காலத்து அவ்வரசனல் பெண்டிழவடைந்த ராக்ஷதன் அவ்வபராதத்திற்காக கோபங்கொண்டு அப்பகையை ஒறுக்கும் வண்ணம் வசிஷ்டரைப்போல வேஷம்பூண்டு அரசனிடஞ்சென்று "ஓ அரசனே, என் போஜனத்துக்காக மாமிசம் சமைப்பையாகில் இதோ வந்துவிடுவேன்" என்றுசொல்லி மறைந்து அவ்வேஷமாற்றி சமையற்காரன் வேஷம் பூண்டு மனிதமாமிசத்தைக்கொண்டு அரசனிடத்தில் கொடுத்தான். அரசனும் அம்மாமிசத்தை தங்கபாத்திரத்தில் வைத்துக்கொண்டு குருவின் வரவுக்கெதிர்பார்த்துக்கொண்டு நின்றுன் குருவான வசிஷ்டர் வந்தவுடன் அம்மாமிசத்தை அவருக்கு சமர்ப்பித்தலும் அவருமதைக்கண்டு அஃதென்னவென்று வியப்புற்று, அதை நரமாமிசமெனக்கண்டு, இவ்வரசன் என்ன தீயநடையுளனுயினன்! உண்ணவொண்ணுததை எனக்கு ஈந்தானேயென்று ஆச்சரியத்துடன் மிகுந்த கோபமடைந்து ராஜனைநோக்கி ஓ அரசனே, தின்னவொண்ணுத நரமாமிசத்தை என்போன்றாக்கு அளிக்கத் துணிந்தாயன்றே? ஆதலால் உனக்கு இதுவே உணவாகக்கடவது ராக்ஷதர் புசிக்கத்தக்க நரமாமிசத்தை எனக்குக் கொடுத்ததனுல அம்மாமிச முண்ணகைக்குத்தக்க ராக்ஷதத்தன்மையை இனி நீ அடைவாயாகவென்றுர். இவ்வண்ணம் வசிஷ்டர் சாபங்கொடுக்க அரசன் அஞ்சி இந்த மாமிசம் தேவரீருடைய உத்திரவினுல்தானே ஈந்தது எனலும், வசிஷ்டர் சிந்தித்து அரசன் ராக்ஷதனுல் வஞ்சிக்கப்பட்டானென்று ஞானதிருஷ்டியாலறிந்தார். இதற்குள் அரசன் இவ்வசிஷ்டர் பகுத்தறிவின்றி அநியாயமாய் என்னை சபித்தாரேயென்று சீறி ஜலத்தைக் கையிலேந்தி வசிஷ்டருக்கு சாபங்கொடுக்கத் தொடங்கினன். இத்தருணத்தில் மதயந்தியென்று பெயர்வாய்ந்த அந்தராஜனது பத்தினி தன் பர்த்தாவைநோக்கி விளம்பலாயினள். ஆகற்பாலதான தீவினைப்பயனுமக்கு நேரிட்டது. அதுநிற்க வேறு கல்வினைப் பயன் இப்போது வருமோ வராது. ஆகையால கோபத்தை அடக்குவதே தக்கதாகும். எந்தமனிதன் மதிகெட்டவனய் குருவை அதட்டிப் பேசுகின்றுனே அவன் நிர்ஜனுஷியமான காட்டில் பிரமராக்ஷதனுகப் பிறக்கி

றான் ஐம்புலன்களை வென்று தவம் புரிபவரும் குருவுக்குப் பணிவிடை செய்திருந்தால்தான் பிரமலோகமெய்துவரென்பது சாஸ்திரமுடிபு என்றாள். இவ்வண்ணம் மனையாள் சொல்லக்கேட்டு, அரசன் கோபத்தைவிட்டு, பத்தினியைமெச்சி, சாபத்துக்கென்று கையிலேந்தியநீரை எங்குவிடுவேனென்று மனதில் சிந்தித்து, அந்தஜலம் விடப்பட்ட இடம் நீறாய்ப்போவது திண்ணமென்று எண்ணி, அந்நீரால் தனது பாதங்களை நனைத்துக்கொண்டனன். அந்நீர் பட்டவளவில் அவன்கால்கள் நிறமாறிப்போயின. அதுமுதல் அவ்வரசனுக்கு கல்மாஷபாதனென்று இவ்வுலகில் ஓர் பெயருண்டாயிற்று. இயற்கையிலேயே புத்திமானான கல்மாஷபாதன் மனையாட்டியால் கோபமாறப்பெற்று நெஞ்சில் அஞ்சி அடங்கி கைகுவித்து குருவைநோக்கி ஓ பகவானே, நான் அறிந்து அபசாரப்படவில்லை, எல்லாம் தேவரீர்கள் பொறுத்தருளவேண்டுமென்று சொன்னான். பின்னர் வசிஷ்டபகவானும் துக்கித்துப் பெருமூச்செறிந்து விவேகமில்லாது சாபங்கொடுத்த தன்னைவெறுத்து அரசனுடன் பின்வருமாறு உரைப்பாராயினர்: பகுத்தறியாமைதான் சகலமான ஆபத்துகட்கும் முக்கியமான இடமாகின்றது. உலகத்தில் பகுத்தறிவில்லாதவன் விலங்கோடொப்பான், சந்தேகமின்று. அரசனறியாமலே இக்காரியம் சடுதியில் நேரிட்டது. அங்ஙனமிருக்க அறியாதவனைக்குறித்து நான் விவேகமின்றி இவ்வாறு தீங்கிழைத்துவிட்டேன். எவ்வளவு தாழ்மையானவனாயினும் பகுத்தறிவுள்ளானாகில் சுகத்தையடைவன், அதில்லாதவனோ எவ்வளவு மேலானவனாயினும் துன்பமேயடைவன், அரசனே, எனது சாபத்தால் உனக்கு ராக்ஷசத்தன்மைவரினும் அது என்றுமுள்ளதன்று. பன்னிரண்டுவருஷமட்டுமே யிருக்கும். பின்பு கங்கைத்துளிகளால் நனைந்து, ராக்ஷசவடிவைவிட்டு மறுபடி சுயரூபத்தைப்பெற்று இந்த பூமியை ஆளக்கடவாய். அந்த கங்காஜலத்துளிகள் சரீரத்திலூறுவதால் மெய்யறிவுண்டாகி அதனால் அனாதி கருமக்களின்பற்று ஸ்ரீ ஹரிக்குத் தொண்டுபூண்டு மோக்ஷானந்தத்தையுமடைவாயாகுக என்று சொல்லி தர்மாத்துமாவான வசிஷ்டபகவான் தமதாசிரமம் சென்றனர்.

உடனே அரசனும் கோரமான ராக்ஷசரூபத்தையடைந்தான். அடைந்ததுமுதல் எப்போதும் தீராப்பசியுந் தாகமுமுண்டாகி அதனால் வருத்தமுற்று கடுங்கோபங்கொண்டு பார்ப்போர்க்கு பயங்கரமான உருவமும் செய்கையுமுள்ளோனாய் ஜனசஞ்சாரமில்லாத அரண்ணியத்தில் திரிந்து, அங்குள்ள மனிதர்கள், பலவிதமிருகங்கள், ஊர்வன, பறப்பன, குதிப்பன என்னுமிவ்வகையான ஜந்துக்களில் அகப்பட்டவைகளையெல்லாம் ஆராய்ச்சியின்றிக் கொன்று தின்றுகொண்டிருந்தான். கேளுங்கள் பிராமணோத்தமர்களே, இவ்விதமாக அவன் திரியுங்காட்டில் சிலவிடத்தில் எலும்புகளும், சிலவிடத்தில் புலவாணமுள்ள பிணங்களும், சிலவிடத்தில் உதிரமும், சிலவிடத்தில் காம்புகளும் மயிர்களுமாய் அப்பூமியெங்கும் பயங்கரமாயிருந்தது. அவனிவ்வாறு ஆறுமாதத்துக்குள் நூறுயோசனை சதுரமுள்ள காட்டை எங்கும் எலும்புமயமாக்கி மற்றோர்வனத்துக்குச் சென்றான். அந்தக் காட்டிலும்

விசேஷமாய் எப்போதும் நரமாமிசத்தைப் புசித்துக்கொண்டு எலும்புமயமாக்கி, ஒருநாள் தபசிகள், சித்தர்முதலானவர் சேரிடமாகிய நருமதையாற்றங்கரைக்குப் போயினன். அவ்விதம் தன்செய்கையாலும், வடிவத்தாலும் யாவருக்கும் பயம்விளைத்துத் திரியும்போது அங்கு ஒரு பிராமணன் தனது மனையாளுடன் கலந்திருக்கக்கண்டு தன்பசி பொறுக்கமாட்டாதவனாய் உடனே ஓடி, ஒரு புலியானது மான்குட்டியைப் பிடிப்பதுபோல அந்தப்பிராமணனைப் பிடித்துக்கொண்டான். அப்போது அந்த பிராமணஸ்திரி தன்பர்த்தா ராக்ஷதன்கையிற் சிக்குண்டதைக்கண்டு, மிகுந்த பயமடைந்து, தலைமேல் கைகுவித்துச் சொல்வாளாயினள். ஓ க்ஷத்திரியவமிசத்திற்பிறந்த மகாராஜாவே, மிகுந்த பயத்தால் வருந்தி உம்மையே சரணமடைகின்ற எனக்கு என் நாயகன் பிராணனைக் கொடுப்பதாகிய மகாவரத்தைக் கொடுப்பீராக. நீர் ராக்ஷதனன்று, சூரியவம்சத்திற்பிறந்த மித்திரசகா என்னும் பெயருள்ள மகாராஜன். ஆதலால் இந்தப் பாழுங்காட்டில் உம்மைச்சரணமடைந்த ஏழையானவென்னைக் காப்பது உமக்குக் கடமை. பகைவரைவெல்லுந் திறமுள்ள மகாராஜனே, புருஷனில்லாத ஸ்திரி பிழைத்திருந்துஞ் செத்தவட்குச் சரியானவள். பின்னும்மிளமையில் விதவையாவதை என்னென்று சொல்லுவேன்! நான் தாய் தந்தையரையும் மற்றெவ்வகைப்பட்ட சுற்றத்தையுமறியேன். என்னாயகனே எனக்கு மேலான சுற்றம், எனதுயிர்க்குயிருமவர்தான். சகலதருமங்களையும் ஸ்திரிகளின் பிழைப்புமுதலியவெல்லாம் நீரறிந்தேயிருக்கிறீர். ஆதலால் யாதொரு பந்துஜனமுமில்லாமல் சிறுகுழந்தையுங் கையுமாய் பரிதபிக்கிற ஏழையானவென்னை ரக்ஷிக்கவேண்டும் மகாராஜாவே. இப்பாழுங்காட்டில் நாயகனில்லாமல் எப்படி இருக்கவல்லேன். உமக்கு நான் மகளென்னுமுறையுறவள். எனக்கு என் நாயகனை அளித்து ரக்ஷிப்பீராக. உயிரைக்காத்தளிப்பதினுஞ் சிறந்த தானம் எக்காலத்துமில்லையென்று சான்றோர் கூறுகின்றனராதலால் எனக்குப் பிராணதானம் செய்வீராக. சந்தேகமின்றி நான் உமக்கு மகள்தான். என் கொழுநனை உயிருடன் எனக்குக்கொடுத்து ரக்ஷிப்பீராக, என்றிவ்வாறு சொல்லிக்கொண்டு அந்த பிராமணஸ்திரியானவள் ராக்ஷதத்தன்மையையுடைய மகாராஜனது பாதங்களின் மேல் வீழ்ந்தாள். இவ்வாறு அவள் வேண்டிக்கொண்டும் அவன் சிறிதுமிரக்கமின்றி மான்குட்டியைப் புலி தின்பதுபோல அந்தப்பிராமணனை அநியாயமாய்க் கொன்று தின்றுவிட்டான். பின்பு பதிவிரதையாகிய அம்மாது பர்த்தாவையிழந்ததால் மகத்தான துக்கத்தையடைந்து புலம்பி கோபத்தையடைந்து முன்னம் வசிஷ்டசாபத்தால் அடிபட்டிருக்கும் அவ்விராக்ஷதனுக்குப் பின்னும் சாபங்கொடுப்பாளாயினள். ஓ ராக்ஷதனே, புணர்ச்சிக்குரிமையிருந்த எனது நாயகனை அநியாயமாய்க் கொன்றாயாதலால் நீ ஸ்திரீசம்போகத்துக்குத் தொடங்குவையாகில் அப்போதே இறக்கக்கடவாய். நீ ஏழைப் பிராரத்தனைக்கு இரங்காமல் என் நாயகனைக் கொன்றமையால் நீ என்றும் ராக்ஷதனாகவே யிருக்கக்கடவாய், என்று இரண்டு சாபத்தை ஈந்தனள். அவள்கொடுத்த இரண்டுசாபத்தையுங்கேட்டு அதிககோபங்கொண்டு வாயால்

நெருப்புப் பொறிகளைக கககிககொண்டு உளைபபானாயினன் ஓ துஷடை, நான ஒரு பிசகுசெய்திருககிறேன , இதறகு ஒரு சாபம நீ கொடுககலாமே யன்றி நியாயமின்றி இரணடுசாபம எபபடிகொடுததாய்? இபபோது என பிழை ஒன்றுககு ஒருசாபமேற்றுககொணடேன. மறறொரு சாபம் நீ கொடுத்தமையால இபபோதே நீ யுனமகனுடன்கூட பிசாசபபிறவியாகக்கடவாய் என்றான இவ்விதமாக அவனால சாபததையடைநது அநத பிராமணி உடனே தனபிள்ளையுந தானும பிசாசவடிததை யடைநது பசியால மிக வருநதி மிகவும நடுககததுடன உரதத குரலுடன ரோதனமபணணிக்கொணடு அவ்விராக்ஷதனும இவாகளும ஒருவாககொருவா பழிததுககொண்டு நருமதையாறறஙகரையில மறறொரிராக்ஷதன்வசிககினற ஆலமரததைசசேரநதாாகள் அவ்விராக்ஷதன முனனால் குருவை அசட்டைசெய்த பாபததால அவ்வடிவத்தை யடைநது துயரபபட்டு உலகவிரோதமான காரியஙகளைச செய்துகொணடு அஙகு வசிததுவநதான். இவ்வாறு தானவசிக்கு மரத்தணடைக்குவந்த ராக்ஷதனையும பிசாசஙகளையுஙகணடு மகாகோபஙகொணடு பயஙகரமான வடிவுள்ள நீஙகள் இஙகேனவநதீாகள்? எனனைபபோல நீஙகளுமிந்த வடிவெடுததாகக காணபபடுகிறது. நீஙகளிநத உருவமடைவதறகு ஏதுவாக என்னபாபஞ்செய்தீாகள்? அதை முழுதுஞசொலலுஙகள் எனறு வினவினான கலமாஷபாதன அநத பிரமராக்ஷதன சொல்லைககேட்டுத தான செய்தபாபததையும அநத பாாபபினிசெய்த பாபததையும ஆதியோடநதமாக அவனுககுரைதது பினனுமொனறு சொலலலுறறனன. ஓ மஙகளகரனான புணணியபுருஷா, நீயாா? நீ இவ்வடிவமாமபடிககு எனனசெய்தாய்? நானுனககு மிததிரன, எனக்கு உனவரலாறெலலாஞ சொலலவேணடும, எவன் மிததிரன்விஷயததில் வாய்மையினறி வஞசகமபேசுகிறானோ அவன் மறறெவ்வளவு மேனமைபெறறவனாகிலும மனிதருள மிக இழிவானவனே, அவன கோடிகோடி யுகபரியநதம பாபபலததை அநுபவிசதாலும அநத மிததிரவஞசனைப பாபமுழுதுந தீராது மனிதாகட்கு எததனைதுயரஙகளிருபபினும் அவையெல்லாம மிததிரனைககணடவளவில விலகிபபோகும ஆதலால, நலல புத்தியுடையவன மிததிராிடததில எபபோதேனும் வஞசகமபுரியத் தகாது. தீராபபிணி, வறுமை, பொருளிழவு, சோகமுதலிய துனபமுற்று வருநதுபவனும தனமித்திரனைககணடால உடனே தன வருததமாறிச சுகமடைவன் என்று இபபடி கலமாஷபாதன சொலலைககேட்டு, ஆலமரததிலிருந்த பிரமராக்ஷதன சநதோஷிதது அறத்துககுரிய வசனஙகளைச சொனனான (அவைகளைககேளுங்கள முனிசிரேஷடாகளே,) நான மகததேசதது பிராமணன், முன்னால நான வேதமுழுதுமோதி தருமமே பெருந்துணையாகக் கொணடிருநதேன. எனபெயா சோமதததன் எனபார்கள். நான எனது வித்தை, பருவம செலவ முதலியவைகளால இறுமாந்து எனகுருவுக்கு அகௌரவம் செய்தபாபத்தா லிததன்மையான சரீரத்தைப் பெற்றிருக்கிறேன். இவ்வுருவம் வந்ததுமுதல ஒரு க்ஷணபபொழுதும் எனக்குச் சிறிதேனும் சுகஙகிடையாது. எனக்குப போதுமான உணவுகிடைக்காமல அதிக

துன்பப்படுகிறேன். ஆனால் நூறு ஆயிரமென்கிற கணக்கான பிராமணர்களைக் கொன்று தின்றேயிருக்கிறேன். ஆகிலும் என் பசியடங்குவதைக் காணேன். என்னைக் கண்டோரெல்லாம் அஞ்சவும் அருவருக்கவுந் தக்கதாக எப்போதும் மாமிசபக்ஷணமே கதியாயிருந்தும் தீராப்பசியுந் தாகமும் அதனாலுள்ளத்தில் எரிச்சலும் என்னை வருத்தப்படுத்திக்கொண்டேயிருக்கின்றன. எப்படிப்பட்ட மனிதருக்கும் குருவை மதியாமையாகிற பாபம் ராக்ஷதத்தன்மையையுண்டாக்கும் அது எனக்கே உள்ளங்கை நெல்லிக்கனிபோலிருக்கின்றது. ஆதலால், புத்தியுள்ளவன் இந்தப்பாபம் செய்யலாகாது என்று சொல்லக்கேட்ட கல்மாஷபாதன், நேசனே, நீ குருவென்று மெச்சுகிறையே அந்தகுரு எப்படிப்பட்டவர் என்று சாஸ்திரஞ்சொல்லுகிறது, இதைக் கேட்க நான் மிகுந்த ஆவல்கொண்டிருக்கிறேனாதலால் அதை விஸ்தாரமாக எனக்குச் சொல்லவேண்டும் என்று வினவ, சோமதத்தன் சொல்லலுற்றான்.

மித்திரா, அன்போடு பூஜிக்கவும் வந்திக்கவுந் தக்கவர்களான குருமார் பலருளர், அவர்களைச் சொல்லுவேன் உன்மனது புறஞ்செல்லாவண்ணங் கேட்பாயாக. வேதங்களை ஓதுவித்தவரும், அவற்றின்பொருட்களைத் தெரிவித்தவரும், தருமசாஸ்திரமுதலியவற்றின் பொருட்களைச்சொன்னவரும், மந்திரப்பொருளை விளக்குவித்தவரும், நீதிநூலின்பொருளைத் தெரிவித்தவரும், தருமங்களைச் சொன்னவரும், மந்திரங்களிலும் வேதவாக்கியங்களிலும் சந்தேகம்வந்ததைத் தீர்த்தவரும், விரதங்களைத் தெளிவித்தவரும், ஆபத்தில் காத்தவரும், பசிவேளைக்கு அன்னங்கொடுத்தவரும், உபநயனஞ்செய்வித்தவரும், தீங்கு அணுகாவண்ணம் தடுத்தவரும், தருமபத்தினியின் தந்தையும், தாயுடன் பிறந்தவரும், மூத்தசகோதரரும், தந்தையும், நிஷேகமுதலிய கருமங்களை இயற்றுவித்தவருமாகிய இவர்கள் குருமாரென்று சாஸ்திரங்களில் சொல்லப்படுகிறது. இப்போது உனக்கு நான்சொன்ன இவர்கள் எல்லாரும் பூசைக்கும் வந்தனைக்கும் உரியவர்களென்பதில் சந்தேகமில்லையென்பதைக்கேட்டு கல்மாஷபாதன் பின்னுங்கேட்கிறான். பலபேர் குருமார்கூறப்பட்டனர் இவர்களுக்குள் யார் சிறந்தவர்? எல்லாரும் சரியானவர்கள்தானோ? உள்ளபடி சொல்லவேண்டும் என்பதைக்கேட்டு, சோமதத்தன் நன்றுநன்று, ஓ புண்ணியாத்துமாவே, நன்றாய்க்கேட்டாய் நீ கேட்டவிஷயத்தைச் சொல்லுகிறேன். நமக்கெல்லாம் சீக்கிரத்தில் பெருநன்மையுண்டாகும். ஏனெனில், நாம் ராக்ஷதத்தன்மையுள்ளவரும் பசிதாகத்தால் பீடிக்கப்படுபவருமாகயிருந்து குருவின்பெருமையைக் கேட்கவுஞ் சொல்லவும் விருப்பமுள்ளவர்களாயிருக்கிறோம். முன் சொல்லப்பட்டவர்களெல்லாம் வந்தனைவழிபாட்டுக் குரியவர்கள்தாம், இவ்விஷயத்தில் சந்தேகமில்லை. ஆகிலும் இதில் மேலான சாஸ்திரமர்மத்தைச் சொல்லுகிறேன்கேளாய், வேதங்கள் கற்பித்தவனும், மந்திரப்பொருளுணர்த்தவனும், தந்தையும், தருமமுபதேசித்தவனும் விசேஷமான ஆசாரியரென்று சாஸ்திரம் கூறுகின்றது. ஆகிலும் சகலசாஸ்திரங்களிலும் மெய்ப்பொருளுணர்ந்தவர்கள் மேற்சொல்லப்பட்டவர்களைவிட மேலான ஒரு ஆசாரியர் உண்டென்று உரைக்கிறார்கள். அவர் யாரெனில், அநாதியானை

சமுசாரத்திலுண்டான பாபங்களை அறுக்கும் கருவிகளாய் தருமவாக்கியங்களுடன்கூடிய புராணங்களைச் சொல்லுகிற வித்துவான்களேயாவர். வேதங்களுக்கு வழிபட்டுச்செய்யும் நற்கருமங்களையும், ஈசுவராராதனம் செய்வதிலுள்ள பயனையும், அவரவர் சக்திக்குத்தக்கபடி தருமங்கள்செய்யுமுபாயத்தையும் சொல்லுபவன் மேலான குருவாவான். சகலவேதப்பொருளின் சாரமானவை புராணங்களென்று சகலமான தேவர்களும் முனிவர்களும் சொல்வதால் அப்புராணங்களைச் சொல்லுகிறவனே மேலான குருவாகிறான். எந்த மனிதன் பிறவிக்கடலைக் கடக்க முயற்சிசெய்கிறானோ அவன் புராணங்களைக் கேட்கக்கடவனென்பது சாஸ்திரங்களின் முடிபு. பிராமணசிரேஷ்டர்கள் சகல தருமங்களையும் சொல்லுவன புராணங்களே என்பார்கள். ஆதலால் அப்படிப்பட்ட புராணங்களைச் சொல்லுபவர்களே பரமகுருக்களென்று திறவான்கள் அறிந்துகொள்ளல்வேண்டும். வேதங்களைப் பகுத்துச்செய்த தருமசுரூபியான வேதவியாசபகவான் புராணங்களின்மூலமாய் சகலதருமங்களையும் வெளியிட்டிருக்கிறார். கேளாய் புத்திமானான அரசனே, தருக்கசாஸ்திரம் பிரசங்கத்துக்குதவியாகும், நீதிசாஸ்திரம் இம்மைக்குதவியான பொருளின்பங்களைச் சம்பாதிக்க உதவியாகும், புராணங்களோ இம்மைமறுமையாகிய விரண்டிலும் இன்பம்பெற உதவியாகும். எவனெப்போதும் அன்புடன் புராணங்களைக்கேட்கிறானோ அவனது புத்தியானது தருமமே மேலானகதியென்று தெளிவுள்ளதாகும். ஓ அரசனே, இன்னுங்கேள், எப்போதும் விசுவாசத்துடன் புராணங்களைக் கேட்கிறவனுக்கு சகல நற்குணங்களையுமளிக்கத்தக்க ஹரிபக்தி உண்டாகும். புராணங்களைக்கேட்பதனால் மனிதர்களுக்குத் தருமங்களைச்செய்ய மனமுண்டாகும், தருமங்களைச்செய்தால் பாபங்கள் நசிக்கும், தெளிவான அறிவுண்டாகும். அறம் பொருளின்பம் வீடென்னும் நான்குபயன்களையும் விரும்பும் ஸாதுக்கள் புராணங்களைக்கேட்கவேண்டும். அப்படி கேட்டுக்கொண்டுவருவதால் மேற்சொன்ன நான்கும் கூடிவருமென்பதில் ஐயமில்லை. நானோ பிரமசுரூபமறிந்து பேசவல்ல கௌதமரென்னும் முனிவர் கங்கைக்கரையில் சொல்ல சகலதருமங்களையும் கேட்டு, அவைகளை வழுவின்றி அநுஷ்டித்துவந்தேன். ஒருநாள் நான் பரமேசுவரருக்கு பூஜை செய்துகொண்டிருக்கும்போது அந்த குருவானவர் அருகில் எழுந்தருளியும் அவருக்கு தண்டனிடாமல் தேவபூஜையிலிருந்தேன். பிரமதேஜசுக்கிருப்பிடமாய், மிகுந்த ஞானமுள்ளவராய், சாந்தகுணசீலராய் விளங்கும் அக்கௌதம முனிவர் தாம் சொன்னபடி நற்கருமங்களை நான் அநுஷ்டிக்கிற விஷயத்துக்கு சந்தோஷித்தாரேயன்றி தம்மை நானுபசரிக்கவில்லையென்று கோபங்கொள்ளவில்லை. ஆனால் அப்போது என்னால் பூஜிக்கப்பட்ட சகல லோககர்த்தாவாகிய பரமேசுவரர் குருவை அசட்டைசெய்த பாபியாகியவென்னை ராட்சதனாகும்படி செய்தார். உலகத்தில் தெரிந்தாவது தெரியாமலாவது பெரியோர்களிடத்து மதிப்பில்லாமல் இருப்பதாகிய அபசாரம் செய்பவர்களுக்கு கிடைக்கவேண்டிய பேறுகளும் அவைகளுக்கு ஹேதுவான நற்கருமங்களும் சந்ததியும் அழிந்துவிடுகின்றன. பெரியோர்களுக்கு அன்புடன்

பணிவிடை செய்பவனுக்கோ நல்ல செல்வமெல்லாம் கைகூடுமென்று வித்துவான்கள் சொல்லுகிறார்கள் அந்த குருவுக்கு அபசாரப்பட்ட பாபத்தினால தான் நான் பசியென்னும் தீயாலுள்ளே வேகின்றேன். ஓ மகாராஜனே, நானெப்போது இப்பாபத்தினின்று நீங்குவேனோ அறியேன்.

பௌராணிகர் சொல்லுகிறார். ஓ பிராமணோத்தமர்களே, இவ்வாறு ஆலமரத்துப் பிரமராக்ஷதன் சொல்ல இந்த தருமசாஸ்திரவிஷயமான வினா விடை கேள்விகளால் அவர்களுடைய பாபம் கரைந்துவிட்டது. அச்சமயத்தில் தமது தோளில் கங்காசலத்தைச் சுமந்துகொண்டு, மகா பிரபுவான விசுவநாதனைத் துதித்து அவரது திருநாமங்களை சங்கீர்த்தனம் செய்துகொண்டு, மகத்தான சந்தோஷத்துடன் மகாதருமசீலரான கர்க்கரென்னும் பெயருள்ள கலிங்கதேசத்து பிராமணரொருவர் அங்கு வந்தார் அவரைக் கண்டு பிசாசியும் அவ்விரண்டு ராக்ஷதர்களும் இரைகிடையாமல் பட்டினியாய்க்கிடக்கிற நமக்கு ஆகாரம் கிடைத்ததென்று கைகளைத் தூக்கிக்கொண்டு அவருக்கெதிரேசெல்ல, அவர் கீர்த்தனம்செய்துவந்த பகவந்நாமங்களைக்கேட்டு அவரைக் கொல்லவும் அலைந்து நெருங்கவும் வல்லமையற்றவர்களாய் ஒரு வார்த்தை சொல்லுவாராயினர் ஓ மகாபாக்கியமுள்ள பிராமணரே, ஆச்சரியம்! நாங்கள் முன்னால் ஆயிரங்கோடி கணக்கான பிராமணர்களைக் கொன்று தின்றிருக்கிறோம் ஆயினும் அப்படிப்பட்ட நாங்களும் அஞ்சி விலகி நிற்கும்படி செய்யும் பெருமையுள்ள பகவந்நாமசங்கீர்த்தனம்செய்கிற உமக்கு தண்டனசமர்ப்பிக்கிறோம். பகவந்நாமம் உமக்குக் கோட்டையாயிருந்து ஒருவிதமான தீங்குமணுகாவண்ணம் உம்மைக் காக்கின்றது பகவானுடைய நாமங்களைச் சொல்லுவதினாலேயே நேரிட்ட ராக்ஷதர்களும் அடங்குகிறார்களென்றால் அந்தபகவானுடைய பெருமை இவ்வளவென்று எப்படி சொல்லலாகும். நீர் விருப்பு வெறுப்பற்ற மகா பிராமணராயிருக்கிறீர். கங்காஜலத்தால் எங்களுக்கு ஸ்நானம்செய்வித்து மகாபாபிகளாகிய எங்களை ரக்ஷித்தருளவேண்டும் ஸ்ரீஹரிக்கு அடிமைசெய்ய உறுதிகொண்டதனால தான் சமுசாரத்தினின்று தான் கரையேற வல்லவனான பாகவதன் உலகத்தாரில் தன்னையடுத்த யாவரையும் கரையேற்ற வல்லவனாகிறான் என்று வித்துவான்கள் விளம்புகின்றார்கள். பாபங்களைப் போக்கவல்ல ஸ்ரீஹரிநாமமே பிறவிப்பிணிக்கு மருந்தாகும். அதையே உபாயமாகக்கொண்டு அறிவுடையோன் தனக்கு மோக்ஷத்தைப் பெற்றுக்கொள்ளுகிறான். இரும்பாலாகிய தெப்பத்தைக்கொண்டு நீரைக்கடக்க எண்ணி அதில் ஏறி அதனுடன் முழுகிப்போவதுபோல புண்ணியஞ்செய்யாதவர் மற்றொருவரைக் கரைசேர்ப்பதில்லையென்பது திண்ணம். சகலலோகங்களுக்கும் சந்திரன் சந்தோஷங் கொடுப்பதுபோல நல்லவரும் பிறருக்குச் சுகமே விளைக்கின்றனர். அவர்களுடைய சரித்திரம் மிகவும் அற்புதமானது ஓ பிராமணசிரேஷ்டரே, இப்புவியில் பரிசுத்தமான புண்ணியதீர்த்தங்கள் எத்தனை உளவோ அவையெல்லாங்கூடி கங்காநதியின் ஒரு துளிக்கு நிகராகமாட்டா. திருத்துழாய் தளத்தோடுகூடிய கங்காஜலமானது கடுகத்தனை சிறிது கிடைத்தாலும் அந

னால் எழுபத்தொரு தலைமுறைக்குப் பரிசுத்தியுண்டாகுமென்பது உறுதி. ஆதலால் சகலசாஸ்திரப்பொருளுணர்ந்த மகா புண்ணியவானே, கொடிய பாபஞ்செய்து வருந்துமெங்களை கங்காதீர்த்தங்கொடுத்து ரக்ஷித்தருளவேண்டுமென்று இவ்வண்ணம் அந்த ராக்ஷதர்களால் சொல்லப்பட்ட மேன்மை பொருந்திய கங்காநதியின் மகிமையைக் கேட்டு அந்தப்பிராமணசிரேஷ்டர் அதி ஆச்சரியத்தையடைந்து உலகங்களுக்கு அன்னைபோன்ற கங்காநதியினிடத்து இவ்விராக்ஷதர்க்கே இத்தன்மையான பக்தியுள்ளதாயின் அந்தக்கங்கையின் பெருமையையறிந்த புண்ணியவான்களான பெரியோர்களுக்கு பக்தியிருக்குமென்று சொல்லவேண்டுமோவென்று நினைத்து, எல்லாப்பிராணிகளுக்கும் நன்மைசெய்ய மனமுள்ளவன் பரமபதம்பெறுவன் என்று மனதில் தருமத்தை யுறுதிசெய்துகொண்டு, இரக்கமுள்ளவராகி, துளவத்துடன்கூடின திவ்வியமான கங்காதீர்த்தத்தை அவ்வரக்கர்மேல் தெளித்தார். அவ்வரக்கர்கள் அந்த கங்கைத்தண்ணீர் சிறிதான துளிகள் மேற்பட்டமாத்திரத்தில் ராக்ஷதத்தன்மையைவிட்டுத் தேவர்போல விளங்கினார்கள். பிள்ளையோடுகூடின அந்த பிராமணஸ்திரீயும் சோமதத்தனென்னும் மகததேசத்து பிராமணனும் கோடிசூரியப்பிரகாசமுள்ளவராய், சங்கு சக்கரம் கதை முதலியவற்றைத் தரிப்பவராய், ஸ்ரீஹரிக்குச் சமானமான திருமேனியைப் பெற்றவராய், அந்த கலிங்கதேசத்துப் பிராமணரை வாழ்த்திக்கொண்டு ஸ்ரீவிஷ்ணுலோகத்துக்குச் சென்றனர். கல்மாஷபாதராஜனோ தனது முன்வடிவைப் பெற்றும் அவர்களைப்போல பரமபதங் கிடைக்கவில்லையேயென்று மிக்க கவலையுறுமளவில் ஒருவருக்குந்தெரியாத வடிவினளாய் சரசுவதிதேவி தருமத்துக் கேதுவான நல்வார்த்தை ஒன்று சொல்லலாயினள். அஃதென்னெனில் ஓ மகாபாக்கியவந்தனான அரசனே, நீ துயரப்படவொண்ணாது, இன்னும் ராச்சியத்தில் நீ மேலான போகங்களை அனுபவிக்கவேண்டியிருக்கிறது அதற்குப்பின் உனக்கு முக்தி கைகூடும். நற்கருமங்களால் பாபங்களைத்தீர்த்து விஷ்ணுபக்தியே கதியென்றிருப்பவரெவரோ அவர் வேதவாக்கியங்களால் துதிக்கப்படும் ஸ்ரீவிஷ்ணுபகவானுடைய உலகமெய்துவது திண்ணம் எல்லாப்பிராணிகளிடத்திலும் இரக்கமுள்ளவர்களாய், வேதமோதியவழி நடப்பவர்களாய், ஆசாரியபக்தியே பெரும்பேறாக எண்ணினவர்களான ஸாதுக்கள் பரமபதஞ் சேர்வது ஸ்திரமன்றோ? என்று இவ்வாறு சரசுவதி தோன்றாவடிவினளாய்ச் சொன்ன வார்த்தையைக்கேட்டு, கல்மாஷபாதராஜன் சாந்தமடைந்து, பூர்வத்தில் தனது ஆசாரியன் சொன்ன வார்த்தையை நினைத்து, கங்காநதியையும் அந்த பிராமணரையும் விசுவேசுவரரையுந் துதித்து, அந்த கலிங்கதேசத்துப் பிராமணருக்குத் தனது சரித்திரத்தை ஆதியோடந்தமாக மிகவும் சந்தோஷத்துடன் சொன்னான். பின்பு அவ்வரசன் பரமோபகாரியான பிராமணரை முறைப்படி பிரதட்சண நமஸ்கார முதலிய உபசாரத்தால் சந்தோஷிப்பித்து ஸ்ரீவிஷ்ணு திருநாமங்களைச் சொல்லிக்கொண்டே காசிநகரடைந்து அங்கு ஆறுமாதம் வாசஞ்செய்து விசுவநாதனைத் தரிசித்ததனால் பாபரகிதனாய் மகத்தான சந்தோஷத்துடன் தனது ராச்சியத்தையடைந்து வசிஷ்டரால் அபி

ஷேகமசெய்யப்பெற்று மனோரமமியமான போகங்களை அநுபவித்துக்கொண்டு பூமியை ரக்ஷித்து மோக்ஷமடைந்தான் கேளுங்கள் முனிவரரே, ஆதலால கங்கையின் மகிமைக்கடலின் கரையறியத திரிமூாததிகளாலுமாகாது. கங்கையினபெயரைக் கேட்பதனால மனிதன தனது சகலபாபங்களும் நீங்கி பரமபததனதயடைவானெனபதில சந்தேகமில்லை. கஙகை கஙகையெனறு அமமகாநதியின பெயரை ஒருகால சொன்னாலும அபபோதே பாபங்கள அகலும, பரமபதம் கைகூடும். இநத அததியாயததை அனபோடு படிப்பவாகளுககும் கேட்பவாகளுககும ஐயமினறி கஙகையில ஸநானமசெய்த பலனுணடாகும

---

## ௧௦ - வது அத்தியாயம்.

# தேவாசுரயுத்தமும் அதிதிதேவியின் தவமும்.

இந்தபபடி சூதபௌராணிகா அருளிச்செய்யக்கேட்டு, சௌனகாதிகள் ஓ மகாத்துமாவான சூதபௌராணிகரே, இநத கங்கை ஸ்ரீமந்நாராயணனை திருவடிக்குப பூஜைசெய்த தீாத்தததால உறபததியானதெனறு முனிவாகளால சொலலப்படுகிறதே அதை அடியோஙகளுககு சாதிததலவேணடும் எனறு பிராாததிததாாகள் அபபோது பௌராணிகா ஓ ரிஷிகளே, ஸ்ரீஹரியைத் தியானிபபதே பெருமபயனுகக்கொண்டிருககிற நீஙகள எலலீரும கேளுஙகள் என்று சொலலததொடஙகினா.

பூாவம் மகாததுமாவான நாரதபகவான் ஸநத்குமாரயோகிகுச்சொன்ன மகாபுணணியகரமான சரிததிரமானது சொல்பவாககும கேட்பவாககும சகலபாபங்களையும நீககி மோக்ஷபரியந்தமான சகலசுகஙகளையும் அளிக்கும. அத்தகைய மகிமைபொருநதிய சரித்திரத்தைச்சொலலுகிறேன். தக்ஷப்பிரஜாபதிபெணகளும் கசியபபபிரஜாபதி பத்தினிகளுமான திதி அதிதியெனபாரிருவருள், திதியென்பாளுடைய உதரத்தில் அசுராகளும, அதிதியினது கர்பபத்தில தேவாகளும் உதித்தனா. சககளத்திமககளாகிய இவாகள் ஒருவாக்கொருவர் பொறாமைகொண்டவர்களாய் ஒருவர் மற்றொருவனாவெலல விரும்பிக்கொண்டிருப்பார்கள் பிரஹலாதாழ்வான் புத்திரனை விரோசனனுடைய குமாரனாகிய பலியென்னும அசுரராஜன் அசுராகளுககெல்லாக் தலைவனாய் மிகுந்த செல்வம்பொருந்திய இப்பூமிமுழுதுங் தனதாக்கிக்கொண்டதுமன்றி சுவர்க்கலோகத்தையும் ஜயிக்க மனம்வைத்திருந்தான். ஓ ரிஷிசிரேஷ்டர்களே, அந்த பலிசக்கிரவர்த்திக்கு பதினாயிரங்கோடி யானைகளும், அவ்வளவு குதிரைகளும், தேர்களும், ஒவ்வொருயானைக்கு ஐந்நூறுவிழுககாடு காலாட்களுமான பெரும்படையுண்டு. அவனுக்கு அனேக

மந்திரிகளுக்குள் தலைவராகிய கும்பாண்டன் கூபகர்னன் எனனும் இருவருணடு அவனுடைய நூறுபிள்ளைகளில மூததானுகிய பாணுசுரன் நீதிநூலறிவிலும் எதிரிகளைவெல்லும் சகதியிலும் தநதைதககுநிகரானவன. இவ்வணணமான செலவததா விறுமாநத அநத பலிசககரவாததியானவன தனது கொடிகளாலும் குடைகளாலும ஆகாயததில மின்னல மினனுவதுபோலவும், ஆகாயமென்னுஙகடலில் அலைமோதுவதுபோலவும செய்துகொணடு தேவாகளை வெலலுவதற்காக பிரயாணமானுன இவ்வாறு புறபபட்டு இந்திரபட்டணத்தருகிறசோநது தனது சிஙகமபோற் சூரததன்மையுடைய அசுரரகளால அநநகரை முற்றுகைபோட்டான. இசசெய்திகேட்டு,இநதிரன்முதலிய தேவாகள யுததகோலததுடன் வெளியிலவநதாாகள. பினபு சுராசுராகளுக்கு பிரளயகால மேகமுழக்கம்போனற பெருஙகூசசலுடனகூடிய பயஙகரமான சணடையுணடாயிற்று மிகவும பயஙகரமான அநத போாக்களத்தில அசுரர்கள தேவாகள்மீதும, தேவாகள அசுராகள்மீதும குமபல்குமபலாக பாணஙகளையெயதார்கள அபபோது இநத அசுராகளைக கொலலுகொலலு, குததுகுதது, கிழிகிழி, இவனை வதைதககூரியவன என்னும இரைசசலகள உணடாயின தேவாகளின பேரிமுழககஙகளாலும, அசுராகளின அட்டகாசஙகளாலும, ரதஙகளின சககரவொலிகளாலும, அமபுகள்பறககிற சபதங்களாலும, குதிரைகளின கனைபபுகளாலும, யானைகளின் பிளிறலகளாலும, விலலுக்களின டஙகாரஙகளினுலும் உலகமெஙகும சபதமயமாகவேயிருநதன தேவாசுராகள் எய்த படைகளிடிததுககொணடதனுல பெருநதியுணடாய் பயஙகரமாயிருபபதைககணடு, உலகததாரெலலாம இதேதோ அகாலததில அககினிபபிரளயம் வநதுவிட்டதெனறெணணினாகள். பளபளபபாய்விளஙகும ஆயுதஙகளைக கைக்கொணடிருக்கும அசுராகளின் படையானது இரவில மேகஙகளகூடி மினனலமினனுவதுபோலக் காணபபட்டது. அநத பயஙகரமான போரில அசுராகள மலைகளைககொணடுவந்து தேவாகள்மேலபோட, அவற்றையெலலாம் இந்திரனுனவன மேகமபோல காசசித்துககொணடு வலுவுள்ள நாராசஙகளையெய்து பொடிபடபபிளந்தான சிலா யானைகளால யானைகளையும், சிலா தோகளால் தோகளையும, சிலா குதிரைகளால குதிரைகளையும, சிலா தடிகளால தடிகளையும் அடிததொழித்தனா சிலா இருப்புத்தடிகளாலடிபடடு இரததக்குழமபில வீழநதனா. சிலா அஙகிருந்து கிளமபி விமானஙகளிலேறினாகள். தேவாகளால மடிந்த அசுராகள் உடனே தேவவடிவைபபெற்று தேவருடனகூடி அசுராகளையே வருத்தினாகள். பினபு சுரர்களாலடிபபட்ட அசுராகளெலலோரும சோந்து பெருமுயற்சியுடன பலவிதமான ஆயுதங்களால் தேவர்களை அடிததார்கள் இருபபுலககைகள், கேடகங்கள், வாட்கள், கோடரிகள், ஈட்டிகள், இருபபுழலைகள், கததிகள், தடிகள், தோமிகள், இருப்பாணிகள், உலக்கைகள், மரவெட்டிகள், கலப்பைகள், பட்டயங்கள், வேலகள், கற்கள், பீரங்கிகள், பாலாக்கள், இருப்புத்தடிகள், கைப்பிடிகள், சூலங்கள், கட்டாரிகள், பாசங்கள், சிற்றம்புகள் இன்னுமிவ்வகையான பலகருவிகளால தாக்கியும், யானை குதிரை முதலியவற்றுல் தாக்கியும்,

பயங்கரமான போரை அசுரர்கள் நடத்தினார்கள். அப்போது தேவர்களும பலவிதமான அஸ்திரங்களை அசுரர்மேலெய்தார்கள் இப்படியாக பலவாயிர வருஷங்களு மடங்காமல பயஙகரமான சண்டை நடந்தது. பின்பு தேவர் படை இளைத்து அசுரர்படை வலுககவே தேவர்கள் தோற்று தேவலோகத்தைக் கைவிட்டு எலலோரும் ஓடிபபோயினர். ஓடியும் அசுரர்கள் பின தொடர்நது வநதடிபபார்களென்ற பயததினால் மானிடவடிவம்பூண்டு பூமியினமேல திரிந்தாாகள.

ஸ்ரீமந்நாராயணனேகதியென்று நமபின மகாததுமாவும் விரோசனபுத்திரனும அதிக பலமுளளவனுமான பலிசககரவர்ததி எஙகுந் தடைபடாத ஆளுகையுடையவனாய் நாளுககுநாள் செலவம் வளாநதுவர, இமமூனறு உலகஙகளையும ஏகசததிராதிபததியம் செய்துகொணடு, இநதிராதி திககுபபாலகா காரியங்களையெலலாம் தானே செய்துகொணடு, ஸ்ரீஹரிககுப பிரீதிபணணுவதில அதிக நோககுடையவனாய், பலவிதயாகஙகள செயதுவநதான். இநதிரனமுதலிய தேவாகளவிஷயமாகப பிராமணாகள எநதயாகஙகளைச்செய்தாலும் அவற்றில அநத பலிசககரவாததியே தேவாகளுககுச சேரவேணடிய ஹவிசுககளை கைககொணடான்

## அதிதிதேவியின தவப்பெருமை

அப்போது தேவாகளின தாயான அதிதியெனபவள் தமமக்கள் தோறறுபபோய ஒளிநது திரிவதைககணடு நான வீணுககுப பிளளைகளைப பெறறவளானேனேயென்று மிகவும கிலேசித்து, இமயமலைககுப போய், அஙகு இநதிரனுககுச செலவமும், அசுரருக்குத தோலவியும உணடாக வேணடுமென்ற விருபபததுடன் ஸ்ரீமநநாராயணனை தியானிபபதிலுறறமுள்ளவளாய், முதலில கொஞசகாலம உட்கார்ந்திருநதும, பின்பு நினறவணணமாகவும, பின்பு ஒருகாலநிலையாகவும, அதனமேல ஒருகால பெருவிரலால நினறுகொணடும, சிலகாலம பழஙகளைப புசிததும, பின்பு சருகுகளை உணடும, பின்பு ஜலபானமாததிரமசெய்தும, அதனபிறகு வாயுபக்ஷணம் செய்தும, அதனமேல ஓர்வித ஆகாரமினறியும் இருந்துகொணடு, சதசித்து ஆனந்தமூர்ததியாய் எலலாவுயிாக்குமுயிராய்விளஙகும எமபெருமானைத தனக்குள தியானித்துககொணடு, ஆயிரந் தேவவருஷகாலமளவாக மிக அருமையான தவமசெய்துகொணடிருந்தாள் இவ்வாறு அதிதி தவஞ்செய்கிறசெய்தி கேள்வியடைந்து பலிசக்கரவர்ததி மாயரூபங்கொள்ளவலல பல அசுரர்களையேவ அவாகள் தேவர்கள்போலுருககொணடு, அதிதியணடைககு வந்து சொலலலுற்றார்கள். தாயே, ஏனிந்தக் கடுந்தவந் தொடஙகியிருக்கிறாய், உனதுசரீரம் உலர்ந்துபோயிறறே, இதனை அசுரர்களறிந்தால நமக்குப் பெருந்துன்பம் சமபவிக்குமே, உடமபுலாந்துபோகக காரணமாய் பசிவியாதிமுதலிய துனபங்களுக்கிடமான இக்கடுந்தவத்தை விட்டுவிடக்கடவாய், அதிக பிரயாசைபபட்டு புணணியமதேடுவதைப் பணடிதர்கள் மெச்சுவாரல்லர். ஆத்துமா உஜ்ஜீவிக்கத்தக்க உபாயத்தைததேட விருப்பமுடையவன தன்சரீ

ரத்தை எப்படியாவது ஜாக்கிரதையாய்க் காத்துக்கொள்ளவேண்டும் அப்படி சரீரத்தைக் காத்தலில் கவனிக்காதிருப்பவர்களே ஆத்துமாவை அழிக்கிறவர்களாகிறார்கள் அதுபோகட்டும் ஏ நற்குணமுள்ள மாதாவே, உனது மைந்தர்களாகிற எங்களை விட்டிருப்பதால் எங்கட்குத் துன்பமுண்டாகின்றது அப்படி யெங்கட்குத் துன்பமுறாவண்ணம் இத்தவம்செய்தலை ஒழித்து எங்களிடம் வரவேண்டும் தாயில்லாதபிள்ளைகள் இறந்தவர்களுக்குச் சமானமேயென்பதில் சந்தேகமில்லை ஒருவனுக்குத் தாய்வீட்டிலில்லாமலும் பாரியை கடியன் பேசுபவளுமாயிருந்தால் அந்தவீடு காடொக்குமாதலால் அவன் காட்டுக்கேபோய்விடலாம் பசு பக்ஷி பாம்பு முதலியவைகளும் தாயில்லாவிடின் சுகம்பெறுவதில்லை ஆகலால் அவை செத்தவைபோலாகும் மனிதன் மிகுந்த வறுமையடையினும், பிணிகளால் வருத்தமுறினும், நாடுவிட்டு மறுநாடுபோய் கிலேசமுறினும் தாயாரைப் பார்த்துக்கொண்டிருக்கப் பெற்றால் துன்பங்களனைத்தும் நீங்கி இன்பத்தைப் பெறுபவனாகிறான் அன்னம் பானம் பொருள் பெண்டிர் முதலியவற்றின்மேல் ஒருகால் ஒருவனுக்கு வெறுப்புவருவதுண்டாகினும் ஒருகாலும் தனது தாயின்மேல் வெறுப்புவாராது எவன் தனதுவீட்டில் தாயிருக்கப்பெற்றிலனோ, பிள்ளைகள் தருமசிந்தையுள்ளவரல்லரோ பத்தினியானவள் கணவனே தன்னுயிராகக்கருதியிருக்கும் நன்மையாய்ந்தவளல்லவோ அவன் காட்டுக்கே ஓடிப்போகவேண்டும் ஸ்ரீமந்நாராயண பக்தியில்லாத தருமங்களும், சுகமனுபவிப்பதற்குதவாத பொருளும், பெண்டுபிள்ளைகளில்லாத வீடும் எப்படியோ தாயில்லாத மனிதனும் அப்படியே வீணானவன் ஆதலால் அம்மா! துன்பப்படுகின்ற உனது மக்களாகிய எங்களைக் காத்தளிக்கும்பொருட்டு எழுந்துவா என்றிப்படி தேவரூபர்களான அசுரர்கள் தேவவாக்கியமாகச்சொல்லி வேண்டவும், அதிதியானவள் தவநிலையைவிட்டுச் சிறிதும் பிசகாமல் பரமாத்துமாவைத் தியானிப்பதே பொருட்டாகக்கொண்டிருந்தாள் அப்போது அந்த அசுரர்கள் அவளைக்கொல்ல வெண்ணங்கொண்டு, பிரளயகாலமேகமுழக்கம்போல கர்ஜித்துக்கொண்டு, கோபத்தால் கண்கள் மிகச்சிவந்தவர்களாய், தங்கள் பற்களைக் கடித்தவாறே அந்த காடுமுழுதும் க்ஷணப்பொழுதிலெரிந்துபோம்படியாய் பெருந்தீயையுண்டாக்கினார்கள் அந்தத் தீயானது நூறுயோசனை விஸ்தாரமுள்ள அந்த இமயமலைக்காட்டை எரித்துவிட்டது அதனால் அந்த அசுரர்களும் வெந்துபோனார்கள். இதில் யாதொன்றும் அந்த அதிதியம்மனுக்குத் தெரிந்ததன்று எம்பெருமானிடத்தில் மனதைவைத்திருக்கும் அந்த தேவமாதா ஒருத்தியே அந்தத்தீயில் வேகாது மிகுந்தனள் அப்படி யாதொரு தீங்கும் அணுகாவண்ணம் எம்பெருமானுடைய திருவாழியாழ்வான் காத்துக்கொண்டிருந்ததால் அவள் எம்பெருமானை தியானித்துக்கொண்டு சுகமேயிருந்தனள்.

---

## கக - வது அத்தியாயம்.

# பகவானுடைய திரிவிக்கிரமாவதாரசரித்திரம்.

## சௌனகாதிகள் பிரச்னம்.

ஓ சூதமாமுனிவரே, அந்த அக்கினியானது அதிதியைமாத்திரமெரிக்காமல் அதற்கப்பெயர் அசுரரையும் கணப்பொழுதிலெப்படி எரித்ததோ அதைக் கேட்க எங்களுக்கு மிக வியப்புண்டாகின்றது. இவ்வளவு வியப்புக்குக் காரணமாகிய அதிதியின் பெருமையை இப்போதெங்களுக்குத் தெரியச் சொல்லவேண்டும். ஸாதுக்களான முனிவர்கள் பிறருக்குத் தெரியாதவற்றைத் தெரிவியாமலிருப்பதில்லை. எப்போதும் இஷ்டமுள்ளவர்களன்றோ? என்றிவ்விதமாய்ப் பிரசனம் செய்த ரிஷிகளை நோக்கிச் சூதபௌராணிகர் சொல்லலுற்றார்.

ஓ முனிவர்களே, கேளுங்கள். அந்த அதிதிமாத்திரமன்று, எம்பெருமான் விஷயத்தில் தொண்டுபூண்டவர்களாய் அவரைத் தியானிப்பதே காரியமாயிருக்கும் புண்ணியவான்களின் பெருமையே அவ்வண்ணமானது. அவர்களை ஹிம்சிக்க வல்லமையுள்ளவர் ஒருவருமில்லை. ஓ ஸாதுக்களே, ஸ்ரீஹரிபக்தன் வாசம்பண்ணுமிடத்தில் பிரமன் விஷ்ணு சிவன் என்னும் திரிமூர்த்திகளும் இன்னுமுள்ள தேவர்களும், சித்தர்களும் எப்போதும் வாசம்பண்ணுகிறார்கள். தூர்விஷயத்தில் மனதைச் செலுத்தாதவர்களின் மனதிலும், பகவந்நாமங்களை அன்புடன் உச்சரிப்பவர்களின் மனதிலும் அந்தப்பகவானான ஸ்ரீஹரியானவர் குடியிருக்கிறாரென்றால் ஓயாதசிந்தையாகிய தியானத்தைச் செய்துகொண்டிருப்பவர்களுக்குச் சொல்லவேண்டியதென்ன! சிவபூஜையிலாவது ஹரிபூஜையிலாவது ஊற்றமுள்ள மனிதனெங்கிருக்கிறானோ அவ்விடத்தில் லோகமாதாவாகிய ஸ்ரீமகாலக்ஷ்மியும் மற்றெல்லா தேவர்களுமிருக்கிறார்கள். எவ்விடத்தில் யாரேனும் ஸ்ரீஹரிபூஜைசெய்ய முழுமனதுடன் தொடங்கியிருக்கிறாரோ அவ்விடத்தில் அசனுவது திருடனுவது பிணிகளாவது இடையூறு செய்வதில்லையென்பது பிரசித்தந்தானே. பிரேதங்கள், பிசாசங்கள், கூச்மாண்டங்கள், கிரகங்கள், பாலகிரகங்கள், டாகினிகள், ராக்ஷதர்கள் இப்படிப்பட்டவைகள் ஸ்ரீஹரிபூஜைசெய்பவரை வருத்தப்படுத்துவதில்லை. பின்னும் ஸ்ரீஹரிபூஜையில் மனம் வைத்திருப்பவர்களிருக்குமிடத்தில் பிறருக்குப் பீடைசெய்வதே தொழிலாகக்கொண்ட பூதம், பேதாளம் முதலிய துஷ்டஜந்துக்கள் இருக்கமாட்டாமல் அழிந்துவிடுகின்றன. புலன்களைவென்றவரும், எல்லார்க்கும் நல்லவரும், மெத்தெனுந்தன்மையுள்ளவரும், விஷ்ணுபூஜையில் மனவிருப்பமுள்ளவருமான ஸாதுக்கள் வசிக்குமிடத்தில் சகலதேவர்களும் தத்தமபெண்டிர்களுடன் அவருக்கு அனு

கூடலராயிருக்கிறார்கள். பகவானையே தியானிக்கும் பாகவதர்கள் ஒரிமைப்பொழுதேனும் அல்லது அதில் பாதிப்பொழுதேனு மெங்கிருக்கிறார்களோ அங்கு சகலபுண்ணியதீர்த்தங்களுமிருப்பனபோலாகும். அல்லது அவ்விடமே எல்லாப்புண்ணியதீர்த்தங்களும் எல்லாப் புண்ணியக்ஷேத்திரங்களுமாயிருக்கும். பகவான் திருநாமத்தைச் சொன்னமாத்திரத்திலேயே சகலமான இடர்களுந் தீருகின்றன. அவனைத் துதிப்பதிலும் அவனைப் பூசிப்பதிலும் அவனைத் தியானிப்பதிலுமுள்ள மகிமையைச் சொல்லவேண்டியதென்ன? ஓ ஸாதுக்களே, ஆதலால் அப்படிப்பட்ட பாகவதையான அதிதிக்கு அசுரர்களாலாவது அக்கினியாலாவது ஒருதீங்கும் உண்டாகவில்லை

## அதிதிதேவிக்குப் பகவான் பிரத்தியக்ஷமாய் வரமீதல.

பின்பு அருள்விளங்குந் திருமுகமும், செந்தாமரையிதழ்போற் பரந்த திருக்கண்களும், திருவாழி திருச்சங்கு முதலிய திவ்யாயுதங்களுமுள்ளவெம்பெருமான் அதிதிக்குச் சமீபத்தில் தோன்றி மந்தஹாஸவிலாசத்தால் திசையெங்கும் விளங்கச்செய்துகொண்டு சகல புண்ணியபலன்களையுமளிக்கவல்ல திருக்கையால் கசியபர் மனையாளான அதிதியைத் தடவிக்கொடுத்துச் சொல்லவாராயினார். ஓ தேவமாதாவான அதிதியே, நெடுங்காலம் வருந்திக் கடுந்தவம் புரிந்தாய் உன்தவத்தால் சந்துஷ்டியடைந்து உன்மேல் மிகுந்த அருள்கொண்டுவந்தேன் இனி உனக்கு பெருநன்மை உண்டாகுமென்பதில் ஐயமில்லை நீ எதைவேண்டி யிவ்வளவுதவம் செய்தனையோ அதைக்கேள் கொடுப்பேன் ஓசுகுணமுள்ள பாக்கியவதி, அஞ்சாதே உனக்கு நன்மையுண்டாவது ஸ்திரம் என்று சொல்லக்கேட்டு அதிதியம்மாள் சகலலோகங்களுக்கு மின்பந்தருளும் அந்த வெம்பெருமானை நமஸ்கரித்துத் துதிப்பாளாயினள்

## பகவத் ஸ்தோத்திரம்

ஸத்துவரஜஸதமஸென்னும் முக்குணங்களைக்கொண்டு உலகங்களை அளிக்கவும் அமைக்கவும் அழிக்கவுங் காரணமாய், தேவர்க்குந் தேவராய், தன்னை ஒப்பாரும் தன்னில் மிக்காருமில்லாதவராய், எங்குமபரந்துள்ள ஓபகவானே, தேவரீருக்கு நமஸ்காரம் கருமவசியமான வடிவொன்றுமின்றி உலகங்களை ரக்ஷிக்கவேண்டிய சங்கற்பத்தால் பலவடிவங்களைக்கொண்டவரும், தீயகுணங்களிலொன்றுமில்லாமல் சகலகல்யாணகுணங்களும் நிறைந்திருக்கும் தன்மையுடையவருமான தேவரீருக்கு நமஸ்காரம் தமக்குக் கட்டளையிடுபவனொருவனுமின்றித் தாமே யாவரையுமாளுபவராய் மேலான அறிவே வடிவாகவுள்ளவராய், அப்படியெல்லாமறிந்திருந்தும் பக்தர்களின் குற்றத்தைக் காணமாட்டாதவர்போல் அவர்க்கு நலமேசெய்யுந் தன்மையுள்ளவராயிருக்கும் தேவரீருக்கு நமஸ்காரம். மகாமுனிவர்கள் எந்த வுமது அவதாரத் திருமேனிகளைப் பூசிக்கிறார்களோ அப்படிப்பட்ட அபிராகிருதசுவரூபராய், ஆதிமூலப்பொருளாய், எல்லாவுயிர்க்குமுயிராயிருக்கும். உம்மையெண்ணி

டபபொருள் கைகூடவேணடித தொழுகிறேன ஸநகாதியோகிகளுக்கும அநநதகருடாதி நிததியசூரிகளுககும முறறுமுணாவரிதான தனமையுடையவராய, உலகஙகளுககுக காரணராய, மாயைககுத தாம உள்ளாகாமல மாயையால எலலாம நடததுபவராயுளள எமபெருமானைத தொழுகிறேன சகல மாயாபிறவிகளையும அழிககவலல திவயதரிசனமுளளவராய, உலகமெனனு முடலுககுயிராய், உலகஙகளுககு விததானவராய, யாவராலும வணஙகப பட்டவராயுள்ள பரமபுருஷனைத தொழுகிறேன எவனுடைய திருவடித தாமரைததாது தஙகளமுடிமேல தாஙகுவதே பெருமபேறெனறு மகாததுமாக்கள பெறுகிறாாகளோ அபபடிபபடட பெருமைககிடமான தாமரையாளகலாத தனமையுளளவனைப பணிகிறேன. வேதஙகளுமுளளபடி யறிய மாட்டாதொழியுமதனமையான மகிமையுடையவராயினும பகதிககு வசபபட்டு அடியாரிடந் தேடிவருபவரான எமபெருமானை வநதிககிறேன. நசவரமான பொருளகளினமேற பறறறு முககுணசசெய்கையொழிநத முனிவாகள் எபபோதும பற்றுதறகுரிய கருணைமுதலிய நறகுணஙகளுககுக கடலபோனறவராய் விருபபு வெறுபபறறவராயுள்ள தேவனை வநதிககிறேன யக்கியஙகளைத் தடைபடாது நடத்துபவரும அவைகளால ஆராதிககபபடுபவரும, அவைகளைநடததும யஜமானனமுதலியவாகடகு ஆததுமாவானவரும, அவைகளுககுப பலனளிபபவரும, அவைகளசெய்யவேணடிய விதிகளை வேதமூலமாக வெளியிடுபவருமான சுவாமியை ஸேவிககிறேன அதிபாபிஷடனான அஜாமிளனெனபவனகூட எநதபகவானுடையநாமததை அசதியில சொனன மாததிரததில் பாபக்கடலைககடநது பரமபகததைப பெறறுனே அநத சாவலோகசாக்ஷியை ஸேவிககிறேன உலகஙகளுககு நனமைஉணாததுங குருவும நற்பயனளிககும பிரபுவுமானவெமபெருமானே, ஹரியெனபதும சிவனதான், சிவனெனபதும ஹரிதானெனறு தெரிநது உனனையே தொழுகிறேன் பிரமனமுதலிய சகலதேவாகளும எவனதுமாயையெனனும வலையிற சிக்கினவாகளாய் அவனது மேலான தனமையை அறியமாட்டாதிருககிறாாகளோ அபபடிபபட்ட சாவேசுவரனைப பணிகிறேன எபபோதும இருதய கமலததில வசிபபவனுயிருநதும மூடாகளுககு எட்டாதவனுய், காலததாலும இடததாலும் வஸதுவாலும அளததலரியதனமையுடையவனுய், ஞானத்துக கேசாக்ஷியாய் விளங்குபவனை வநதிக்கிறேன முகததில பிராமணனையும், தோளில க்ஷத்திரியனையும, தொடையில வைசியனையும, பாததில சூத்திரனையும், மனதில சநதிரனையும, நேததிரததில சூரியனையும, முகததில இநதிரனையும் அககினியையும, காதில காற்றையும் படைததவனும, மூனறுவேதஙகளும் ஆறுவேதாஙகஙகளும, எழுசுரங்களும வடிவாககொணடவருமான தேவரீருககு இனனும இனனும பலநமஸ்காரஙகள செய்யககடவேன இந்திரன அக்கினிமுதலிய அஷடதிக்குபாலகரும சூரியசநதிராகளும் உமது அமிசத்தால விளஙகுதலபறறி நீரே அவரெலலாருமெனறு சொல்லும்படி வீற்றிருககிறீா தேவாகளும, செடி முதலியவையும, பிசாசராக்ஷஸர்களும், மலைகளும, சிததரும், கநதருவரும, கிளமும, கடலும, இன்னுமுள்ளயாவும

உமது சரீரமேயல்லாது பரமார்த்தமாவாகிய உமக்குப் புறம்பானதொன்றுமில்லை. ஆதலாலப்படி சர்வேசுவரனாய், சர்வகாரணனாய், சர்வாந்தர்யாமியாயிருக்கும் உம்மை சர்வகாலத்திலும் சர்வதேசத்திலுந் தொழப்பெறுவேனாக. நாதனற்றவர்களுக்கு நாதனாய, எல்லாமறிந்தவனாய், ஆதிமூலப்பொருளாய, வேதசுவரூபியாயிருக்கும் ஆண்டவனே, அசுரர்களால் வருத்தப்பட்ட என்மக்களை தேவரீர் காத்தருளவேண்டும்

இவ்வண்ணமாக அதிதியானவள் எம்பெருமானைத் துதித்து பலமுறை சேவித்துக் கைகளைக் குவித்துக்கொண்டு நின்று ஸதனங்கள் நனைந்துவிடும்படி ஆனந்தக்கண்ணீர் சொரிய ஒருவசனஞ் சொன்னாள் ஓ சர்வகாரணனான தேவதேவனே, அடியேன்மேல் கிருபையுண்டாயிருந்தால் என்பிள்ளைகளான இந்திராதிதேவர்களுக்குச் சத்துருபாதையில்லாத ஐசுவரியத்தைத் தந்தருளவேண்டும். ஓ சுவாமியே, சர்வலோகமும் உமது சரீரமன்றோ? சராசரங்களுக்குள் நீரிருக்கிறீரன்றோ? எல்லாமுமக்குத் தெரிந்ததன்றோ? நீரெல்லாவற்றையுஞ் சங்கற்பத்தாலாக்கவுமளிக்கவுமழிக்கவும் வல்லவரன்றோ? ஆதலால் உமக்குத் தெரியாதவிஷயமென்ன? அடியேனை மயங்கப்பண்ணுவானேன். சுவதந்திரரான நீர் பரதந்திரரான வெம்போலியர்களை ஆட்டுவது உமக்கு விளையாட்டாயிருக்கிறது ஓ தேவதேவா, நீரெல்லாமறிந்திருந்தும் அடியேன் மனதிலுள்ள இஷ்டத்தைக் கேட்டுக்கொள்ளும்படி நியமித்தருளியபடிக்கு விண்ணப்பஞ்செய்வேன் நான் வீணுக்குப் பிள்ளைகளைப்பெற்றேனென்னும்படிக்கு அசுரர்களால் வருத்தமடைந்தேன் ஆகிலும் அந்த அசுரர்களுமென் பிள்ளைகளே ஆதலால் அவர்களைக் கொல்லத்துணிகிறேனல்லேன் அவர்களைக் கொல்லாமலே என்பிள்ளையாகிய இந்திரனுக்குச் செல்வத்தைத் தந்தருளவேண்டும், என்றிவ்வாறு பிரார்த்தித்த அதிதியைநோக்கிப் பரமாத்துமாவான ஸ்ரீமந்நாராயணன் பின்னும் அதிகப்பிரீதியடைந்தவராய் நல்ல சுபாவமுள்ள அந்த அதிதிக்கு அதிகானந்தமுண்டாகும்படி மிகுந்த அன்போடு அவளைத் தழுவிக்கொண்டு சொல்வாராயினர் ஓ அதிதிதேவி, சந்தோஷமாயிற்று உனக்கு மங்களமுண்டாகும். நீ சக்களத்திபிள்ளைகளிடத்திலும் குற்றம்பாராட்டாமல் அன்புள்ளவளாயிருப்பதால் இவ்வளவு நல்லதன்மையுள்ள உனக்கு நான் புத்திரனாகக்கடவேன் இப்போதென்விஷயமாக நீசெய்த இந்த ஸ்தோத்திரத்தைப் படிக்கிற எந்தமனிதருக்கும் மக்களும் பொருளும் போகமும் ஒருபோதுங் குறைவுறுவதில்லை தம்பிள்ளையிடத்திலும் பிறர்பிள்ளையிடத்திலும் வேற்றுமையின்றிச் சரியான அன்புடன் யார் நடப்பாரோ அவர்களுக்குப் பிள்ளைகள்விஷயமான துன்பமொன்றுமுண்டாகாதென்று இவ்வாறு எம்பெருமானருளிச்செய்தார் (அப்போது அதிதி) எல்லாப்பொருளுக்கும் வித்தாய், அழிவற்றவராய, எல்லாவுயிர்க்குமுயிராயுள்ள எம்பெருமானே, உமது ஒவ்வொரு ரோமத்திலும் ஆயிரங்கோடி பிரமாண்டங்களடங்கியிருக்கின்றன, அப்படிப்பட்டவும்மை உதரத்தில் தாங்க அடியேன் வல்லவளல்லேன் வேதங்களாலும் தேவர்களாலும் சிறிதுமுணரலாகாத தன்மையுடைய சர்வேசுவரரே, உம்மை ஆராதிப்பதேயன்றிக் காப்பதில் தரிப்பதற்கு

என்றுசொலபபடியாகும் அணுவினுமணுவான சிறுவடிவுள்ளவராயிருநதாலும் மகததினும் மகததாய எஙகுமநிறைநது எலலாவுலகஙகளையும படைத்தல முதலியவறறால விஹரிததுககொணடிருககும பரமபுருஷனாகிய உமமை அடியேனெவ்வணணந தாஙகமாட்டுவேன மகாபாபஙகள்செய்தவனும் உமது திருநாமததை நினைததமாததிரததாலே பரிசுததனாகி மோக்ஷமும பெறுவானனறோ? அததனை பரிசுதத சுவரூபரான உமமை மிகவுமிழிவானதனமையுளள அடியேன எபபடித தாஙகுவேன, எனற அதிதியின வாாததைகளைககேட்டு லீலாவதாரஙகளசெய்தருளுமெமபிரானனவா அவளையஞசாதேயெனறுசொலலி ஒரு விசேஷம விளமபலுறறாா

மகாபாககியவதியான அதிதி, நீ சொனனதெலலாம்மெய்தான சந்தேகமிலலை ஆகிலும அதிகரகசியம ஒனறு உனககுசசொலலுவேன கேட்பாயாக. தமதெனபதனால ஒனறினமேல விருபபமும பிறரதென்பதனால வெறுபபுமிலலாதவாகளாய, பிறாகுணஙகளைக குறறமாகவுந தமகுறறததைக குணமாகவும காட்டுநதனமை யிலலாதவாகளாய, எனனிடத்தில மகததான அனபுவைதது எனனையே பரமகதியாய நமபியிருககும பாகவதாகளும, பிறரை வருததபபடுதத உடனபடாதவாகளாய, சிவபூசையில விருபபமுளளவாகளாய, என சரிததிரஙகளைககேட்பதில பறறுளளவாகளாயிருபபவாகளும, கணவனுககொககு நடபபதே தமககு விரதம கணவனே தமககுயிாகணவனுககு அடிமைசெயவதே தமககுப பரமலாபமெனறு உறுதியாக நடபபவாகளும, பிறாசெலவமுதலியவறறைக கணடு பொறாமைபபடாதவாகளுமான ஸதிரீகளும எனனைததாங்குவாாகள் எவன தாயதநதையாககுப பணிவிடைசெயபவனும, குருவினமேல மெய்யான அனபுள்ளவனும, விருநதினாகளுககு நனமைசெயபவனும, பிராமணருககு உபகாரஞ செய்பவனுமாயிருபபானோ அவனும, புணணிய கதாசிரவணததில பொழுது செலுததுபவனும் யதிகளுககுப பணிவிடைசெயபவனும்த தனனாசிரமததுககுள்ள ஆசாரததில் நிலைபெறறவனுமிருப்பவனும எனனை யெப்போதுந் தாஙகுகிறாாகள புணணியதீாதத ஸ்நானததிலும ஸாதுககள சகவாசததிலும் எபபோதும விருப்பமுளளவாகளாய உலகததாாவிஷயததில கிருபைசெய்யும தனமையுள்ளவாகளாயிருபபவாகளும், பிறருக்குதவிசெய்வதே தொழிலாகக கொணடவாகளாய், பிறாபொருள தனக்கு வேணடுமெனகிற நோககிலலாதவாகளாய், பிறர்மனையவாதவாகளாயிருபபவாகளும எபபோது மெனனைத தரிககிறாாகள் திருத்துழாய்சசெடியை யடுததிருபபவாகளாய், எபபோதும எனனுமஙகளையே கதியாகக் கொணடவர்களாய், பசுமாடுகளை ரக்ஷிபபதில பற்றுள்ளவர்களாயிருப்பவாகளும எபபோதுமெனனை வகிபபாாகள. தானமவாஙகாதவாகளாய், பிறரனனமபுசிககத் திரியாதவாகளாய், இயன்றமட்டும அனனபானஙகளளிபபவாகளாயுள்ளவாகளும் எனனை வகிக்கின்றனர் ஓ அதிதி, நீ ஈசுவனே உயிரெனக்கருதி யிருபபவள், எலலாபபிராணிகளுக்கும் நலம்செய்யும நல்ல எணணமுள்ளவள் ஆதலால நான உனஉதரத்தில் ஜனிதது பகைவராலான சங்கடததை அழிபபேன என்று இவ்வணணமருளிசசெய்து

பலனுள்ளனவாகும் பரமாத்துமாவாய், குறைவற்றவராய், முடிவில்லாதவராய், புண்ணியகருமங்களுக்குப் பலனைகொடுப்பவராய், சகலதுன்பங்களையும் போக்குபவராயிருக்கும் எம்பெருமானை நினைத்தே ஸத்கருமங்களைப் பெரியோர் செய்துகொண்டிருக்கிறார்கள் தருமங்களெல்லாம் விஷ்ணுதான். கருமங்களும் அவற்றின் உத்தேச தேவதையும் விஷ்ணுவே. சகல செய்கைகளும் அவற்றின் கருவிகளும் விஷ்ணுவே அவரினும் புறம்பான பொருளொன்றுமில்லை

---

## கச - வது அத்தியாயம்.

---

## பாபபலன்கள்.

தருமராஜ பகீரதசம்வாதம் (தொடர்ச்சி).

பாபங்களின் பிரிவுகளையும், மொத்தமான நரகவேதனைகளையும் சொல்லுவேன் அந்த நரகங்களைக்கேட்கும்போதே பயமுண்டாமாதலால் அஞ்சாமல் தைரியத்துடன் இருக்கவேண்டும் பாபஞ்செய்தவர்கள் வேகும்படியாய் நடுங்கும்படியான பயனளிப்பனவாயுள்ள அந்த நரகங்களைக்கேளும் வெய்யிலிற்படுத்தல், பாறையிற்கிடத்தி அப்பாறைமிரம்ப மணலைச்சொரிதல், பெருமிருகங்களாலடிக்கப்படுதல், சிறுமிருகங்களாலடிப்புண்டல், பானையிற்போட்டு வேகுவிக்கப்படுதல், மூச்செறிதற்கிடமில்லாமற் செய்யப்படுதல், கயிற்றிற்பிணைத்து அலைப்புண்ணப்படுதல், நசுக்கப்படுதல், வாட்காடு, எச்சிலுண்ணல், பனியிற்படுத்தல், எவ்வழியும் போகக்கூடாமை, சவாககிணறு, வைதரணியென்னும் ரதத ஆறு, நாய்களாற்கௌவப்படுதல், மூத்திரங்குடித்தல், மலப்பள்ளம், காய்ச்சியசூலத்தால் குத்துதல், காய்ச்சியசிலையின்மேல் தள்ளுதல், முள்மரத்திலேற்றுதல், இரத்தக்கிணறு, உதிரமுணணல், தன்மாமிசத்தையேயுண்ணல், நீப்புகுதல், கல்மழை, ஆயுதமழை, நெருப்புமழை, பாலைக்காட்டி நீரைக்குடிப்பிக்கப்படுதல், சுடுநீர், மழுவுணணல், தலைகீழாக்குதல், வற்றலாக்கப்படுதல், பெருங்காற்றில் தள்ளுண்டல், சறகாணம், புழுவுண்ணல், காரநீர்குடிக்கத்திரிதல், கைவாளாலறுப்புண்டல், மலத்தைப்பூசல், மலமுண்ணல், இரேதஸ்ஸைக்குடித்தல், உடல்சந்திப்பெல்லாந் தீப்படுதல், தழற்படுக்கை, உலக்கையிடியுண்டல், செக்கிலரைப்படுதல், கலபையால் கீறப்படுதல், அறுக்கப்படுதல், கீழுமேலுமெறியப்படுதல், தடிகளாலடியுண்டல், யானைத்தந்தங்களாலிடியுண்டல், பாம்புகளால் கடியுண்டல், புகைகுடித்தல், கயிற்றினலிறுக்கப்படுதல், கழுவேறல், செவி வாய் மூக்குகளில் காரநீர் சொரியப்படுதல், காரநீர்குடித்தல், உப்பையுண்ணல், நரம்பறுப்புண்டல், நரம்புகளால் கட்டுண்டல், எலும்பறுப்புண்டல், இறைச்சியுண்ணல், பித்தமுண்ணல், கோழைதின்னல்,

மரநுனியிலிருந்து தள்ளப்படுதல, நீாசகுள் அமிழததபபடுதல, கலசுமத்தல, முளமேலபடுககை, ஏறுமபுகடியுணடல, தேளெறியுணடல, புலியாலவருந்தல, நரியால்வருநதல, எருமைக்கடாவினுல வருநதல, கெடுநாற்றம்நிறைநத உளையிலபடுக்கை, கததிகளினமேல படுககை, அதிக வெபபமுணணல, அதிக வெப்பமான எணணெயைக் குடிததல, அதிககாரமபுசித்தல், துவாநீா குடிததல, வெபபமான கறகளையுணணல, கொதிமணலில முழுகுதல, பலலுடைககபபடுதல, மழுவிற்படுககை, உடலமேல கொதிநீா தெறிக்கபபடுதல, உடலமேல் குளிாநீா தெறிக்கபபடுதல, கணவாய்முதலிய இடஙகளில ஊசிகளால குததுணடல, குறியிலும அணடததிலும் பளுவான இருமபு கட்டபபடுதல

ஓ பகீரதரே, இவைமுதலிய நரகததுனபஙகள கோடிகோடி கணககிலிருககினறன அவறறைச சொலலவேணடுமெனறால ஆயிரமவருஷமாயினும ஏனனாலமுடியாது ஓ மனனவனே, எந்தபாபியின எநதபாப மெததனமையானதோ அதையெலலாம சொலலுகிறேன கேளும பிரமஹததி, கட்குடி, பொனதிருட்டு, குருமனையேகல, இந்நானகும மேறகணட நாலவகைபபாபமுள்ளவாகளின கூட்டுறவும ஆக ஐநதுபாபமுள்ளவாகள மகாபாதகராவாாகள. போஜனபநதியில வேறுபாடுசெயகிறவன, அதிதிக குபயோகிககாதவிதமாய்ச சமையலசெய்விபபவன, பிராமணனைப புறிபபவன், பெரியோராசாரததை மாற்றுபவன, வேததததைவிற்பவன, இநத ஐவரும பிரமஹததிபாவமுளளவாகள தானஙகொடுபபேனெனறு பிராமணனை வரசசொலலி, பினபு அவாகளுககு இலலையெனறுசொனனவனும பிரமஹத்தியுளளவனென்கிறாாகள் தனககுத் தருமத்தை உணாததினகுருவைப பகைககிறவனும அலலது நிலகூஷியஞசெய்கிறவனும் பிரமஹததியுளளவனெனறு சொலலப்படுவான. தாகஙகொணடு தணணீாகுடிககபபோகிற பசுக்களுககுத தடைசெய்பவனும், ஸநானஞசெய்யவாவது போஜனஞசெய்யவாவது போகின்றபிராமணருககுத் தடைசெய்பவனும, சாஸ்திரஙகறகாமல சாஸதிரபபொருளினனதெனறு சொல்லுபவனும, தெரிநதவாசொலவதைககேளாமல அகஙகரிபபவனும், பிராயச்சித்தமாகிலும் மருநதாகிலும் சோதிடமாகிலும தருமததிாப்பாகிலும சாஸதிரமறியாமல சொலலுகிறவனும், அதிகாரததினுலாவது கல்வியினுலாவது பொருளினுலாவது பிராமணனையிகழபவனும, பிறனையிகழ்தலிலும் தனனைப்புகழ்வதிலும பொய்சொலலுவதிலும விருப்பமுள்ளவனும், பிறாநடுங்கும்படியான காரியஞசெய்பவனும, கோட்சொலபவனும, பிறா தன்னை மெச்சுவதற்காகக கபடவொழுககததிற் பற்றுள்ளவனும, என்றும் தானங்கிடைக்குமாவெனறு திரிகினறவனும், உயிர்க்கொலை செய்யத்துணிகிறவனும், தருமவிரோதமான காரியததுககு உடநதையானவனும, இத்தன்மைய் பலவிதமான பாபங்கள செய்கிறவாகளும பிரமஹததிககுச் சரியான பாபமுள்ளவர்கள் அபபால, கட்குடிககுச்சரியாயுள்ள பாபஙகளைச் சுருக்கமாய்ச்சொல்லுவேன, கூட்டததுச்சோறுணணலும், விலைமாதர்சோறுண்ணலும், பதிதனுடைய அனனத்தையுணணலும கட்குடிக்குசசரியாகும். ஒவ

பாசனத்தை விட்டுவிடுதலும், கோவில் சமபளக்காரன்சோறுண்ணலும், கட்குடிப்பவளைப் புணர்தலும், கட்குடிக்குச்சரி. சூத்திரனாலழைக்கப்பட்டுப் போஜனஞ்செய்யும் பிராமணன் சகலகருமங்களுக்கும் புறம்பாகிய கட்குடியனென்றறியத்தக்கவன். சூத்திரனிடத்தில் அனுமதிபெற்றுக்கொண்டு போஜனஞ்செய்பவனும் மேற்சொன்னபடியே. இப்படியாக கட்குடிக்குச்சரியான பாபங்கள் பலவுண்டு. இனி பொன்திருட்டுக்குச்சரியான பாபத்தைச் சுருக்கமாகச் சொல்லுவேன். கிழங்குவகைகள், வேர்வகைகள், பழவகைகள், கஸ்தூரி, பட்டுவஸ்திரங்கள், இரத்தினங்கள் இவைகளைத்திருடுதல் பொன்திருட்டுக்குச்சரியானது. பாக்கு, பால், சந்தனம், கர்ப்பூரம், இவைகளைத் திருடுதலும்படியே. செம்பு, இரும்பு, தாமிரம், வெண்கலம், நெய், தேன், வாசனைப்பண்டங்கள், இவைகளைத்திருடுதலும்படியே. வெல்லம், எண்ணெய்முதலியனவும், தானியங்களும் ரத்தினாக்ஷமும் திருடுதலுமத்தன்மையதே. இனி குருபத்தினி சங்கமத்துக்குச்சரியான பாவங்களைச் சுருக்கமாகச் சொல்லுவேன். உடன்பிறந்தவள், மருமகள், புத்ரவதி, இப்படிப்பட்ட ஸ்திரீகளைப்புணர்ந்தால் குருபத்தினிசங்கமதோஷமுண்டு. சகோதரன் மனைவி, சிநேகிதன்மனைவி, விதவை இவர்களைப்புணர்தலும்படியே. தகாத காலத்திற் புணர்ச்சிசெய்வதும், மகளைக் காமுறுதலும், ஜாதிகெட்டஸ்திரீ பிறன்மனையாள் இவர்களைப்புணர்தலும், வேதத்தில் விசுவாசமில்லாமையும்படியே. சிராத்தத்தைவிட்டவனும், தருமகாரியத்தைக்கெடுப்பவனும், யதியைப்பழிக்கத்துணிபவனும், குருபத்தினியைப் புணர்ந்த பாவமுள்ளவனாவான். ஓ அரசனே, இவ்வாறான தீவினைகள் மகாபாதகங்களெனப்படும். இப்படிப்பட்டபாபிகளுக்குள் எவனோடாகிலும் சேர்க்கையுள்ளவனும் மகாபாதகமுள்ளவனென்றே எண்ணப்படுவான். மகான்களான ரிஷிகள் சாஸ்திரங்களில் பிராயசித்தமுதலியன விதித்திருப்பதால் பாபங்களுக்கெல்லாமொருவாறு பரிகாரம் காணப்பட்டிருக்கிறது. அவ்வாறு பிராயசித்தம் விதிக்கப்பெறாத பாபங்களைக்கேளும் அரசனே. அவையெல்லாப்பாபங்களுந்திரண்டொன்றாயிருப்பனபோன்றவைகளாய் மிகுந்தநரகம் விளைவிக்கத்தக்கவைகளாயிருக்கின்றன. சூத்திரன்பூஜித்த லிங்கத்தையாகிலும் விஷ்ணுவையாகிலும் தொழுபவனுக்கு பதினாயிரம் பிராயசித்தங்கள்செய்யினும் அப்பாபந்தீர்வதில்லை. சூத்திரனாற் பரிசிக்கப்பட்ட சிவலிங்கத்தையாகிலும், விஷ்ணுவையாகிலும் தொழுகிறவன் சந்திரசூரியர்கள் உள்ளளவும் சகலவித நரகங்களையு மனுபவித்தற்குரியவன். ஓ ராஜனே, ஒருவன் வேதமும் சகல சாஸ்திரங்களின் மெய்ப்பொருளும் நன்றாயறிந்தவனாகிலும் வேதவிரோதி பூஜித்த சிவலிங்கத்தைத் தொழுதால் தானும் வேதவிரோதியேயாவன். இடையன்பூஜித்த லிங்கத்தைத்தொழுதால் நரகமடைகிறான். ஸ்திரீகள் பூஜித்துவரும் சிவலிங்கத்தையாகிலும் விஷ்ணுவையாகிலும் தொழுதவன் கோடிகுலத்துடன் ஒரு கற்பகாலமளவாக ரௌரவநரகத்திலிருப்பான். மந்திரம்வல்ல பிராமணர்களால் விதிப்படி பிரதிஷ்டைசெய்யப்பெற்ற லிங்கத்தை அதன்பிறகு ஸ்திரீயும் சூத்திரனும் தீண்டத்தகாது. ஸ்திரீகள், உபந

யனமாகாதவாகள, சூத்திராகள ஆகிய இவாகள் விஷ்ணுபிம்பத்தையாகிலும சிவபிமபததையாகிலும தீணடற்குரியவாகளலலா. ஓ ராஜசிரேஷடா, தமமா சிரமததுககுரிய வொழுககமறறவாகள பூஜிதத விஷ்ணுவையாகிலும சிவனை யாகிலும கனவிலும பணியவொணணுது. சூததிரன பிரதிஷடைசெய்த மேறசொலலியமூாததிகளைத தொழுகிறவன இமமையிலேயே பெருநதன பஙகளடையககாணலாம் மறுமையில கேட்பானென இடையனபூஜித்த மூர்த்திகளைத் தொழுதால அவன ஒருநாளும உருபபடான இன்னும பல பேசுவதாலாயபயன யாது? சூததிரனும, உபநயனமிலலாதவனும, ஸதிரீ யும, பதிதனும விஷ்ணுவையாகிலும சிவனையாகிலும தொடுவாாகளாகில நரகததையடைவாாகள பிரமஹததிமுதலிய பாபஙகள ஒருகாலம தீரினுந தீரும் பிராமணனைப பகைததவனுககு ஒருநாளும அநதபாபந தீாவதிலலை நமபினவனைக கெடுததவாகளும, நனறிகொனறவாகளும, சூததிரஸதிரீயைப புணாநதவாகளும எவவிததததிலும அநதபபாபஙகளைத தீாததுககொள்ளமாட் டாாகள சூததிரனசோறறுல உடலவளாததவாகளுககும, வேததடைப பழிப பவாகளுககும, குருவைப பழிபபவாகளுககும தமதுபாபந தீாக்குமவகை யொனறுமிலலை சிவனையாவது விஷணுவையாவது, புணணியகதைகளை யாவது பழிபபவாகளுககு இமமையிலும மறுமையிலும பாபநதீருமவகை யிலலை மேறசொலலபபட்டவாகளுககு பாபம அதிகமாய இருககினறமை யால இவாகள பாதகாதிகள இவாகளுககுப் பாபமொழிவதிலலை இவாகள பலகோடி கறபஙகளிலும நரகவேதனையே பெறுவாாகள பிராயசசிததததால தீரமாட்டாத இநதபாபஙகளை யுமககுச்சொனனேன இனி அவறறுல வரும நரகஙகளைச சொலலககேளும அரசனே, இபபடிபபடட பாபிகள் பதிஞயிரஙகுலததுடனகூடி நூறுயிரமகோடி கறபகாலஙகளில முனசொல சொனனநரகஙகளில அவிகிறாாகள இபபடிபபட்ட நரகவேதனைபபட்ட பிறகு மூனறுகறபமவரையில செடிகளாகபபிறநது, பிறகு புழுககளாவாா கள் அநதபபுழுககளுமெவவகைததானவையெனறல மலததிறபிறநதவை, மலததையே ஆகாரமாககொணடவை பினபொருகறபம பாமபாயிருந்து மறுபடியும ஆயிரமயுகம புழுககளாயிருநது அதனமேல மிலேச்சசாதியிற பிறபபார்கள். பினபு அநதபபாபததொடாசசியில கோளகாகள்* ஆவாா கள். அந்தஜனமததுககுபபின குணடாகள† ஆகபபிறநது அதனபின்பு அதிகவறியவரான பிராமணராயப் பிறபபாாகள, அபபடிபபிறநத ஒவ் வொருவனும எபபோதும வறுமையிலவருநதி தானமவாஙகுதலே கதியாகக கொணடிருந்து அந்ததானஙகளை வாங்கினமையால திரளான பாபங்களைத் தேடி அந்தபாபததால நரகமடைவான. ஓ மகாத்துமாவே, உமககுசசொ ல்லியிருககும நரகவேதனைகளனைததிலும் மேற்சொலலிய மகாபாபிகள் ஒவ் வொருகற்பகாலம வாசம்செய்தறகுரியவாகள் அபபடிபபட்ட நரகங்களி

* கணவனிறந்தபின் விபசாரததாற் பிறபபவாகள்.
† கணவனிருககுமபோது விபசாரததால பிறபபவாகள்.

விருநதபிறகு பூமியின்மேல எழுதரம கழுதைபபிறபபெடுத்து, பிறகு நாயும் மலபபனறியுமாக பத்துஜனமமெடுதது, பினபு நூறுவருஷம மலபபுழுகக ளாய, பினபு வலிகளாய் நூறுணடிருநது, பனனிரணடு பாம்புபிறபபெடுதது பினபு மான்முதலிய விலஙகுகளாய பதினறு பிறப்பெடுதது, நூறுவருஷம் மரஙகளாகி, அதனமேல மாடாகி, பினபு எழுதரம சணடாளாகளாகபபிற நது, பினபு பதினறுபிறபபுககளில முறையே தாழநதஜாதிகளிற சிறிதுசிறி தாக உயாநது முடிவிற்சூதஜாதியாகி, பினபு வைசியனும க்ஷததிரியனு மாய இரணடுபிறபபெடுதது, அநத க்ஷததிரியபபிறபபிலும் வலியபகை வாகளால எபபோதும பாதிககபபட்டவனுகி, மிகுநத பிரயாசததால பிழை ததுககொணடிருந்து, அநதபபிறபபுககுபபிறகு வறியபிராமணனுப்பபிறந்து, பலபிணிகளால வருததபபட்டு, வயிறுவளாகக வழியறறு, பலவிதமான கொ டியதானஙகளை வாஙகி அநதபபாபததால நரகம்போய்சசேருவான. பிறா குணஙகளைககணடு பொறுமைபபட்டுக குறறமேற்றும் பாபிகள் மூன்றுகற்ப காலம ரௌரவநரகததிலிருநது ;பினபு கோடிஜன்மம் சணடாளாகளாவாா கள தேவாலயததுககாகிலும யாகததுக்காகிலும பிராமணனுக்காகிலும ஒருவன பொருளகொடுககபபார்ககுஞசமயத்தில அவனைககொடுககவிடாமல தடைசொலபவன நூறுபிறபபு நாயாகபபிறந்து, பினபு பலமுறையும சண டாளபபிறவியாகுவான அதனபினபு ஒருகற்பம் மலபபுழுவாகி, அதன மேல மூனறுபிறபபுப புலியாகி, அதனமேல இருபத்தொருயுகம் நரகவாசம செய்வான். பிறரைபபழிபபவரும, திட்டுபவரும, தானத்துககுததடைசெய் பவரும் அடையுஙகதியைககேளும அவாகளை யமதூதாகள்பிடிதது மழு வுணடைகளை அவாவாயிலடைதது, கணணிலறைய ஊசிகளைககுததி, தலை கீழுங காலமேலுமாகநிறுத்தி அடிபபாாகள் இபபடி நூறுணடுவரையில அவாகள் அடிபட்டுப பினபு கழுததில கல கட்டபபட்டு, உதிரமடுவில நூறு ணடிருககுமபடி தளளப்பபடுவாாகள் பினபு நூறுவருஷம்வரையில சகல நரகஙகளிலும துன்பபபடடு, அதனபிறகு அநத பாபககுறைவினுல் இறை சசியுணணும பிறப்பெடுபபாாகள். பிறாபொருளைத திருடுபவிர்கள் உரலிற போடபபட்டு, உலக்கைகளாலே குததபபட்டு, பிறகு மூன்றுவருஷம் வெபப மானபாறைகளைச் சுமந்துகொண்டிருநது பின்பு ஏழுவருஷம் காலசூததிரமுத லியவைகளால் பிடிககபபட்டு தமது கருமங்களைபபற்றித் துயரபபட்டுக்கொ ணடு, நரகத்தீக்களில ஒவ்வொனறிலும் வரிசையாக வேகுவாாகள் பிறர் பொருளைத்திருடுவதற்கு வழிகாட்டியவாகள் ஆயிரம யுகமவரையில பழுக்கக் காய்சசிய இருமபுருணடைகளைத் தினபவர்களாகி, கூாமையான குறடுகளால பறகள் பிடுங்கபபெறுவாாகள் பினனும் ஒருகற்பமுடியுமளவும் மூச்சுவிட லுங்கூடாத நெருக்கமான இடததில அடைக்கப்படடு கிலேசபபட்டுக்கொ ணடிருப்பார்கள். ஓ அரசனே, , பிறர் பெண்டிரைக்கருதி புணரும்பாபி களை நரகலோகத்தில் படுதஅம்பாடுகளைச் சொலலுகிறேன்கேளும். செம பினுற் பெண்வடிவமாகசசெய்த பதுமைகளை நன்றாக நெருப்பிற்காய்ச்சி, அவைகளைத்தழுவி புணரும்படி அந்தபாபிகளைக் கட்டாயபபடுத்துவார்கள்

* வேண்டாமென்றேடினும விடமாட்டாாகள் இபபடிப் பலகாலம வருத்தப்படுத்தியபின ஒவவொன்ருக எலலாநரகஙகளிலுந் தள்ளுவாாகள். ஓ அரசனே, கணவனேவிட்டு மறறெருவனேபபுணரும ஸதிரீகளபடும நரகவேதனேகளேச சொல்லுகிறேனகேளும. மிகக சூடான மழுவினுலாகிய புருஷபிமபங்களினமேல அகத ஸதிரீகளே வலியககிடத்தி, இறுகப்பிடித்து, மிகுந்த வலுவுடன ஒரு கறபமவரையில புணரச்செயவாாகள். பினபு அவாகளால்விடப்பட்டு மிகுதியான நெருபபிடடுககாயசசபபட்ட எஃகுக்கமபத்தைத் தழுவிக்கொணடு ஆயிரவருஷகால மிருபபாாகள பினபு காரநீரிலமுழுகி அதையே குடித்துககொணடு பலகாலங்கழிததுப பினனா மறறுமுள்ள நரகஙகளெலலாவற்றிலும ஒவவொன்ருகப புகுநது வருநதுவாாகள பிராமண ஸ்திரியையும் க்ஷத்திரிய ஸதிரியையும பசுவையுஙகொல்லுபவன் மேற்சொன்ன நரகஙகளில ஐநதுகறபமவரையில சகலமான துன்பஙகளேயும நுகாவான. பெரியோாகளே ஒருவனபழித்தால அதைக கேட்டு மனமகிழநதுகேட்டுக்கொண்டிருபபவன காதுகளில நனருய்க்காசசிய பல எஃகாணிகளேச சொருகுவாாகள பினபநத ஆணிகளாறகுத்திய சநதுகளில நெருபபுபோற காய்சசிய எணணெய்யை மிகுதியாகபபெயது, பினபு குமபீபாகமெனனு நரகத்துககுப போகவிடுவாாகள. தெயவமிலலேயெனறும வேதசாஸதிரங்கள் பொய்யெனறும சொலலுபவாகள ஆயிரஙகோடிவருஷம நரகத்தையனுபவித்து பினபொரு கற்பமளவாக மலத்தைத்தினறுகொணடிருந்து பின பொருயுகம ரௌரவத்திலிருந்து பினபு வெபபமான மணலே யுணணபபெறுவாாகள். பிராமணாகளேச சினநதுபாாககும சீழானவா கணகளநிறைய காய்சசிய ஆயிரமூசிகள் பொத்தபபடும. பினபநதக்கணகளில காரநீா மிகுதியாகபபெய்யபபடும. பினனுமநதபபாபிகள் கூரியவாட்களாலும் அறுபபுணணபபடுவாாகள் நமபிகககைககுக கேடுசெயதவாகளும, வரமபழித்தவாகளும், தனக்கனனமிருககவும பிறாசோறறுககு விருமபித்திரிகிறவாகளும, நாடோறும நாய்மாமிசமதினபவாகளாய,நாய்களாலுணணபபடுகினறவாகளாய்,சகல நரகஙகளிலும் தனித்தனி ஒவவொருயுகமிருந்து வருநதுவாாகள் தானம வாங்குவதே தொழிலாககொணடவாகளும, ஜோதிடத்தால பிழைபபவாகளும, சம்பளத்துககுக கோயில பூஜைசெய்பவரசோறறைத்தினபவர்களும ஒருகறபமளவும சகலநரகஙகளிலும துனபபபடடுக்கொணடு, பினபு பூமியில் வந்து சணடாளாகளாய் நூறுபிறபபெடுத்து வறியவாகளும பிணியாளிகளுமாய் பலவாறு துன்பப்படுவாாகள் எபபோதும பொயசொலலுபவாகளும,

---

* இதன்கருத்தையே

"வம்புலாங் கூந்தல் மனைவியைத் துறந்து பிறாபொருள் தாரமெனறிவற்றை நம்பினு ரிறந்தால் நமன்றமா பற்றி யெறறி வைத் தெரியெழுகின்ற செம்பினு லியனற பாவையைப பாவீ தழுவென மொழிவதற கஞ்சி நமபனே வந்துன் திருவடி யடைந்தேனை நைமிசா ரணணியத்து ளெந்தாய்"

என்கிற பாசுரத்தால் விளக்கியருளினா திருமங்கையாழ்வாரும்.

கொடுஞ்சொல்லுரைப்பவர்களும், கொடியதுறடுகளால் பற்கள் பிடுங்குஞ் காலசூத்திரத்திறுல் பிணிப்புண்டு, பின்பு சூடான எண்ணெய்யால் நனை பட்டு, பின்பு காரநீரில் குளித்து, மலந்தின்று, மூத்திரங்குடித்து, பலகாலம் வாழிருந்து பின்பு பூமியில் மிலேச்சர்களாகப்பிறப்பார்கள் பிறர் நடுங்கும்படியான காரியஞ்செய்பவர்கள் வைதரணியாற்றை யடைவார்கள் பஞ்சயக் ஞங்களைவிட்டவர்கள் பலவிதமான இன்பமற்ற உணவுகொள்ளுவார்கள். ஓ பாசனஞ்செய்யாவிட்டவர்கள் ரௌரவநரகத்தை யடைவார்கள். சந்தியா தனமுதலியவற்றை விட்டவர்கள் புழுவுண்ணுவார்கள் ஓ அரசனே, மே சொல்லிய நால்வகைப்பாபிகளும் மேற்சொல்லியபடி ஐந்தியுகமவரை து னப்படுவார்கள் பின்பு பூமியில்பிறந்து பிறரிடத்தில் தாழ்மையான ஊ யஞ்செய்து காலங்கழிப்பார்கள் ஓ பூபதியே, பிராமணர்களின் கிராமத் தில்வரிமுதலியவை மிகுதியாக வாங்குபவன சகலநரகங்களிலும் சந்திர சூ திரங்களுள்ளளவும் வேககாடு அடைவான் பிராமணாகிராமத்துக்கு மிகு யாக வரிவிதிப்பவன் ஆயிரங்குலத்துடன கோடிகற்பங்களளவாகச் சகலந ங்களையுமனுபவிப்பான. பிராமணாகிராமத்தில் அதிகவரிவிதிக்கும்படி அனு திசெய்பவன பத்துகோடி பிரமஹத்திசெய்தவனுவான அதிதிகளையுபசரி யாமல் உண்கின்றமனிதர்கள் கொடுமையான காலசூத்திரநரகத்தில் நாயி மலத்தைத்தின்றுகொண்டு நாலுயுகமளவும வாசமசெய்வார்கள், யோனி யல்லாதவிடத்திலும், தான் புணரத்தகாத ஸ்திரீயோனியிலும், பசுக்களி யோனியிலும், ரேதஸ்ஸைவிட்ட கொடியபாபியானவன் நரகலோகத்தி சென்று ரேதஸ்ஸையே உண்ணப்பெறுவான. பின்னும் எழுபது தேவவ ஷங்களளவு சுவர்ணகிணற்றிலிருந்து துன்பப்பட்டு, அதன்மேல் பூலோக திலே யாவராலும் பழிக்கப்பட்டவனாய், ரேதஸ்ஸைக்குடிக்கும் மனிதனாக பிறப்பான். உபவாசமிருக்கவேண்டியநாளில் பலதுலக்குமவன நாலுயு மளவும புலிகளாலுண்ணப்படுமிடமாகிய கொடுநரகத்தையடைந்திருப்பான் ஒருவனுக்குரித்தாகும்படியாகத் தன்னுலாவது மற்றொருவனுலாவது கொ க்கப்பட்ட நிலத்தை வலியக் கைப்பற்றிக்கொள்ளுமவன் கோடிகுலத்துடன அழுகலமண்ணைத்தின்றுகொண்டு இந்த நரகங்களிலெல்லாம் தனித்தனி கோ டிகற்பகாலமிருந்து பின்பு அறுபதினுயிரமவருஷமளவாக மலந்தின்னும் ஜ துக்களின ஜன்மமெடுப்பான. தன நிலம அதிக அளவுள்ளதாகப் பொய் சொல்லி பிறனிலத்தைக் கவருபவன் கோடிகுலத்துடன வெப்பமானசேற் றில் முழுகிக்கிடந்து அங்கிருந்து மலமடுவில்முழுகி ஆயிரயுகங்கிடப்பான் பிறகு மற்றுமுள்ள நரகங்களிலெல்லாவற்றிலும் பதினுலு இந்திரபட்டமசெ ல்லுமளவும் துன்பப்பட்டுக்கொண்டிருந்து பின்பு பூலோகத்தில நூறுபிறப் பளவாகக் குஷ்டரோயும் புண்களுமுண்டாகி வருத்தப்படுவான். தன குல முதலியவற்றுக்குரிய நற்கருமங்களைத் துறந்தவன பாஷண்டியென்னப்படு வான். அவன் கூட்டுறவுசெய்பவனு மவ்வாறே அவ்விரண்டு மகாபாபி களும் ஆயிரத்து நூறுகோடிகற்பமளவாக ஆயிரவமிசத்துடன நரகத்தில் வா சம்பண்ணுவார்கள். சம்பளத்துக்காக வேதங்கற்பிப்பவரும், சம்பளத்துக்

காக வேதங்கற்பவரும், ஒரு கற்பமவரையில நரகத்தில் துன்பமனுபவித்து அப்பால் மிலேச்சஜனமமெடுப்பார்கள் ஸ்திரீகளின் பக்கத்திலும் சூத்திரா பக்கத்திலும வேதமோதுகின்றவன் ஆயிரங்கோடி கற்பமளவும வரிசையாய் எல்லாநரகங்களையுமடைவான கோவிற்பொருளையாகிலும குருவின்பொருளையாகிலும் அபகரிப்பவர் பதினாயிரம பிரமஹத்திபாபமடைவார். நாதனற்ற ஏழையின பொருளைப்பறிப்பவரும், அப்படிப்பட்ட ஏழையை பகைக்கின்றவரும, தலைகீழாங் காலமேலுமாக இரண்டுகம்பங்களில ஆணிகளால தைக்கப்பட்டு, பிரமாவின பகலளவாகப் புகையையே குடித்துக்கொண்டிருப்பார்கள தேவபூஜைக்குத்தவும்படி வைக்கப்பட்டிருக்கும தோட்டத்திலுள்ள புஷ்பங்களைக்கொண்டு போகும்வர்கள நரகத்திற்சென்று கொடியதீயில புகப்பெறுவர் தண்ணீரிலாவது கோயிலிலாவது தனனுடலின மலத்தை விடுபவன கருவழித்தவளவு கொடும்பாவத்தையடைவான பல, எலும்பு, மயிர், உகிர், எச்சில், இவைகளை கோயில்குளங்களில போடுபவன ஈட்டிகளால குத்துண்டு கூக்குரலிட்டுக்கொண்டு அதிகவெப்பமான எண்ணெய்யைக்குடிக்கப்பெற்று பின்பு உலையிலும சமைக்கப்படுவான உமியாகிலும, சுள்ளியாகிலும பிராமணனுடைமையை அபகரிப்பவன சந்திரநக்ஷத்திரங்களுள்ளளவும கொடு நரகவேதனைகளைப்படுவான பிராமணனபொருளைக் கவருபவனுக்கு இம்மையில செல்வமழியும மறுமையில நரகங்கிடைக்கும் ஆதலால அரசனே, பிராமணன பொருளைக்கவாதல இருமையிலுங் கொடியதாகும பொய்சாக்ஷியம்சொல்பவன பதினைந்து இந்திரகாலமளவாக சகல நரகவேதனைகளையுமடைவான பின்னும்மப்படிப்பட்ட பாபியிங்கிருக்கையிலும பிள்ளை பேரன்முதலிய சந்ததிகளெல்லாமழிந்து அதனால் துன்பப்படுவான் இறந்தபினபோ நரகமடைதல சித்தாந்தான அதிககாமமுள்ளவர்கள்வாயிலும, பொய்யாக வந்தனைசொல்பவர்வாயிலும், பாம்புதலை பெரிய அட்டைகள நிரப்பப்படும அவர்களிப்படி அறுபதுவருஷமிருந்து பின்பு காரநீரிலகுளித்து பினபு நாயிறைச்சியைத்தின்றுகொண்டு காரசேற்றில்புகுவார்கள. அதற்குப்பிறகு நீரில்லாக்காட்டிலவிழும்படி யானைகளாலதூக்கியெறியப்படுவார்கள பினனர் பூலோகத்தில முடவர்களாய்ப்பிறப்பார்கள். ஓ நிருபனே, தனமனையாளை ருதுகாலத்*தில புணர்க்கூடுமாயிருந்தும புணராமலவிட்டவன் ரௌரவநரகத்தையும பிரமஹத்திபாபத்தையும அடைவான். ஒருவன் கெட்டநடைநடக்கும்போது அதைத தடுக்கவல்லவனாயிருந்தும், அதில மனஞ்செலுத்தாதவனாயிருந்துவிட்டவன அந்த கெட்டநடைநடந்தவ

* "ஸ்திரீகளுக்கு ரஜஸ்ஸு உண்டான நாள்தொடங்கிப பதினாறுதினங்கள் ருதுகாலமாம்" என்று மாதவீயசகிதமான பராசரஸ்மிருதியும "மாதவிடாயான்றுமுதல நாலுநாள் பெரியோர்களாலே நிந்திக்கப்பட்டிருக்கின்றது மேற்சொன்ன நாலுநாளுடன் ஏகாதசி திரயோதசி இவ்விரண்டையும் நீக்கி மற்றப் பத்துதினத்தில சேர்வதே உயர்ந்ததாகச சொல்லுகிறார்கள்" என்று மனுஸ்மிருதியும் கூறுகின்றன.

னுக்குள்ள பாபத்தில் பாதிபெறுவான். அவனந்த பாபஞ்செய்தா னிவனிந்த பாபஞ்செய்தானென்பதாக வீணாகப் புறங்கூறிப்பேசுபவன் தான் பேசியபடிக்கு ஒருவன் பாபஞ்செய்திருந்தால் அவனோடு சரியாகப் பாபியாவான். தான்பேசியது பொய்யானால் அந்தபாபத்துக் கிரண்டத்தனைபாபஞ் செய்தவனாவான் பாபமில்லாதவன்மேல் பொய்ப்பாபங்களையேற்றித் தூறுபவன் சந்திரசூரியர்களுள்ளளவும் சகல நரகங்களிலும் துன்புறுவான் பாபஞ் செய்தவர்களின்பாபத்தை வெளிப்படையாகப்பேசித் தூறுபவன் அப்பாபிகளோடொப்பாவான் ஆனால் அந்தப் பாபிகளுக்குமாத்திரம் அவன்பேசியதினால் பாதிப்பாபம் தொலைந்துவிடும் கன்னிகையை (ருதுவாகாதபெண்ணை) புணருபவன் நாய்களினால் எப்போதும் கடித்துண்ணப்பட்டு புகைகுடித்துக் கொண்டிருந்து பின்பு வரிசையாய் எல்லாநரகங்களிலும் வசிப்பான் ஒருவிரதத்தைத்தொடங்கி அதைமுடிக்காமல் விட்டுவிட்டவன் வாட்காட்டில் புரட்டப்பட்டு பின்பு பூலோகத்தில் அங்கப்பழுதுள்ளவனாகப் பிறப்பான். பிறர் தொடங்கிய விரதங்களைமுடியாவண்ணங் கெடுத்தவன் இருபத்தொருகுலத்துடன் கோழையைத்தின்னப்பெறுவான் நீதியிலும் தண்டனையிலும் ஓரஞ் செய்பவனுக்குப் பலநூறு பிராயச்சித்தஞ்செய்யினும் பாபந் தீரவில்லை. உண்ணலாகாத பண்டங்களையுண்டவன் பதினாயிரமவருஷம் பித்தங்குடித்துக் கொண்டிருக்கும்படி தண்டனையடைந்து, பின்பு சண்டாளனாகப்பிறந்து, எப்போதும் மாட்டிறைச்சியைத்தின்று பிழைத்திருப்பான் பிராமணனை வாயினால் அவமதிப்புச்சொல்லியவன் பிரமஹத்திபாபமடைவான், எல்லாநரகங்களையுமனுபவித்துப் பத்து சண்டாளப்பிறப்பெடுப்பான் பிராமணருக்கு தானங்கொடுக்குஞ்சமயத்தில் தடைசெய்பவன் நூறுகோடி பிரமஹத்தி பாபமுள்ளவனாவான் ஒருவன் மற்றொருவன்பொருளை அபகரித்துத் தான தருமஞ் செய்தால் அந்தபுண்ணியம் அந்தப்பொருளுடையவனுக்குச்சேரும். அந்த தானஞ்செய்தவனே நரகத்துக்குரியவனாவான் ஒருவனுடைமையை மற்றொருவன் தாவழக்கிலவென்று அதைத் தருமவிஷயத்தில் விநியோகிக்கினும் முன் போலவே பொருளுடையவனுக்குப் புண்ணியமும் தருமஞ்செய்தவனுக்கு நரகமுமுண்டாகும். ஓ அரசனே, ஒருவனுக்கொன்றுகொடுக்கிறதாக உறுதி சொல்லி அப்படி கொடுக்காமல் தப்பிப்போனவனை எச்சிலைத்தின்னும்படி யமகிங்கரர் தண்டிப்பார்கள். யதிகளைப்பழிக்குந்தன்மையுள்ளவனைக் கறகாணத்திலாடுவார்கள். தோப்பழிப்பவர்கள் இருபத்தொருயுகம் நாயூனைத் தின்றுகொண்டிருந்து, பின்பு மற்றெல்லாநரகங்களையு முறையே அனுபவிப்பார்கள். கோயிலையிடிப்பவர்களும், குளத்தைத்தூர்ப்பவர்களும், நந்தவனத்தையழிப்பவர்களும், கோடிகோடிகுலங்களுடன் சகலமானநரகங்களிலும் தனித்தனி அறுபதினாயிரங்கோடி கற்பகாலமளவாக வேதனைப்படுவார்கள். பின்பு கோடிகற்பகாலம் மலத்திலபுழுக்கும் புழுக்களாகப்பிறந்து, பின்பு இருபத்தொருகற்பம் மலமுண்ணும் ஜந்துக்களாகப்பிறந்து, அப்பால் இருபத்தொருயுகம் புழு உண்ணுஞ் ஜந்துக்களாகவிருந்து, அதன்மேல் கோடி ஜன்மம் சண்டாளராகவும் பிறப்பார்கள். ஊரைப்பாழாக்கும் கொடியவ

னுடைய பாபததை இவ்வளவெனறுசொலல பலநூறுகோடி ஜனமங்களெ
டுததாலும போதாது. கோயிலைச கொளுததுகிறவரும, ஊரைககொளுதது
கிறவரும, பிரமகறபமளவாக நரகததையடைநதிருபபாாகள எநதபாபமா
கிலும ஒருவனசெய்யுமபடி அனுமதிகொடுபபவன அந்தபாபததில பாதியும
அததகேறற நரகததையுமடைவான குணடனைகசசோறுணடவனும, கோ
ளகனைகசசோறுணடவனும, ஊாககு வேளவிசெய்விபபவனும, தகாதவனு
ககு வேளவிசெயவிபபவனும, மகாபாபிகளெனனபபடுவாாகள ஊரழைப
பவன, கோயிலதொழிலாளி, ஊாசசேரிடன, ஊாபபுரோகிதன மகாபாத
கமசெய்கிறவன ஆகிய ஐவரும பிராமணசணடாளரெனனபபடுவாாகள் இவ
ாகளுககு இருபததொருயுகமவரையில எலலாநரகவேதனைகளுமுணடாகும.
பினபு பூலோகததில எழுஜனமம சணடாளபபிறபபுணடாகும. எசசிலுண
பவாகளும, சிநேகிதனுககு துரோகமசெயபவாகளும, சநதிரநகஷததிரஙக
ளுளளவும எலலாநரகஙகளிலும துனபுறததககவாகள பஞசயககியம செய
யாதவாகள பாஷணடாகள எனனபபடுவாாகள அவாகளுககுப பல நரக
வேதனைகளுணடு இவவாறுகப பல மகாபாதகஙகளும, உபபாதகஙகளும,
அவறறுலாகும நரகவேதனைமுதலியனவும சொலலபபட்டன. அவைலவற
றினகணககிவ்வளவெனறு முடிவாகசசொலலதரிதாகும. பாபஙகளையும அவ
றறுலவரும நரகமுதலியதுாககதிகளையும, புணணியஙகளையும, அவறறுலா
கும நறகதிகளையும, உளளபடி கணககிட்டுசசொலல எமபெருமானொருவனை
யன்றி மற்றொருவன வலலவனனறு இநதபாபஙகளுக்கெலலாந தருமசாஸ
திரத்திற்சொலலிய முறைபபடிககுப பிராயசசிததஙகளைசசெயதால திரண
டபாபஙகளுமழியும. அபபடி பிராயசசிததஙகளைசசெயவதும ஸ்ரீபதி
ஸந்நிதானததிலே முககியமானது அவ்விடததிலசெயதால எறககுறைய
இருநதாலும தோஷமவராமல பலனும் குறைவினறிககிடைககும கஙகை
யும், திருததுழாயும, ஸாதுசகவாசமும, ஹரிநாமகீாததனமும, தூஷிககாமை
யும, கொலலாமையும, எலலாபபாபஙகளையும போககுவன. ஸ்ரீஹரிககு அா
பபிதமாக நறகருமஙகளைசசெயதால பலனுணடு. அவருககாபபிதஞசெயயா
விட்டால செயதகருமஙகளெலலாம சாமபலில ஓமஞசெய்ததுபோல பயன
ற்றனவாகும். நிததியஞசெய்வனவும, ஒவ்வொரு காலதேசஙகளிறசெய்வன
வும், இமமைமறுமையினபஙகளை விருமபிசசெய்வனவும, மோக்ஷோபாயமாய்
இருபபனவுமாகிய சகல கருமஙகளும, எமபெருமானுககாபபிதமாகசசெய்
தாலதான நலலபலனைததரும ஓ மகீபாலனே, மனிதாகளுககு விஷ்ணு
பக்தியிருநதால அது சகலபாபஙகளையுமழிககும. அந்த பகதியுடையவாகள
செய்த கிரியைகள்யாவும் அநநதமான பலனுளளனவாகும். பாபககாடடுக்
குத் தீபோனற அந்தபகதி தாமதம ராஜஸம ஸாததுவீகம என மூவகையாய்
உட்பிரிவுகளால் பததுவகையாயிருககும, அவறறைச்சொலலுகிறேன கேளும
அரசனே. எவனுகிலுமொருவன கேடுறவேணடுமெனறுகருதி வேறொரு
வன் பகவானைபபூஜித்தால் அவன சுவாமிவிஷயத்தில் செய்யும பகதியானது
தாமதத்தில் அதமமானது. விபசாரியானவள் கொண்டவனை உபசரிபபதுபோ

ல் ஒருவன் கபடமானவெண்ணத்துடன் சர்வேசுவரனான நாராயணனைப்பூஜித்தால் அந்த பக்தியானது தாமஸத்தில் மத்திமம். மற்றொருவர் பகவானுக்கு பூஜைசெய்வதுகண்டு, பொறாமைகொண்டு, ஒருவன் ஹரிபூஜைசெய்தால் அந்த பக்தியானது தாமஸத்தில் உத்தமமாம். தனம் தான்னியம் முதலியவற்றைவிரும்பி மிகுந்த அன்போடு ஸ்ரீஹரிக்குப் பூஜைசெய்தால், அந்தபக்தி ராஜஸத்தில் அதமமானது. சகல லோகங்களிலும் தன் புகழ்விளங்கவேண்டுமென்று எண்ணி ஸ்ரீயப்பதியைப் பூஜித்தால் அந்தபக்தி ராஜஸத்தில் மத்திமமானது. சாலோக்கியமுதலிய போகங்களைக்கருதிப் பூஜித்தால் அது ராஜஸத்தில் உத்தமமானது. தான்செய்தபாபங்கள் தீரவேண்டுமென்று பூஜித்தால் அது ஸாத்துவீகத்தில் அதமம். பெரியோர்கள்முதலியவரை உபசரித்தால் எம்பெருமான் திருவுள்ளம் உகக்குமென்று எண்ணிச்செய்தால் அது ஸாத்துவீகத்தில் மத்திமமானது. எம்பெருமான் கட்டளைப்படி நடப்பதே கடமையென்று அடிமைத்தொழிலாக அவனுக்குப் பூஜைசெய்வது சிறந்ததாகையால் ஸாத்துவீகத்தில் உத்தமமாம். எம்பெருமானது பெருமையைக்கேட்டு தான் அவன் வடிவமென்று உறுதியுடன்களித்திருப்பது அதிலுஞ்சிறந்தது. நானே பரமாத்துமாவான விஷ்ணுவின் சரீரமாயிருப்பதால் இவ்வுலகமெல்லாம் என்னிலும் வேற்றுமையுள்ளதன்று என்று எப்போதும் காட்சிகொள்ளுபவனை யாவரினும் மிக்கச் சிறந்தவனென்பார்கள். இப்படிப் பத்துவிதமான பக்தியானது பிறவித்துன்பத்தை அறுக்கவல்லது. ஆகிலும் அவற்றில் ஸாத்துவீகமானபக்தியானது சகலமான விரும்பியபலன்களையு மளிக்கவல்லது. ஆதலால் கேளுமரசனே, பிறவித்துன்பந் தீரவேண்டுமென்று விருப்பமுள்ளவன் தனது வருணாசிரமங்களுக்கு விரோதமன்றியே சர்வேசுவரனான நாராயணனிடத்தில் பக்திசெய்யவேண்டும். அவனவனுக்குரிய வொழுக்கங்களைச் செய்வதெல்லாம் எம்பெருமானுக்கே பூஜைசெய்வதாகும். ஆதலால் அப்படிப்பட்ட ஒழுக்கங்களைவிட்டு பக்திசெய்பவன் பகவானிற் பரமாத்துமாசந்தோஷிப்பதில்லை. சகலவேதங்களிலும் ஒழுக்கமே தலைமையாக விதிக்கப்படுகின்றது, ஒழுக்கத்தால் தருமமுண்டாகும், தருமத்துக்கு உத்தேசியமும் பலனளிப்பவனும், என்றுந்தாழ்ச்சியின்றி விளங்குபவனும் எம்பெருமான் தான். ஆதலால் அவரவருக்குரிய நல்லொழுக்கத்தற்கு அனுகூலமாக ஸ்ரீபகவானிடத்தில் பக்திசெய்யவேண்டும். நல்லொழுக்கமற்றவர்கள் செய்த தருமமும் தேடியபொருளும் இம்மை மறுமை யின்பத்துக்கேதுவாகமாட்டா. ஓமன்வறுதிமாறு திருக்குமரசனே, நீர்கேட்ட விஷயங்களெல்லாமுரைத்தேன். ஆதலால் எப்போதும் தருமத்தில் நாட்டங்கொண்டு, இம்மைமறுமைகளின்பம்பெறுவீராக. சகலவிடர்களையுந் தீர்க்கவல்ல ஸ்ரீமந்நாராயணனை முயற்சியுடன் பூஜிப்பீராக. அந்தபகவானை பூஜித்துவருவீராகில் சகலவின்பங்களையும் பெறுவீர். ஓ அரசனே, சிவனையும் விஷ்ணுவையும் ஒருவஸ்துவென்றே உறுசெய்து பூஜிப்பீராக. வேற்றுமையாக எண்ணுதல் பத்துகோடிபிரமஹத்திபாவத்துக்கு நிகராகும். சிவனேவிஷ்ணு விஷ்ணுவே சிவன் அவர்களுக்கு வேற்றுமை செய்பவன் கோடி கோடி நரகங்களை

யடைவான். ஓ அரசனே, உமது பாட்டனமார் கபிலகோபத்தால் தற்கொலைப்பாவமடைந்து கோரமான நரகத்தில்வாசஞ்செய்கின்றனர். அவர்களையெல்லாம் கங்கைதீர்த்தத்தால் முத்திக்கரையேற்றுவீராக. கங்கையானது சகலபாபங்களையும் நீக்கவல்லது. மயிர், எலும்பு, உகிர், பல், நீறு இவற்றிலெதுவேனும் கங்கையிற் சேருமானால் அவை யாருடையனவோ அவர்களுக்குப் பரமபதமுண்டாகும். ஒருவன் மகாபாபங்களைச் செய்திருந்தாலும் அவனது எலும்பையாகிலும் சாம்பலையாகிலும் மனிதரெடுத்துக் கங்கையில் போடப்பெற்றால் அவ்விறந்தவன் பரமபதமேயடைவான். உண்மையான ரகசியம் சொல்லுகிறேன் கேளும், கங்கையானது பாபங்களையழிப்பது, அதன் தீர்த்தத்துளிகள் பட்டாலும் பரமபதங்கிடைக்கும். உமக்குச் சொல்லிய பாபங்களெல்லாம் கங்கைத்துளிகளால் நனையப்பெற்றவளவிலே தீர்ந்துபோகும்.

## நாரதர் வாக்கியம்.

ஓ முனீசுவரர்களே, இந்தவிதமாகத் தருமராஜனானவர் பகீரதராஜனுக்குச் சொல்லிவிட்டு மறைந்துபோனார். ராஜனும் உடனே தவம்புரியவேண்டுமென்று மனத்திலுறுதிகொண்டு தன்னிராச்சியமுழுதும் மந்திரிகள் வசத்தில் ஒப்புவித்துவிட்டு தவஞ்செய்வதற்காக இமயமலைக்குச் சென்றான்.

---

## ௧௫ - வது அத்தியாயம்.

---

# பகீரதர் கங்கையைக்கொண்டுவருதல்.

பகீரதர் ஹிமகிரியையடைந்து என்னசெய்தார்? எப்படி கங்கையைக்கொண்டுவந்தார்? இவைகளை யடியேங்கட்கு உரைக்கவேண்டுமென்று பிரார்த்தித்த சௌனகாதிகளை நோக்கிச் சூதபௌராணிகர் விளம்பலாயினார்.

## பிருகுமகரிஷி ஆசிரமவர்ணனை.

கேளுங்கள் சௌனகாதிகளே, பகீரதர் ஜடை மரவுரிமுதலியவைகளைத் தரித்துக்கொண்டு ஹிமகிரியைநோக்கிக் கோதாவரி தீரத்தையடைந்தார். மகாரண்ணியமான அந்தத்தீரத்தில் கிருஷ்ணசாரமென்னும் மான்கூட்டங்களாலும், யானைத்திரள்களாலும், உழன்றுகொண்டிருக்கும் வண்டுக்கூட்டங்களாலும், செவிக்கின்பமூட்டும் பக்ஷிக்கூட்டங்களாலும், அங்குமிங்கும் ஓடிக்கொண்டிருக்கும் பன்றிக்கூட்டங்களாலும் நிரம்பப்பட்டும், சௌரி மிருகங்களின் வாலினால் வீசப்பட்டும், தோகைகளைவிரித்து நர்த்தனம் செய்யும் மயில்களோடு கூடியும், முனிபுத்திரிகளால் அன்புடன் ஆதரிக்கப்பட்ட செடி கொடிகளையுடையதும், ஆச்சா, பனை, பச்சிலை, ஸ்ரீதாளம், இசில், அத்தி, மலையகத்தி, வன்னிமுதலிய மரங்களால் விளங்கியும், விகசித்த

ஜாஜி, யூதிகை, குருக்கத்தி, சண்பகம்முதலிய புஷ்பங்களால் நிறைந்தகொடிகளால் அலங்கரிக்கப்பட்டும், ரிஷிசமூகங்களால் வாசஞ்செய்யப்பட்டும், வேதசாஸ்திர கோஷங்களோடு கூடியும் இருக்கிற பிருகுமகரிஷியின் ஆசிரமத்தையடைந்து, சிலாக்கியமான வேதபாராயணம் செய்துகொண்டும், சிஷ்யவர்க்கங்களால் சூழப்பட்டும், சூரியனுக்கொப்பான தேஜஸ்ஸுடனும் விளங்கும் பிருகுமுனிவரை தரிசித்து முறைப்படி நமஸ்கரித்தார். அதிதியாய்வந்த ராஜாவை அன்புடன் ஆதரித்து க்ஷேமம் வினவலும் அவர் மிகுந்த வினயத்துடன் சொல்லுகின்றார்: சகலதருமங்களையு மறிந்து சகலசாஸ்திரங்களின் மெய்ப்பொருளுமுணர்ந்த ஓ மகரிஷியே சமுசாரசாகரத்தினின்று சேதனர்களைக்கரையேற்றும் பகவான் எதனால் சந்தோஷிக்கிறார்? எந்தகருமத்தால் பூஜிக்கப்படுகிறார்? இவைகளை அடியேனுக்கு ஆதரவுடன் நல்கவேண்டுமென்று பிரார்த்தித்தார். அப்போது ஓ அரசனே, நீபுண்ணியவான்களுக்குள் சிறந்தவனன்றோ? இல்லாவிடில் எவ்வாறு குலமுழுமையும் பாபத்தில் நின்று கரையேற்றத் தகுந்தவராவீர்? எவனாகிலும் தன்பிதுர்க்களை கங்கையின் தீர்த்தத்தால் நனைத்தல்முதலியவற்றால் நற்கதி அடைவிக்க விரும்புகின்றானோ அவனைமானிடரூபம் தரித்திருக்கும் விஷ்ணுவாகவே அறியவேண்டும். தேவதேவனான பகவான் எந்தகருமத்தால் மனிதர்களுக்குக் காமியபலனளிப்பரோ அதைச்சொல்லுகிறேன் கேளும். ஓ ராஜேந்திரா, சத்தியத்திலும் அஹிம்சையிலும் விருப்பமுடையவராய் எல்லாப்பிராணிகளுக்கும் ஹிதராய், பொய்யையும் துஷ்டர்களின் கூட்டுறவைத்துறந்தவராயிருந்து ஸாதுசகவாசத்தைச் செய்து இராப்பகலிலும் புண்ணியங்களையேசெய்து பொழுதுபோக்கி அனாதியான விஷ்ணுவை அஷ்டாக்ஷரத்தால் ஜபம் செய்யக்கடவீர். அவ்வாறுசெய்தால் பெருமையையும் க்ஷேமத்தையையும் அடைவீர் என்று சொன்ன பிருகுமுனிவரை நோக்கி பகீரதர் பிரசனம்பண்ணுகிறார்: சத்தியம் எத்தன்மையது? அஹிம்சையாவதென்ன? சர்வபிராணிகளிடத்தும் எப்படி ஹிதமாயிருக்கிறது? பொய் எவ்வகைத்து? துஷ்டர்களின் சுபாவமென்ன? ஸாதுக்களுடைய லக்ஷணம் என்ன? புண்ணியமாவதென்ன? ஸ்ரீவிஷ்ணுபகவான் எவ்வாறு தியானிக்கத்தக்கவர்? அவருக்கு பூஜைபுரிவது எங்ஙனம்? சாந்தியாவதென்ன? அஷ்டாக்ஷரமாவதென்ன? இவைகளை அடியேனுக்கு புத்திரவிசுவாசத்துடன் விளங்க உரைக்கவேண்டுமென்று பிரார்த்தித்த பகீரத மகாராஜனை நோக்கி, பிருகுமுனிவர் சொல்லலுற்றார்: ஓ பேரறிவாளரான வேந்தே, உம்முடையபுத்திமிகவும் சிலாக்கியமுடைத்து. நீர்கேட்டவிஷயங்கள் முழுமையும் நன்றாய்ச்சொல்லுகிறேன். உண்மைபுகல்வதே சத்தியமெனப்படும், அந்தசத்தியமும் தர்மிஷ்டர்களால் தருமவிரோதமன்றி சொல்லப்படவேண்டும். மேலும் இடம் காலமுதலிய இவைகளையறிந்து தனது தருமத்துக்கு விரோதமின்றி சொல்லப்படுகிறதை சத்தியமென்றே ஸாதுக்களுரைக்கிறார்கள். சர்வஜந்துக்களுக்கும் உபத்திரவம் உண்டாக்காமலிருக்கும் செய்கையே அஹிம்சையெனப்படும். அதுவே இஷ்டார்த்தத்தை கொடு

தத்பாலது தருமகாரியங்களுக்குச சகாயமாயிருததலும, அதருமகாரியங்களுக்கு விரோதமாயிருததலும லோகஹிதத்வ மென்று தாமசாஸதிரவல்லோா கூறுகினறனர். தருமாதருமஙகளின சுரூபமறியாது தன்னிஷடப்படி சொலலுதல அநேகஙனமைககுவிரோதமான பொய்யாகும. லோகவிரோதிகளும, மூட்ாகளும கெடுவழிசெலுததும மதியுடையோரும், தாஜ்ஞனரெனறு கூறபபடுகினறனா இவா சாவகருமஙகளுககும நீககபபடுபவராா. தருமாதருமஙகளின சுருபமறிநது வேதவிதிபிசகாது சாவலோகஹிதத்தில மனமுடையவா ஸாதுககளெனச சானறோா சாறறுகினறனா. எது விஷ்ணுவுககுப பிரீதியைச செயகினறதோ ஸாதுககளாலே சந்தோஷிககபபடுகிறதோ தனககும ஆனநதம விளைவிககிறதோ அதுவேபுணணியமெனபபடும. இவவுலகமெலலாம விஷ்ணுமயம, விஷ்ணுவே எலலாவுலகஙகளுககுஙகாரணம, நான விஷ்ணுவே, எனகிற எணணமானது விஷ்ணுஸமரணமெனபபடும. விஷ்ணுசாவதேவஸவருபமானவா, முறைபபடி அவரைப பூஜிபபது அவசியமசெயயவேணடியது எனறு மனதுககுணடாகிற பிரீதியானது பகதியெனறு சொலலபபடுகினறது. பரமபுருஷனான ஸ்ரீஹரி எலலாபபிராணிகளுககும அநதராதமாவாய எஙகும நிறைநதிருககிறாரென்று உணாநது வேறறுமையினறி எலலாபபிராணிகளிடததும நேசமுறறிருபபது ஹரிபூஜையெனபபடும. சததுரு மிததிராகளிடததில சமபுததியுடைமையும, இநதிரியஙகளைஜயிததலும, கிடைததவரையில சநதோஷிபபதும சாநதியாகும. ஓ அரசனே, கீழசசொலலியயாவும தவபபயனளிககவலலவை. சாவபாபஙகளையும சீககிரததில நாசமசெய்யும திறமையுடையது மகிமைபொருநதிய அஷடாக்ஷரமநதிரமானது, எலலாபாபஙகளையும ஹரிககததககது, சதுாவிதபுருஷாாததசாதனமானது. அததகைய மகிமைவாய்நத மநதிரததை உமககு உபதேசிககிறேன. விஷ்ணுவினபிரீதியானதும எலலோருககும இஷடபலனகளைககொடுபபதுமான நமோ நாராயணாயநம எனனும் மநதிரததைப பிரணவபூாவமாக உசசரிதது ஜபமசெயயவேணடும. சஙக சககரஙகளை இருககைகளில் தரிபபவரும, சாநதகுணமுடையவரும, ஜலசயனரும் சமுசாரரோகததைத தீாபபவரும், தமது இடதுமடியில ஸ்ரீமகாலக்ஷமி வீறறிருககபபெறறவரும, எலலோருககும அபயமளிபபவரும. பிரபுவும், கிரீடகுணடலாதி திவ்யாபரணஙகளைத தரிபபவரும, கௌஸ்துபரதனம விளஙகும திவ்யமாலையுடையவரும, ஸ்ரீவதசமெனனும திருமறுவுபொருநதிய திருமாாபையுடையவரும, பீதாமபரமெனனும திவயவஸதிரதாரியும, ஆதியநதமிலலாதவரும, சாவாபீஷடஙகளையம கொடுககிறவருமாகிய ஸவாமியைத தியானிககவேணடும. இவவைபவாதிசயஙகளையுடைய மகாவிஷ்ணுவாகிய பரமாதமனை தனனிடததிலிருககிறவராக எவனகாணகிறானோ அவனே எலலாக்ஷேமஙகளையுமடைவன. ஆகையால ஓ அரசனே, விசுவமியும அநத நாராயணனே அநதமநதிரததுககு வாசசியன, அநதமநதிரமே அந்தபகவானுககு வாசகம. மிகுநதமகிமைதஙகிய அநத மநதிரததுககும பகவானுககும வாசகவாசசிய சம்மநதமானது எனறுமுளளது. பயஙகரமான இந்த சமுசாரசாகர

மானது அநாதியாக வளர்ந்துவருகிறதைப்போல ஸ்ரீவிஷ்ணுவும் அநாதியாக ஜனங்களை அசசாகரத்தினின்றும் கரையேற்றுகிறார். அந்தவிஷ்ணுவே லோகங்களை விருத்திசெய்கிறவர், எல்லோருக்கும் அபீஷ்டங்களை யளிப்பவர், எல்லாரிடத்திலும் அந்தர்யாமியாயிருப்பவர், ஞானஸ்வரூபர், புராணபுருஷர், நீர்கேட்டயாவற்றையும் சொல்லிவிட்டேன். உமக்கு க்ஷேமமுண்டாகும், தவப்பேறு பெறுவீர், சுகமாய்ப் போகலாமென்று பிருகுமுனிவர் அனுக்கிரஹித்தார். இவ்வாறு அனுக்கிரஹம்பெற்ற பூபதி மிகுந்த சந்தோஷத்துடன் தபம் புரிவதற்காக வனம்சென்று மகாசித்தியையடைதற்குரிய மகிமையுடையதுமான கங்கைக்கரையில் நாகேசுவரமென்னும் மகாக்ஷேத்திரத்தில் ஒருவராலும் செய்தற்கரிய தபம்புரிந்தார்.

## பகீரத தவச்சிறப்பு.

எவ்வாறெனில் மூன்றுகாலமும் ஸ்நானஞ்செய்து காய்கிழங்குமுதலியவைகளையே ஆகாரமாகக்கொண்டு, அக்கினிகளை வளர்த்து நித்தியஹோமஞ் செய்துகொண்டு, எல்லாப்பிராணிகளுக்கும் நன்மையைச்செய்து, ஸ்ரீமந்நாராயணனையே கருத்துட்கொண்டு, பத்திரம் புஷ்பம் பழம் ஜலம் முதலியவற்றால் அந்த பிரமத்தையே பூஜித்துக்கொண்டிருந்தார். இவ்வாறு வெகுகாலங் கழித்தும் சலியாத தைரியத்துடன் அந்தப்பகவானையே விடாமல் மனமுடையோராய் மரத்திலிருந்து உதிரும் சருகுகளை ஆகாரமாய்க்கொண்டிருந்தார். இவ்விதம் சின்னாளைச் சென்றபின்னர் பிராணாயாமஞ்செய்துகொண்டு அறுபதினாயிரம்வருஷம் தவம்புரிந்தார். இவ்விதம் தவம்பூண்டிருந்த அந்தராஜாவினுடைய நாசிகைவழியாய் பயங்கரமான புகையுண்டாயிற்று. அந்தப்புகையைப்பார்த்து தேவர்கள் பீதியடைந்து, அதிகாரக்குறைவு நேரிடுமோவென்ற சங்கையினால் நடுக்கமுற்று, உடனே திருப்பாற்கடலின் உத்தரதீரத்தை யடைந்து, தேவதேவனும் ஈசுவரனும் சமுசாரஸாகரதாரனுமான ஸ்ரீமகாவிஷ்ணுவைத் துதிக்கலாயினர்.

## பகவத் ஸ்தோத்திரம்.

உலகங்களுக்கு ஒப்பற்ற ரக்ஷகனும், தன்னை ஸ்மரிக்கிறவர்களது உபத்திரவத்தைப் போக்குகிறவனும், பரமேசுவரனும், ஸ்வபாவத்திலேயே சுத்தனும், பரிபூரணமான ஷட்குணங்களையுடையவனுமான பகவானை நாங்கள் நமஸ்கரிக்கிறோம். அவரது சுவரூபத்தையறிந்த பெரியோர்கள் அந்தப்பகவானை அறிவில் நிறைந்தவராயக் கூறுவாரன்றோ? தார்மிகஜனங்களால் எப்போதும் தியானிக்கப்படுபவனும், பரமார்த்தனும், தன்னிச்சைக்கிசைந்த சரீரங்களையடைந்து தேவகாரியங்களைச் செய்பவனும், ஜகன்மூர்த்தியும், ஜகத்ரக்ஷகனும், புருஷோத்தமனுமாய் விளங்குகின்ற தேவரீரைப் பிரணாமஞ்செய்கின்றோம். முரனென்னுமசுரனுக்குச் சத்துருவாகிய எந்தப்பகவானுடைய திருநாமங்களை ஸ்மரித்தால் எல்லாப்பாபங்களும் நாசமடைகின்றனவோ அந்தப்புராணபுருஷனை பகவானை அறம்பொருளின்பம்வீடென்னும் நான்கு புரு

ஷார்த்தங்களும் சித்திக்கவேண்டிப் பிரார்த்திக்கின்றோம். சூரியன் முதலிய வர்கள் எந்தப் பகவானுடைய தேஜஸ்ஸினால் விளங்குகிறார்களோ சமுத்திரம் நதிநதங்கள் எந்தப் பகவானுடைய ஆஞ்ஞையைக் கடப்பதில்லையோ அந்த காலரூபியும் தேவதேவனும் தர்மம் முதலிய புருஷார்த்தரூபியுமான பகவானை தியானிக்கின்றோம். எந்த விஷ்ணுவினுடைய ஆஞ்ஞையால் பத்மசம்பவனான பிரமன் உலகசிருஷ்டி செய்கின்றானோ, எவனால் வேதங்களும் பிராமணர்களும் உலகத்தைப் பரிசுத்தமாக்குகின்றார்களோ, தேவர்களுக்கெல்லாம் முதலவனாய் நற்குணங்களுக்கோரில்லமாயிருக்கின்ற அச்சுதவிஷ்ணுவை பிரணாமம்செய்கின்றோம். எல்லோருக்கும் சிரேஷ்டனும், எல்லாராலும் பூஜிக்கத்தக்கவனும், மதுகைடபர்களை சம்ஹரித்தவனும், தேவாசுரர்களால் பூசிக்கப்பட்ட பாதபங்கஜத்தையுடையவனும், ஸாதுக்களான பக்தர்களின் இஷ்டசித்திக்குக் காரணபூதனும், ஞானமொன்றாலேயே அறியக்கூடியவனுமான ஸ்ரீவிஷ்ணுவை நமஸ்கரிக்கின்றோம். அனந்தனும், ஈசுவரனும், பீதாம்பரதாரியும், பிரமன்முதலான தேவர்களால் சேவிக்கப்படுபவனும், யாகத்தில் பிரியமுள்ளவனும், யாகத்திலுண்டாகும் ஹவிசுக்களைப் புசிப்பவனும், சுத்தஸ்வபாவமுடையவனும், சர்வேசுவரனும், சர்வப்பிரியனுமான நாராயணனை உபாசிக்கின்றோம். சத்துசித்தானந்தமான சொரூபத்தை யுடையவனும், பஞ்ஞானிகளாலறியப்படாதவனும், சூக்ஷ்மத்தியானதரிசனும், கருமசம்பந்தத்தால் ஜன்மமில்லாதவனும், தேவதேவனும், பிரகிருதிரூபமில்லாதவனுமான ஸ்வாமியை நமஸ்காரம் செய்கின்றோமென்று இவ்வாறு ஸ்தோத்திரம் செய்யும் இந்திரன்முதலான தேவர்களைக் கடாக்ஷித்து ராஜரிஷியான பகீரதனுடைய சரித்திரத்தை அறிவித்து, தேவர்களுக்குச் சமாதானஞ்சொல்லி அபயப்பிரதானமீந்து, பகீரதமகாராஜா தபம்புரிந்துகொண்டிருக்க ஸ்தானத்தையடைந்து அவருக்குப் பிரத்தியக்ஷமாயினார். சங்கசக்கரங்களை இருக்கைகளில் தரிப்பவரும் சத்துசித்தானந்தமயமான வடிவுள்ளவரும், ஜகத்குருவும், திசையெங்கும் ஒளிவீசும் திருமேனியுடையவரும், காசாம்பூப்போன்ற தேககாந்தியுடையவரும், அப்போதலர்ந்த தாமரைப்புஷ்பங்கள்போன்ற திருக்கண்களையுடையவரும், ஒளிவீசும் கிரீடகடகாதி திவ்யாபரணங்களால் அலங்கிருதரும், ஸ்ரீவத்ஸகௌஸ்துப பீதாம்பரதாரியும், பிரபுவும், நீண்ட திருக்கைகளையுடையவரும், வனமாலையணிந்த உருவினரும், தேவர்களால் அர்ச்சிக்கப்படும் பாதகமலங்களையுடையவருமான பகவானை தரிசித்தவுடனே தண்டம்போல பூமியில் விழுந்து, சாஷ்டாங்கமாக நமஸ்காரம்செய்து, சிரில்கைகள்பார்ந்து, மயிர்சிலிர்த்து, நாத்தழுதழுத்து, திரும்பத்திரும்ப கிருஷ்ணா, கிருஷ்ணா, கிருஷ்ணா, கிருஷ்ணாவென்று சொன்னார். அப்போது தயாளுவாய், சர்வப்பிராணிவர்க்கங்களிலும் உள்வசிப்பவராய், ஜகத்ரக்ஷகராய், சர்வஜந்துக்களையும் சிருஷ்டிப்பவராய் விளங்கும் பகவான் ராஜாவை விளித்துத் திருவாய்மலர்ந்தருளினார். ஓ மகாபாக்கியசாலியான பகீரதமகாராஜாவே, உம்முடைய அபீஷ்டம் நிறைவேறும். உம்முடைய பூர்வபிதாமகர்களாகிய சாகரர்கள் எனதுலோகத்தை யடைவார்கள். எனது சரிபேதமான

சிவபெருமானை உமதுசக்திக்குத்தக்கந்த ஸ்தோத்திரங்களால் பூஜைசெய்யும், உமக்கு எல்லாக்ஷேமங்களையும் கொடுப்பார், சந்தேகமில்லை. ஆகையால் ஸ்தோத்திரயோக்கியரும் சுகமளிப்பவருமான அந்த சிவபெருமானை ஸ்தோத்திரஞ்செய்யும் ஆதிடந்தமில்லாதவராய் எல்லாஇஷ்டத்தையுங் கொடுப்பவராயிருக்கும் அந்ததேவர் உமக்கு க்ஷேமத்தைக்கொடுப்பார் இவ்வாறு திருவாய்மலர்ந்தருளின ஆசரீதபாலனனபகவான் அந்தர்த்தானமாயினர் உடனே பகீரதர் எழுந்து இது சுவப்பனமோ? இல்லாவிடின் உண்மைதானோ? யாதுபுரிவேனென்று திகைத்து வியாகுலத்துடனிருந்தார் அப்போது ஆகாயத்தில் உயர்ந்த சுரத்துடன்கூடிய ஒர்வாக்கானது இதை உண்மையென்றறி, யோசிக்கவேண்டாமென்று கலங்கினமனமுடைய அந்தராஜாவினுடைய செவியில் பட்டது அப்போது ராஜாவும் மகத்தான குதூகலத்தையடைந்து சங்கரபகவானை ஸ்துதிசெய்வாராயினார்.

## சிவஸ்தோத்திரம்.

ஜகந்நாதரும், பக்தருடையபீடையை நிவர்த்திப்பவரும், பிரத்தியக்ஷமுதலிய பிரமாணங்களுக்கு எட்டாதவரும், பிரணவஸ்வரூபரும் சராசரமென்பதனும், அயோநிஜரும், சிருஷ்டியாதிகளுக்குக் காரணரும், ஜிதேந்திரியரும், கேவிரூபாக்ஷரும், அக்கினிஜொலிக்கின்ற நேத்திரத்தையுடையவரும், அகேசுவரூபத்தையு யுடையவருமான சிவபெருமானை நமஸ்காரம்செய்கின்றேன ஆன்மத்தியாந்தரகிதராவும், வேறுபாடில்லாதவராகவும், உற்பத்திக்ஷயமில்லவராகவும் எந்தபெருமானை யோகிகள் கூறுகிறாகளோ அந்தசங்கரனை பஜிக்கிறேன். உலகங்களுக்கு ரக்ஷகரும், ஆசையையும் திருப்தியையும் உண்டுபண்ணுகிறவரும, கறுத்த கண்டத்தையுடையவரும், பிரமத்கணங்களுக்கு அல்லது பிராணிகளுக்கு பதியுமான சுவாமிக்கு வந்தனமபுரிகின்றேன ஞானஸ்வரூபியும, லோகசாக்ஷியும, பாபஹரரும, நல்லமனதையுடையவரும, ஜடாபூஷிதருமாய் விளங்கும ருத்திரதேவனுக்கு நமஸ்காரமசெய்கின்றேன்; பினகபாணியும், சூலாயுததாரியும, சாவாந்தாடாமியும, மணிவிளங்கும அஸ்தமுடையவரும, ஐந்துமுகத்தையும பத்து திருக்கைகளை யுடையவருமான, உமக்கு நமஸ்காரம கபாலம பாசம இருப்புலக்கை இவைகளை திருக்கையிலுடையவரும சர்வபாபங்களைப போக்குகிறவரில அதிபருமான சுவாமிக்கு வந்தனம. பிரமத்கணங்களுக்கு அதிதேவரும், ஜீவாத்துமாக்களுக்கு ஈசுவரனும, ஹிரணயத்தைக் காபபத்திலுடையவரும, பிரமாணடங்களுக்கு அதிபதியாயுமிருக்கிற சுவாமிக்கு நமஸ்காரஞ்செய்கின்றேன தங்கமயமான வீர்யத்தையுடையவரும, அனேகரூபம தரிப்பவரும, தியானத்தினால பிரத்தியக்ஷமாகும ரூபத்தையுடையவரும, தியானத்துக்கு சாக்ஷியும, தியானநிலையிலேயே இருக்கிறவருமான அஹிபிரதகனென்று சொல்லப்படாநின்ற சுவாமிக்கு நமஸ்காரம்புரிகின்றேன ஜங்கமம ஸ்தாவரம இவைகளால விளங்கிக்கொண்டிருக்கும் இந்த ஜகத்தெல்லாம மூலபிரகிருதிபுருஷன இவைகளுடன் மேகத்திலிருக்கும் மழைபோல் எந்தசுவாமியால உண்டுபண்ணப

பட்டதோ அந்தச்சுவாமிக்கு பிரணாமம் செய்கின்றேன். சுயம்பிரகாசரும், சிலாக்கியஸ்வரூபியும், ஸ்ரேஷ்டமான தேஜோரூபியும், புராணபுருஷரும், ஜகத்தை யுண்டுபண்ணுகிறவரும், மனிதர்களுக்குக் கண்ணளிப்பவருமான அந்தச்சுவாமிக்கு வந்தனம்புரிகின்றேன். பார்வதிமனோகரனும், விரூபாக்ஷனும், நீலகண்டனும், எப்போதும் மங்களத்தைக்கொடுப்பவனும், காலகாலனும், நிரம்பின பாக்கியசாலியுமான சுவாமியே எனக்கு என்ன க்ஷேமமுண்டோ அதைக்கொடுக்கவேண்டும். கவாசதமென்னும் ஜடையைத்தரித்தவரும், கறுத்த கழுத்தையுடையவரும், அக்கினிமயமான நேத்திரத்தையுடையவருமான சிவன் எனக்கு கிருபைபுரிவாராக. எந்தச்சுவாமியினிடத்திலிருந்து சமுத்திரங்களும் பர்வதங்களும், கந்தர்வர் யக்ஷர் தேவர்கள் சித்தர்கள் இவர்களது கூட்டங்களும் உண்டாயினவோ, எவனுள்ளிருந்து பிராணிகள் தத்தம்வியாபாரத்தைச் செய்கின்றனவோ அந்ததேவன் நமக்கு க்ஷேமத்தைக் கொடுக்கவேண்டும். சுத்த சுபாவமுடையவராகவும் சர்வாந்தராத்மாவாகவும் சொல்லப்படுகிற எந்தச்சுவாமியை யோகிகள் தியானஞ்செய்கின்றார்களோ அந்தச்சுதந்திரனும் ஸ்ரேஷ்டனும் நற்குணநிதியுமான சுவாமியை அடிக்கடி நமஸ்கரிக்கிறேனென்று ஸ்துதிசெய்தார்.

இத்தன்மையாய் பகீரதமகாராஜாவால் செய்யப்பட்ட சிவஸ்தோத்திரத்தை மூன்றுசந்தியிலும் படனஞ்செய்கிறவன் சர்வ இஷ்டங்களையும் பெறுகிறான்.

## தபசித்தி.

இந்தப்பிரகாரம் ஸ்தோத்திரஞ்செய்யப்பட்ட தேவசிரேஷ்டனான சங்கரபகவான் ராஜா தவம்புரிந்துகொண்டிருந்த ஸ்தானத்தையடைந்து அவருக்கு பிரத்தியக்ஷமாயினார். பஞ்சமுகமும், தசஹஸ்தங்களும், அர்த்தசந்திர சிரோபூஷணமும், திரிநேத்திரமும், பருத்தசரீரமும், ஸர்ப்பாபரணமும், விசாலமானமார்பும், ஒவ்வோர்காலத்தில் [illegible] ஜங்களும், மகாதேஜசும் உடையவரும், யானையுருவமுள்ள அசுரனை வதம்செய்து அதின்தோலை வஸ்திரமாகத்தரித்தவரும் தேவர்களால் பூஜிக்கப்பட்ட அரவிந்தமலர்போன்ற பதங்களையுடையவருமான தேவனைப்பார்த்து வாய் தழுதழுத்து தண்டாகாரமாய் மண்மிசைவீழ்ந்து மகாதேவ மகாதேவவென்று நமஸ்கரித்தார். அப்போது சந்திரசேகரப்பெருமான் ராஜாவினுடைய பக்தியின்திறத்தை யறிந்து, அவரைவிளித்து, உமது தபஸால் நான் அதிக சந்தோஷமடைந்தேன். உமக்கு வேண்டியவரங்களைக்கேளும் தருவேன் நீர் ஒப்பற்றசுகங்களை அனுபவித்து முடிவில் பரமபதமடைவீர், என்று திருவாய்மலர்ந்தருளினார். அப்போது ராஜா ஓ மகேசனே என்பாலருளுள்ளதாகில் கங்கையைத்தந்தருளி என் மூதாதைகளுக்கு நற்கதியளிக்கவேண்டும் என்று பிரார்த்தித்தார். அப்போது சங்கரபகவான் தயாரசம்பெருகி ஓ வேந்தே, உமக்குக் கங்கையைக்கொடுத்தேன் உமது முன்னோர்களுக்கும் நற்கதிதந்தேன் உமக்கு மோக்ஷங்கொடுப்பேன் என்றுசொல்லி அந்தர்த்தானமாயினர். அச்சிவபெருமானுடைய கிரீட

த்திலுறைந்து ஜகத்தை பரிசுத்தஞ்செய்யும் கங்காதேவியானவள் உடனே ஜகங்களை பரிசுத்தஞ்செய்துகொண்டு பகீரதனைப் பின்றொடர்ந்தாள். அந்நாள் முதல் அந்த கங்காதேவிக்கு பாகீரதியென்று பிரசித்தமாக ஒருபெயர் வழங்குகிறது. பகீரதமகாராஜனைப் பின்றொடர்ந்த கங்கையானவள் சாகரர் அறுபதினாயிரவரும் தகிக்கப்பட்டிருந்த ஸ்தானத்தில் பிரவகித்தாள். உடனே நரகவாசஞ்செய்துகொண்டிருந்த சகரபுத்திரர்களனைவரும் பாபத்தினின்று விடுபட்டவர்களாய்விட்டார்கள். முன்னம் கிங்கரர்களைக்கொண்டு தண்டித்த யமதருமராஜன் பாபவிமுக்தர்களான அச்சாகரரைப்பார்த்து மிகுந்த வணக்கத்துடன் நமஸ்கரித்து, விதிப்படி பூஜித்து, சொல்லுவானாயினன்: ஓ ராஜபுத்திரர்களே, நீங்கள் இதுகாலபரியந்தம் உங்களுடைய தீவினையால் மகாபயங்கரமான நரகபோகங்களை அனுபவித்தீர்கள். உங்களுடைய வம்சத்திலே மகாதன்னியனான பகீரதனென்னுமோரரசன் உண்டானான். அவனால் நீங்கள் நரகத்தினின்று கரையேற்றப்பட்டீர்கள். இப்போது சர்வாபீஷ்டங்களையும் ஸாதிக்கும் விமானங்களிலேறி சர்வோத்கிருஷ்டமான ஸ்ரீவிஷ்ணுலோகத்தை யடையுங்கள் என்று சொல்ல, அந்த சகரபுத்திரர் நூறுகோடிவம்சத்தோடுகூடினவராய் ஸ்ரீவிஷ்ணுலோகத்தை யடைந்தார்கள். ஸ்ரீவிஷ்ணுபகவானுடைய பாதத்திலிருந்து உண்டான கங்கையானவள் இப்படிப்பட்ட பிரபாவமுடையவள்; எல்லாவுலகங்களிலும் மகாபாதகங்களையும் விலக்குகிறவளென்று பிரசித்தையானவள். மகாபுண்ணியத்தைக் கொடுப்பதும், ஆயுளை விருத்திபண்ணுவதும், பஞ்சமகாபாதகங்களையும் நாசஞ்செய்ய வல்லதுமான இக்கதையைப் படிப்பவனும் கேட்பவனும் கங்காஸ்நானபலத்தை யடைவான். இந்த பரிசுத்தமான சரித்திரத்தை பகவத்சந்நிதியில் படிப்பவன் பதினான்கு இந்திரபட்டபரியந்தம் விஷ்ணுசாலோக்கியத்தை யடைவான்.

இவ்விதமாக பூர்வபாகத்தை நாரதர்க்கவான ஸநத்குமாரயோகிக்கு திருவாய்மலர்ந்தருளியவண்ணம் நைமிசாரண்ணியவாஸிகளுக்கு சூதமுனீந்திரர் உரைத்தருளினார்.

முற்றிற்று.

---

